


# அ. மாதவையா

சு. வேங்கடராமன்



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோ தனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இலக்கியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

(நாகார்ஜுன மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.
பட உதவி : நேஷனல் மியூசியம். புது தில்லி)

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# அ. மாதவையா

சு. வேங்கடராமன்



சாகித்திய அக்காதெமி

A. Madhavaiah - Monograph in Tamil by S. Venkataraman,
Sahitya Akademi, New Delhi (1999), Rs.25.



முதல் வெளியீடு : 1999
ISBN - 81-260-0628-5

**சாகித்திய அக்காதெமி**

தலைமை அலுவலகம் :
ரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை,
புது தில்லி 110 001.

**விற்பனை**

'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 001.

109, ஜே. ஸி. சாலை, பெங்களூர் 560 002.

'குணா பில்டிங்' 304-305, அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை 600 018.

ஜீவன் தாரா பில்டிங், 4வது மாடி,
டைமண்ட்ஹார்பர் சாலை, கல்கத்தா 700 053.

172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,
தாதர், பம்பாய் 400 014.

**விலை : 25.**

கணிப்பொறி அச்சு : ஸ்டேன்பிக் லேசர், சென்னை- 34. போன் : 8221958.
அச்சிட்டோர் : ஜி. பி. கிராபிக்ஸ், சென்னை - 21.

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழின் தொடக்க கால நாவல், சிறுகதை ஆசிரியர்களுள் முன்னோடியாகவும் பல்வேறு துறைகளில் ஆக்கபூர்வமான பணிகள் செய்த சாதனையாளராகவும் விளங்கும் அமரர் அ.மாதவையா அவர்களின் வாழ்வையும் படைப்புக்களையும் இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசையில் அறிமுகஞ் செய்வதாக இந்த நூல் அமைகிறது. புது தில்லியிலுள்ள சாகித்திய அக்காதெமி நிறுவனம் இந்த வாய்ப்பை எனக்கு நல்கியது. சாகித்திய அக்காதெமி நிறுவனத்திற்கும் அதன் தமிழ் ஆலோசனை குழுவினர்களுக்கும் என் நன்றி உரியது.

அ. மாதவையாவின் நூல்கள் பலவற்றை அன்புடன் எனக்குத் தந்துதவிய பேராசிரியர் **டாக்டர் ந.சுப்பிரமணியன்** (உடுமலைப் பேட்டை) அவர்களுக்கு என் நன்றி. அ. மாதவையா பற்றி ஏராளமான செய்திகள் தந்து, மைசூரிலுள்ள அ. மாதவையாவின் மகள் திருமதி முத்துலட்சுமி (வயது 92 (திருமதி முக்தா வெங்கடேஷ், திரு. அ.மாதவன் (இந்திய வெளிநாட்டுப்பணி, I.F.S.) ஆகியோர் முகவரிகளைத் தந்துதவிய திருமதி **ராஜம் கிருஷ்ணன்** (எழுத்தாளர், சென்னை) அவர்களுக்கு என் நன்றி. தம்முடைய தாத்தா அ. மாதவையா பற்றிய செய்திகள் தந்த திரு.**அ.மாதவன்** (அ.மாதவையாவின் மகன் அமரர் நீதிபதி மா.அனந்த நாராயணனின் மகன்) அவர்களுக்கும் இந்தத் தள்ளாத வயதிலும் தம் தந்தையார் அ.மாதவையா குறித்த ஏராளமான செய்திகளை ஆங்கிலத்தில் தம் கைப்பட பலபக்கங்கள் எழுதி அனுப்பி அன்புடன் உதவிய திருமதி. முத்துலட்சுமி அவர்களுக்கும் என்றும் நன்றி உரியது. **திருமதி முத்துலட்சுமி** அம்மாளுக்கு நன்றி கூறுவதில்தான் இந்த நூல் முழுமை பெறுகிறது.

தம்முடைய குடும்ப உறுப்பினர்களுக்காக, அ.மாதவையா பற்றிய விவரங்களை உறுதிப்படுத்திய ஆவணமாக உருவாக்கி, தட்டச்சுப் பிரதியாக வைத்திருந்தார் அ.மாதவையாவின் மகன், புகழ்பெற்ற இந்திய வனவிலங்குகள் புகைப்படக் கலைஞர் திரு **மா.கிருஷ்ணன்**. அதைப் புகைப்படப் பிரதி எடுத்து எனக்குத் தந்துதவியவர்கள் திருமதி **இந்துமதி கிருஷ்ணன்,** (கிருஷ்ணனின் மனைவி) அவர்களும் திருமதி **டாக்டர் மீனாட்சி ஹரிகிருஷ்ணன்** (மா. கிருஷ்ணனின் மருமகள்) அவர்களும் ஆவர். அவர்களுக்கு என் மனப்பூர்வமான நன்றி.

அ.மாதவையாவின் அரிய நூல்கள் பலவற்றை அன்புடன் தந்துதவியும் பல செய்திகளை நேரில் உரையாடியும் உதவிய **டாக்டர் மீனாட்சி** (அ.மாதவையாவின் மூத்த மகள் மீனாம்பாளின் மகள்) அவர்களுக்கு என் மனப்பூர்வமான நன்றி என்றும் உரியது.

ஆங்கிலத்தில் அ.மாதவையா படைத்த கிளாரிந்தா, சத்தியானந்தன் நாவல்களை அற்புதமாகத் தமிழாக்கம் செய்து தந்துள்ள திருமதி **சரோஜினி பாக்கியமுத்து** (பாளையங்கோட்டை) அவர்களும் **டாக்டர் பிரேமா நந்தகுமார்** (திருச்சி) அவர்களும் சில செய்திகள் தந்துதவினர். அவர்களுக்கு என் நன்றி. தமிழ்ப் பல்கலைக்கழக நூலகத்தில் உள்ள அ.மாதவையாவின் சில நூல்களைப் புகைப்பட நகல் எடுத்து உதவிய பேராசிரியர் **டாக்டர் கு.வெ.பாலசுப்பிரமணியன்** (தஞ்சாவூர்), ஓய்வு பெற்ற பேராசிரியர் **டாக்டர் பழனி அரங்கசாமி** ஆகியோருக்கு என் நன்றி உரியது.

அ.மாதவையா நாவல்களில் ஆய்வு செய்த முன்னோடி ஆய்வாளரான **டாக்டர் இராஜ் கௌதமன்** (புதுச்சேரி) அவர்கள் தம்முடைய ஆய்வின் ஒரு பகுதியாக நூலாக வெளிவந்த அ.மாதவையா நூலை அன்புடன் அனுப்பினார். அவருக்கு என் நன்றி. அ.மாதவையாவின் நாவல்கள் குறித்த இராஜ் கௌதமனின் ஆய்வேட்டை (நூலாக வெளிவராத, தட்டச்சுப்படியில் உள்ளது). எனக்குப் படிப்பதற்குத் தந்துதவிய, அவ்வாய்விற்கு நெறியாளராக இருந்த பேராசிரியை **டாக்டர். ர.விசயலட்சுமி** (உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை) அவர்களுக்கு என் மனப்பூர்வமான நன்றி. 'தமிழர் நேசன்' இதழ்கள் தொடர்பான செய்திகள் தந்துதவிய ஆய்வாளர் **மு.வளர்மதி** (உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை) அவர்களுக்கு என் நன்றி.

பஞ்சாமிர்தம் இதழ்கள் முழுவதையும் படித்துக் குறிப்பெடுக்கவும், புகைப்பட நகல் எடுக்கவும் அன்புடன் அனுமதி தந்த சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக மேலாளரும் மறைமலையடிகள் நூல் நிலையப் புரவலருமான திரு.**இரா.முத்துக்குமாரசாமி** அவர்களுக்கும் நூலகருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி என்றும் உரியது. பஞ்சாமிர்தம் இதழின் சில பகுதிகள் பற்றிய குறிப்புக்களைத் தந்துதவிய பேராசிரியர் **டாக்டர் மெ.இராணி ஜான்சிபாய்** (மதுரை) அவர்களுக்கு என் நன்றி.

சென்னை, கிறித்தவக் கல்லூரி மலரில், மார்ச் 1892 முதல் மார்ச் 1910 முடிய அ.மாதவையா எழுதிய' ஆங்கிலக் கவிதைகள், கட்டுரைகள் அனைத்தையும் புகைப்பட நகல் எடுத்து அனுப்பித் தந்த நண்பர் **டாக்டர் கே.கே. சுந்தர சோபிதராஜ்** (தமிழ்ப் பேராசிரியர், கிறித்தவக் கல்லூரி) அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி. 'தமிழர் நேசன்' இதழ் தொகுதியை அன்புடன் எனக்கு உதவிய நண்பர் **சு.இரவிக்குமார்** (மதுரை) அவர்களுக்கு என் நன்றி. தம்முடைய கட்டுரையையும் வேறு சில நூல்களையும் தந்துதவிய நண்பர் **ஆ.சிவசுப்பிரமணியன்** (தமிழ்ப் பேராசிரியர், வ.உ.சி. கல்லூரி, தூத்துக்குடி) அவர்களுக்கு என் நன்றி உரியது.

மதுரை
15.05.1997

**சு.வேங்கடராமன்**

## இயல் –1

# வாழ்க்கை

ஐரோப்பியர்கள் இந்தியாவை ஆண்டபோது, இந்தியச் சமுதாயத்தில் பண்பாட்டு மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன. ஆங்கிலக் கல்வியின் பயனாகவும், பண்பாட்டு எழுச்சியின் காரணமாகவும் இந்தியர்கள் தத்தம் தாய்மொழிகளில் புதிய இலக்கிய வகைகளை உருவாக்கி வளஞ்சேர்க்கப் பாடுப்பட்டனர். ஆங்கில மொழியில் உரைநடையில் பெருவழக்குப் பெற்றிருந்த நாவல், சிறுகதை போன்ற புத்திலக்கிய வகைகளைப் படைத்துத் தாய்மொழியை நவீனப்படுத்தினர். அவ்வாறு நாவல், சிறுகதை என்னும் இலக்கிய வகைகளால் தமிழை வளப்படுத்திய முன்னோடிகளுள் அ.மாதவையா ஒருவர். வேதநாயகம் பிள்ளையின் பிரதாப முதலியார் சரித்திரம், பி.ஆர்.இராஜமையரின் கமலாம்பாள் சரித்திரம் ஆகியவற்றை அடுத்து அ.மாதவையாவின் பத்மாவதி சரித்திரம் வருகிறது. வேத நாயகரின் நாவல் அற்புத நவிற்சிப் பண்புமிக்க (Romance) நாவலாகவும் இராஜமையரின் நாவல் நடப்பியல் நெறியில் தொடங்கிப் பின்பாதி கனவுபோல, வேதாந்தம் பேசுவதாகவும் இயற்கையிறந்த நிகழ்ச்சிப் போக்குடனும் அமைந்து உள்ளது. அ.மாதவையாவிடமிருந்துதான் தமிழ் நாவல், சமூக விமர்சன நெறியையும் நடப்பியல் பண்பையும் கொண்டு வெளிப்படுகிறது. படித்துப் பொழுது போக்கி மகிழ்ச்சியூட்டுவதையே நோக்கமாகக் கொண்டு நாவல் படைப்போரிடமிருந்து மாறுபட்டு, மகிழ்வூட்டலுடன் அறிவூட்டலையும், முதன்மை நோக்கமாகக் கொண்டு அ.மாதவையா நாவல் படைத்து, அந்த நிலையிலும் சாதனை செய்த முன்னோடியாகத் திகழ்கிறார். அந்நாளைய சமூக வாழ்க்கையில் காணப்பட்ட பல்வேறு சீர்கேடுகளை நீக்கும் நோக்கங்களுடன் மறுமலர்ச்சியாளராக அவர் விளங்கினார். எழுத்துக்களில் வெளிப்படுத்திய சமுதாயச் சீர்திருத்தப் போக்குகளைத் தம் சொந்த வாழ்விலும் கடைப்பிடித்த பண்பாளர் அவர். நாட்டு அரசியல் விடுதலை வேண்டும் என்று தேசிய உணர்வு கொண்டவராயினும் சமுதாயத் தளை-களிலிருந்து விடுதலை பெறுவதை முதன்மையானதாக அ.மாதவயா வலியுறுத்தினார். அவர் படைத்த படைப்புகள் அனைத்திலும் சமூக விடுதலை என்னும் கருத்தாக்கமே முதன்மையாக இருக்கும். அவர்

தமிழிலும் ஆங்கிலத்திலும் பல படைப்புக்களைத் தந்துள்ளார். நாவல், சிறுகதை, நாடகம், கவிதை, இசைப்பாட்டு, சிறுவர்க்கான உரைநடை நூல்கள், மொழிபெயர்ப்பு நாடகம், வரலாற்று நூல்கள், சிறுவர் கதை, செய்யுள் நாடகம், கட்டுரை ஆகிய வகைகளைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் படைத்துள்ளார். வீட்டில் பேசும்மொழியாகத் தெலுங்கு இருந்தபோதிலும் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டு அதனை அவர் வளப்படுத்தினார்; ஆங்கிலத்தில் நல்ல புலமை பெற்றவர். ஆகவே, ஆங்கிலத்தில் இலக்கிய வகைளைப் படைத்து, இந்திய ஆங்கில எழுத்தாளராக விளங்கினார். பல்வேறு பத்திரிகைகளில் எழுதியதுடன், தமிழின் வளத்திற்காகவே தமிழர்நேசன், பஞ்சாமிர்தம் ஆகிய இதழ்களை அவர் நடத்தினார். தமிழ்ச் சமுதாய முன்னேற்றம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்து காட்டியவர் அ.மாதவையா.

**பிறப்பு**

அ.மாதவையாவின் மூதாதையர்கள் தெலுங்கு பேசும் ஆந்திர நாட்டிலிருந்து குடிபெயர்ந்து தமிழகம் வந்து திருநெல்வேலி மாவட்டத்தில் தாமிரபரணி நதிக்கரையில் ஸ்ரீவைகுண்டம் தாலுகாவில் பெருங்குளம் என்னும் ஊரில் குடியேறி வாழ்ந்து வந்தனர். அவர்கள் வீட்டில் பேசும்மொழியாகத் தெலுங்கு இருந்தது. அந்தணர் இனம் அவர்களின் இனம். தம்முடைய சொந்த ஊரான பெருங்குளம் குறித்து அ.மாதவையா பிற்காலத்தில் ஆங்கிலத்தில் கவிதை ஒன்றை எழுதியதுடன், பத்மாவதி சரித்திரம் நாவலில் ஆரம்பப் பகுதியில் கதை நிகழும் இடமாகச் சிறுகுளம் என்னும் பெயரில் வருணித்தும் உள்ளார். அந்த ஊரில் உள்ள யக்ஞ நாராயணப் பெருமாள் அவர்களின் குடும்பத்தாருக்குக் குலதெய்வம் ஆகும். இந்தப் பெருமாள் கோயில் தவிர அவ்வூரில் சிவன் கோயில் ஒன்றும் உண்டு. அந்த ஊரில், 1872-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 16-ம் நாள் வெள்ளிக்கிழமை அன்று, அப்பாவையர் என்ற அனந்தநாராயண அய்யருக்கும் மீனாட்சி அம்மாளுக்கும் மகனாக அ.மாதவையா பிறந்தார். பெருங்குளம் கிராமத்திலும் பின்னர் திருநெல்வேலியிலும் அவர் கல்வி பயின்றார். நல்ல உடற்கட்டும் உயரமும் உடையவராக இருந்த அ.மாதவையா, இளம் வயதிலே அஞ்சாமை, துணிவு, எடுத்த காரியத்தை முடிக்கும் திடசித்தம், தடைகள் வந்தால் எதிர்த்து நிற்கும் மனஉறுதி, தடைகளைக் கடந்து சென்று செயலாற்றும் செயல் துடிப்புள்ளவராக இருந்தார். ஒருமுறை, பள்ளிப் பருவத்தில் மெட்ரிகுலேஷன் படித்துக் கொண்டிருந்போது நடந்த நிகழ்ச்சி ஒன்று அவருடைய இப்பண்புகளை நன்கு வெளிப்படுத்தும். திருநெல்வேலியிலிருந்த இந்துக் கல்லூரி பள்ளியில் மெட்ரிக் தேர்விற்கு முன்பாக, படிப்பு விடுமுறை விட்டதால், பிள்ளைகள் யாவரும் தத்தம்

ஊருக்குச் சென்று விட்டனர். தேர்வு தொடங்குவதற்கு முன்நாள் தத்தம் ஊர்களிலிருந்து மாட்டு வண்டிகளில் நெல்லை நோக்கிப் பயணம் செய்தனர். இடையில் ஆற்றில் வெள்ளம் வரவே, பிள்ளைகள் அனைவரும் தேர்வெழுதச் செல்வதை விடுத்து, தத்தம் ஊருக்குத் திரும்பிட, மாதவையா மட்டும் நீரில் இறங்கி நீச்சலடித்துக் கரை ஏறி, நீண்ட தூரம் நடந்து பள்ளியை அடைந்து தேர்வுகளை எழுதினார் என்று அவருடைய மகள் நினைவுகூர்ந்து சொல்கிறார். பெருங்குளத்திலிருந்து நெல்வேலியில் படித்த காலத்தில் அவருக்கு இலக்குமணப் போற்றி என்றும் தமிழ்ப் பெரியாரிடம் தொடர்பு ஏற்பட்டது. அவருடைய கூட்டுறவால் தமிழ் இலக்கிய இலக்கணங்களை ஆர்வத்துடன் கற்றார்.

**உயர் கல்வி**

திருநெல்வேலியில் படித்த காலத்தில், வீடுகளில் பணம் கொடுத்து உணவு சாப்பிட்டு, தங்கிப் படித்தார். இந்த அனுபவத்தை, கிராமத்து இளைஞர்கள் திருநெல்வேலி போன்ற நகரங்களில் வந்து வீடுகளில் தங்கி, பணம் தந்து உணவு சாப்பிட்டுக் கல்வி கற்று வருவதை - பத்மாவதி சரித்திரம் நாவலில் கோபாலன், சங்கரன் படைப்புக்களின் மூலம் அவர் ஆழமாகச் சித்திரித்து உள்ளார். திருநெல்வேலியில் பள்ளிப்படிப்பை முடித்து, சென்னை சென்று கிறித்தவக் கல்லூரியில் சேர்ந்து டாக்டர் மில்லர் அன்பில் ஆட்பட்டு கற்று, பி.ஏ.பட்டம் பெற்றார் அ.மாதவையா. அவருக்குப் பதினைந்து வயது ஆனபோது, 1887-ஆம் ஆண்டு, 11 வயதே ஆன நரசிங்கநல்லூரைச் சேர்ந்த மீனாட்சியைத் திருமணம் செய்து கொண்டார். பி.ஏ. பட்டம் பெற்றபின், ஆங்கில இலக்கியத்தில் அவர் எம்.ஏ. பட்டம் பெறக் கல்வி கற்கத் தொடங்கினார். அச்சமயத்தில் அரசு நடத்திய போட்டித் தேர்வில் பங்கு பெற்று, வெற்றி பெற்றார். அன்றைய ஆங்கில அரசாங்கத்தில் உப்பு சுங்க (Salt - Abkari) இலாகாவில் துணை ஆய்வாளராகப் பணியில் சேர்ந்தார். இப்பொறுப்பை அவர் ஏற்பதற்குமுன் ஓராண்டுக் காலம் கிறித்தவ கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றினார். அக்கால கட்டத்தில், 1892-ஆம் ஆண்டிலே தம்முடைய இருபதாம் வயதில் அ.மாதவையா சென்னை கிறித்தவக் கல்லூரி மலரில் ஆங்கிலக் கவிதை ஒன்றை எழுதினார். அதே ஆண்டில் (1892) ஆகஸ்ட் முதல் நவம்பர் முடிய நான்கு மாதங்கள் விவேகசிந்தாமணி மாத இதழில் சுந்தரம்பிள்ளையின் மனோன்மணியம் நாடகத்தைத் திறனாய்ந்து நீண்ட மதிப்புரையை நான்கு பாகங்களாக எழுதினார். விவேகசிந்தாமணி அக்காலத்தில் புத்திலக்கியங்களுக்காக நடத்தப்பட்ட இலக்கிய இதழாகும். நாடகத் திறனாய்வு செய்து எழுதிய அனுபவமே பிற்பாடு, அவரை நாடகங்கள் எழுதத் தூண்டியது. ஷேக்ஸ்பியரின் ஒதெல்லோ நாடகத்தை மொழிபெயர்த்து உதயலன் அல்லது கொற்கைச் சிங்களவன் என்று

மொழியாக்க நாடகம் ஆக (Transcreation) அவர் வெளியிட்டபோது நீண்ட விளக்கமாக, நாடக ஆராய்ச்சி உரை ஒன்றையும் அவர் வெளியிட்டதற்கு இந்த அனுபவம் துணை செய்தது. 1892–ஆம் ஆண்டு ஜூன் முதல் நவம்பர் முடிய ஆறு பகுதிகளாக விவேகசிந்தாமணி இதழில் சாவித்திரி சரித்திரம் என்னும் பெயரில் தொடர்கதை ஒன்றை அ.மாதவையா எழுதினார். அ.மாதவையாவின் இருபதாவது வயதிலே வெளியான அவருடைய முதலாவது நாவல் இது. அத்துடன் தமிழின் முதல் தொடர்கதையும் இதுதான். அன்றைய சூழலில் வேதநாயகம் பிள்ளையின் பிரதாப முதலியார் சரித்திரம் (1879), சுகுணசுந்தரி சரித்திரம் (1887), ஆகிய இரு நாவல்களே நேரடியாக நூல்களாக வெளிவந்திருந்தன. விவேகசிந்தாமணி இதழில்தான் முதல்முதலில் நாவல் ஒன்று தொடர்கதை யாக வரும் வழக்கம் ஏற்பட்டு அ.மாதவையா அவர்களால் எழுதப்பட்டு ஆறு இதழ்களாக வெளிவந்தது. பத்திரிகை ஆசிரியருடன் ஏற்பட்ட கருத்து வேறுபட்டால், தொடர்கதை முற்றுப் பெறாமல் இடையில் நின்றது. அந்தணர் குடும்பங்களில் பெருவழக்காயிருந்த இளம் வயது விதவைப் பெண்ணின் சிக்கலை இந்தத் தொடர்கதையில் ‘சாவித்திரி சரித்திரம்’ என்ற பெயரில் – அ.மாதவையா எழுதினார். பின்னர் 1903–ஆம் ஆண்டில் இக்கதையைச் சற்றுத் திருத்தஞ் செய்து முத்துமீனாட்சி என்ற பெயரில் நாவலாக அவர் எழுதி வெளியிட்டார்.

**அலுவல் வாழ்வு**

அ.மாதவையா அந்த நாட்களில் ஆங்கிலேய அரசு நடத்திய போட்டித் தேர்வில் பங்குபெற்று, தேர்வு எழுதி, வெற்றியும் பெற்றார். உப்பு (அப்காரி) - சுங்க இலாகாவில் துணை ஆய்வாளராகப் பொறுப்பேற்றார் அவர். அப்போது அவருக்கு வயது 21. 1893–ல் அவர் அப்பணியில் சேர்ந்து, தம்முடைய கடுமையான உழைப்பு, கையூட்டு எதுவும் வாங்காத, தம் மேலதிகாரிகளுக்கு எந்த வகையிலும் கையூட்டு, கொடுக்காத நேர்மை அஞ்சாதும் வளைந்து கொடுக்காமலும் கடமை ஆற்றும் துணிவு, தடை–களைக் கண்டு துவளாமல் விடாப்பிடியாகப் பணியாற்றும் உறுதி ஆகிய பண்புகளால் நற்பெயரையும் சக ஊழியர் பலரின் வெறுப்பையும் பெற்றுப் பொறுப்பான அலுவலராகப் பணிபுரிந்தார். அத்துறையில் உதவி கமிஷனர் பதவி வரையிலும் பதவி உயர்வு பெற்றார். அப்பதவி அந்நாளைய ஆங்கில அரசில் அத்துறையில் இந்தியர்கள் அடையக்கூடிய மிக உயர்ந்த பதவியாகும். அவருடைய நுட்பமான ஆங்கிலப்புலமை அத்துறையில் அவருக்கு நல்ல பெயரை ஏற்படுத்தித் தந்தது. அந்நாளைய அரசு அலுவலர்கள் கையூட்டு பெற்றும் ஒழுக்கக்கேடான துர் ஆசாரங்களில் ஈடுபட்டுத் தாமும் இன்னலுற்று, தம் குடும்பத்தாரையும் அல்லலுக்கு ஆட்படுத்தியதைக் கண்டார்

அ.மாதவையா. பத்மாவதி சரித்திரம், சத்தியானந்தன் போன்ற நாவல்களில் படைப்பதற்கு அவருடைய அலுவலக வாழ்க்கை அனுபவம் உதவியது. அவர் மிக நேர்மையான மனிதராக இறுதிவரை அலுவலக வாழ்வில் விளங்கினார். 1922-ம் ஆண்டில் தம்முடைய 50-ஆம் வயதில் அவராகவே விரும்பி அலுவலிலிருந்து ஓய்வு பெற்றுக் கொண்டார்.

பொதுவாகவே அவர் நிறையப் பயணம் செய்வதையும் வெளியே அலைந்து பணிபுரிவதையும் விரும்புபவர் ஆகவே, அரசுப்பணியான இதனை விரும்பி மேற்கொண்டார். நாள்தோறும் பல மைல் தூரம் பயணம் செய்யவேண்டிய தன்மை உடையது உப்பு சுங்கத்துறை ஆய்வாளர் பணி. போதுமான வாகனவசதிகள் இல்லாத அக்காலத்தில் மாட்டுவண்டியிலும் குதிரையிலும் அமர்ந்து பயணஞ் செய்யவேண்டும். அ.மாதவையா இயல்பாக நன்றாகக் குதிரைச் சவாரி செய்வார். குதிரையின் மீது அமர்ந்து பல மைல் தூரங்களைச் சுற்றி வருவதை அவர் பெரிதும் விரும்பி. நாள் தோறும் காலையில் குதிரைச் சவாரி செய்வார். அரசுப் பணியில் இருந்தபோதிலும் ஓய்வு பெற்ற பின்னரும் அவர் இதைத் தொடர்ந்தார். ஆகவே, தங்கள் வீட்டில் சென்னை போன்ற பெரு நகரத்தில் வாழ்ந்தபோது கூட, தம் நினைவிற்கு எட்டியவரையில், குதிரை எப்போதும் இருந்து வந்தது என்று அ.மாதவையாவின் பிள்ளைகள் நினைவுகூர்கின்றனர். அன்றைய சென்னை மாநிலம் முழுவதிலும் (ஆந்திராவின் பல பகுதிகள், கேரளாவின் சில பகுதிகள், இப்போது ஒரிசாவிலுள்ள பெர்காம்பூர், சில்கா போன்ற பல பகுதிகளையும் உள்ளடக்கிய பரந்துபட்ட மாநிலமாக அன்றைய சென்னை மாநிலம் இருந்தது), ஆந்திராவிலுள்ள மர்காபூர், மாங்கினி, தரங்கம்பாடி போன்ற இடங்களில் எல்லாம் அவர் பணியின் பொருட்டுச் சென்றுள்ளார். அந்த இடங்களுக்கு அலுவலுக்குச் சென்றபோது, தன் மனைவி குழந்தைகளை உடன் அழைத்துச் சென்றுள்ளார். அவர் பொதுவாகவே கடமை யாற்றுவதில் மிகுந்த கண்டிப்பும் ஈடுபாடும் கொண்டவர். தம் கடமையைச் செய்வதில் சளைக்காமல், சோர்வின்றிக் கண்ணும் கருத்துமாகச் செயற்பட்டவர். கடமைக்கு மாறுபட்டு எந்த உதவியையும் உபசரிப்பையும் விருந்து பேணலையும் அன்பளிப்பையும் தன் மேலதிகாரிக்கு அவர் தந்ததுமில்லை; தன் சக ஊழியர்களிடம் இருந்து அவர் பெற்றதுமில்லை. இதனால் அ.மாதவையாவின் மேலதிகாரியான ஆங்கிலேயர் ஒருவர் அவரின் இந்த நேர்மைப் பண்பிற்காகச் சினங் கொண்டு, வாய்ப்பு நேர்ந்தபோது, அ.மாதவையாவின் நடத்தை பற்றி ரகசியக் குறிப்பேட்டில் விரும்பத்தகாத வகையில் எழுதி வைத்துவிட்டார். இது பற்றி அ.மாதவையா ஒருபோதும் கவலைப்பட்டதுமில்லை; இதற்காகத் தன் நேர்மைக் குணத்தை மாற்றிக் கொள்ளவுமில்லை.

ஆந்திர மாநிலத்தைச் சார்ந்த கஞ்சம் மாவட்டத்தில் உள்ள இடத்திற்கு அவர் பணிக்காக நியமிக்கப்பட்டார். அரசுக்குப் பெருந்தொல்லை தந்துவந்த வியாபாரிகள் கூட்டம் ஒன்றைக் காவல் துறையினர் கைது செய்ய அ.மாதவையாவின் வீரதீரப் பண்பும் சாகச ஆற்றலும் சமயோசித அறிவும் துணை செய்தன. தெலுங்கரான 'பந்துலு காரு' போல வேடமிட்டு, அக்கூட்டத்தாருடன் தெலுங்கில் பேசி, அவர்களை நம்பச் செய்தார். அவர்கள் அறியாமல், தன்னுடன் வந்த காவல்துறையினரை மறைந்திருக்கச் செய்து, தான் தன்னந்தனி ஆளாக இருந்து, அவர்களைக் கைதுசெய்ய உதவினார். கடமையுணர்வும் உயிரையும் பொருட் படுத்தாமல், களத்தில் சென்று அரசாங்கத்திற்கு எதிரான குற்றவாளிகளைக் கைது செய்ய உதவிய துணிவும் பணியில் உள்ள ஈடுபாடும் அ.மாதவையாவை நமக்கு அடையாளங் காட்டின. இந்தக் கடமை உணர்ச்சிக்குப் பாராட்டாக அவர் பதவி உயர்வு பெற்றார். அன்றைய சூழலில், படித்துப் பட்டம் பெற்ற மத்திய தர வர்க்கத்தினரான அ.மாதவையா, அரசு அலுவல் பார்த்து மேன்மை நிலையைத் தம் கடமையுணர்வால், நெறி பிறழாத நேர்மைப் பண்பால் பெற்றார். பிறப்பால் உயர்ந்த இனத்தவராயினும், அன்றைய வாழ்வியல் போக்கிற்கு ஏற்பக் கல்வி கற்று, அரசு அலுவல் பார்த்து தன் முயற்சியால் உயர்தகுதியைப் பெற்று வாழ்ந்தார் அவர்.

**குடும்ப வாழ்வு**

அ.மாதவையா மிகச் சிறந்த குடும்பத் தலைவராக விளங்கினார். அவர் தம் சொந்த ஊரான பெருங்குளத்தை விடுத்து, கூட்டுக் குடும்ப வாழ்வை விட்டு, கல்வி, பின் அரசுப்பணி காரணமாகச் சென்னையிலும் பல ஊர்களிலும் தனிக்குடும்ப வாழ்வை அமைத்துக் கொண்டார். மிகவும் பழமையான ஆசாரக் கட்டுப்பாடுகளை உடைய குடும்பத்திலிருந்து வந்த தன் மனைவி மீனாட்சியை, மாறி வரும் புதிய நகர வாழ்க்கைக்கு ஏற்றவராக அவராக மாறச் செய்தார். அவருடைய அரசுப்பணி, வெளியூர்வாசம் காரணமாகவும் வீட்டிற்கு எப்போதும் பல்வேறுபட்ட மனிதர்கள் - உயர்சாதியினர், தாழ்ந்த இனத்தவர், வெள்ளையர், இந்தியர் ஏழை, செல்வந்தர், கற்ற புலவர்கள், கல்லாதவர், ஆண்-பெண் வந்து உரையாடி கூடி இருந்து உணவு சாப்பிட்டுப் போகும் பழக்கம் அ.மாதவையாவின் குடும்பத்தில் இருந்தது. இந்தப்பணியை எவ்வித ஓசையுமின்றி இயல்பாகச் செய்து அ.மாதவையாவின் சமூக மறுமலர்ச்சிச் சிந்தனையை நடைமுறையில் செய்து காட்டினார். அவர் மனைவி மீனாட்சி. அ.மாதவையா மீனாட்சி தம்புதியருக்கு ஐந்து பெண் குழந்தைகளும் மூன்று ஆண் மக்களும் பிறந்தனர். பிள்ளைகளை மிக்க அன்புடன் அவர் வளர்த்து அனைவருக்கும் நல்ல கல்வி அளித்தார்.

தாமே ஆர்வத்துடன் அவர்களுக்கு அடிப்படை அறிவியல், வரலாறு, நிலவியல், கணிதம், தமிழ், ஆங்கிலம் கற்றுத் தந்தார். முறையாக அவர்களுக்கு நிறுவனங்களில் சேர்த்துக் கல்வி அளித்தார். அவர் பிள்ளைகளும் அவரவர் துறையில் உயர்கல்வியாளர்களாக விளங்கி, முத்திரை பதித்தனர். கடல்கடந்து செல்லுதல் சாஸ்திர விரோதம் என்று சொல்லிக் கட்டுப்பாடும் மீறினால் சாதிநீக்கம் என்றெல்லாம் கட்டுப்படுத்தி, அச்சுறுத்தி வைத்து இருந்த அக்காலத்தில, தம்மகள் இலட்சுமி அம்மாளை இலண்டனுக்கு அனுப்பிப் படிக்கவைத்தார். அங்கு கல்வி கற்று வந்து சென்னை வெலிங்டன் மகளிர் கல்லூரியில் முதல்வராக அந்த அம்மையார் பணிபுரிந்தார். பெண் கல்வி, ஆணுக்குச் சரிநிகர் சமானம் என்றெல்லாம் எழுத்தில் சொன்ன, சமூகத்தளைகளுக்கு எதிரான விடுதலைக் குரலைத் தம் சொந்த வாழ்வில் நடைமுறையில் அ.மாதவையா செயற்படுத்தினார். பெண் மக்கள் கடல்கடந்து செல்லுதல் கூடாது (முந்நீர் வழக்கம் மகடூஉவொடு இல்லை) என்று கட்டுப்படுத்திய பழைய தமிழ்ப் பண்பாட்டு மரபை காலத்தேவைக்கு ஏற்ப அவர் மாற்றினார்.

தன் குழந்தைகளை நாள்தோறும் மாலையில் உலாவ அழைத்துச் செல்வார் அ.மாதவையா. விளையாட்டு, குதிரையேற்றம், உடற்பயிற்சி என்பவற்றை முறையாகத் தாமே அருகிருந்து அவர் கற்றுத் தருவார். முன்னிரவுகளில் அவர் தம் குழந்தைகளுக்குக் கதை சொல்லுவார்; தமிழ், வடமொழி ஆங்கில இலக்கியங்களிலிருந்து சுவையானவற்றைக் கற்றுத் தருவார். எந்தெந்தக் குழந்தைக்கு எத்துறையில் ஈடுபாடு எனக் கண்டறிந்து, ஊக்குவித்து அதற்குச் சிறந்த பயிற்சியையும் அவர் அளித்தார் ஒருமகளுக்கு இசையில் நாட்டம் இருப்பதை அறிந்து, ஆசிரியரை வீட்டிற்கு வரவழைத்து முறையாக இசைப்பயிற்சி அளித்தார். முத்துலட்சுமி என்ற மகளின் ஓவியக்கலை ஆர்வத்தைக் கண்டு, சென்னை ஓவியப்பள்ளி ஆசிரியரைக் கொண்டு ஓவியம் கற்றுத்தர ஏற்பாடு செய்தார். தம்முடைய பிள்ளைகள் உருவாக்கி, இயக்கி நடிக்கும் நாடகங்களை அல்லது மனமகிழ் நிகழ்ச்சிகளை அவர் தம் நண்பர்களுடன் அமர்ந்து தாமும் பாராட்டி, நண்பர்களையும் பாராட்டச் செய்வார். ஒவ்வொரு மாதமும் பிள்ளைகள் கூடி, முயன்று தத்தம் ஆங்கில, தமிழ் எழுத்துக்களையும் ஓவியங்களையும் சேர்த்து வீட்டுப் பத்திரிகை ஒன்றை - கையெழுத்துப் பிரதியாகக் கொண்டு வருவார்கள் தந்தை அவற்றைப் பார்த்து ஊக்கப்படுத்தி, மேலும் சிறக்க, ஆக்கப்பூர்வமான வழிகளைக் கூறி வழிகாட்டுவார் என்று அவர் மகள் நினைவுகூர்கிறார்.

குழந்தைகளுடைய உடல் வளர்ச்சியிலும் மன வளர்ச்சியிலும் மிகுந்த அக்கறை காட்டினார். எளிமை, சுவை, உடல் ஆரோக்கியம் நிறைந்த

உணவு வகைகளை உண்ணச் செய்தார். உடலை உறுதிபட வளர்த்து ஆரோக்கியமாக வைத்திருப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தார். வெளியூர்களில் தொலைதூரத்தில் அலுவல் பார்த்த காலங்களில் எல்லாம் தேவையான மருந்துகள் கொண்ட அவசர மருத்துவ முதல் உதவிப் பெட்டியை அவர் எப்போதும் உடன் வைத்திருப்பார். எளிமையான ஆடைகளை அணியப் பழக்கப்படுத்திய அவர், தம் மனைவி, பெண் பிள்ளைகளிடம் படாடோபமான விலையுயர்ந்த அணிகலன்கள் அணியும் எண்ணமே இல்லாமல் வளர்த்தார். தம் பிள்ளைகளுக்கு அப்பெற்றோர் முன் மாதிரியாக இருந்தனர். நண்பனாய் மந்திரியாய், நல்லாசிரியனாய், பண்பிலே தெய்வமாக, சுற்றமாகவும் அனைத்து உறவாகவும் பெற்றோர் இருந்தனர். அந்தக் குடும்பவாழ்வு உண்மையிலே முன் மாதிரியாக ஆனந்தமாக இருந்தது. அ.மாதவையா தம்முடைய பிள்ளைகள் யாருக்கும் வரதட்சணை வாங்கவே இல்லை. இது அவருடைய ஆளுமைப்பண்பை - சொன்னதை அப்படியே செய்யும் நடைமுறைப் பண்பை - எடுத்துக்காட்டும்.

**எழுத்து வாழ்வு**

அ.மாதவையா தம் காலச் சமூகச் சீர்கேடுகளை அறிந்து, அவற்றிலிருந்து மேன்மை பெறவேண்டும் என உழைத்தவர். தம்முடைய எழுத்துக்களை ஆயுதமாகக் கொண்ட சமூகச் சீர்த்திருத்தவாதி, அதன் பொருட்டுத் தமிழிலும் ஆங்கிலத்திலும் நிறையப் படித்தார். தமிழில் சங்க இலக்கியம், திருக்குறள், நாலடியார், சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம், தேவாரம், திருவாசகம், திவ்யப்பிரபந்தம், அருணகிரிநாதரின் திருப்புகழ், சித்தர் பாடல்கள், வில்லிபாரதம், தாயுமானவர், வள்ளலார், பாரதியார் பாடல்கள், இக்கால உரைநடை நூல்கள், நாவல்கள், இலக்கண நூல்கள் வரை விரிந்த பரப்பை உடைய இலக்கியங்களை அவர் கற்று ஈடுபட்டுள்ளார் என்பதை அவருடைய வீட்டு நூலகம் காட்டும். அதேபோல், ஆங்கில இலக்கியப் பரப்பு முழுவதையும் வடமொழி இலக்கியங்கள் என்று அவர் ஆழமாகக் கற்றுள்ளார். வரலாற்றிலும் அறிவியலிலும் அவருக்கு ஈடுபாடு உண்டு. அக்காலத்தில் சரோஜினி நாயுடு, ராஜாஜி, சேலம் எஸ்.விஜயராகவாசாரியார், மு.ராகவையங்கார், ரா.ராகவையங்கார், உ.வே.சா., பவானந்தம்பிள்ளை, சி.வை.தாமோதரம் பிள்ளை, அனந்தராமையர், நமசிவாய முதலியார், பிரான்சிஸ் கிங்க்ஸ்பெரி, எழுத்தாளர் கா.சி.வேங்கடரமணி போன்ற அறிஞர்களுடன் அவர் நெருக்கமான தொடர்பு கொண்டிருந்தார். அவர்கள் அடிக்கடி அ.மாதவையா வீட்டிற்கு வந்து அவருடன் பல மணி நேரம் இலக்கியச் சர்ச்சைகள் புரிவார்கள். இலக்கியம் தவிர, ஓவியம், இசை போன்ற நுண்கலைகளிலும் அ.மாதவையாவுக்குப் பெரும் ஈடுபாடு இருந்தது.

அக்கால இசைக்கலைஞர்களான ராமநாதபுரம் ஸ்ரீனிவாச அய்யங்கார் (பூச்சி அய்யங்கார்), வீணை தனம்மாள், மதுரை சண்முகவடிவு (எம்.எஸ். சுப்புலட்சுமியின் தாய்) போன்றோருடன் அவருக்கு நல்ல பழக்கம் உண்டு. இசை குறித்து அவர்களுடன் விவாதித்து மகிழ்வார், அ.மாதவையா. அவருடைய இசை ஈடுபாடுதான் இசைப்பாட்டுக்களை எழுதத் தூண்டியது.

பெரும்பாலும் நன்கு படித்து, திட்டமிட்டு வரையறுத்த நேரக் கட்டுப்பாட்டில் அவர் எழுதும் பழக்கமுள்ளவர். இரவு 9.00 மணி அளவில் குழந்தைகள் உறங்கச் சென்ற பின்னர் அ.மாதவையா எழுதுவதும் படிப்பதுமாக இருப்பார். இரவு 9.00 மணி முதல் 02.00 மணி வரையிலும் எழுதுவதை அவர் வழக்கமாகக் கொண்டிருந்தார். காலையில், குழந்தைகள் அவர் எழுதிய பகுதிகளைக் காண்பார்கள். தாம் எழுதிய படைப்புகளை வீட்டில் கையெழுத்துப் பிரதிநிலையிலேயே அ.மாதவையா தம் மனைவிக்கும் பிள்ளைகளுக்கும் வாசித்துக் காட்டி, அவர்களின் விமர்சனங்களைக் கேட்டுக்கொள்வார்.

அரசு அலுவலில் சேருமுன்னரே, 1892-ஆம் ஆண்டு எழுதத் தொடங்கிய அ.மாதவையா தம்முடைய இறுதிக்காலம் வரை எழுதிக்கொண்டு இருந்தார். தமிழ், ஆங்கிலம் இருமொழிகளிலும் அவர் எழுதியுள்ளார். நாவல், சிறுகதை, நாடகம் (உரைநடை நாடகம், செய்யுள் நாடகம், மொழியாக்க நாடகம்), கவிதை, இசைப்பாட்டு, உரைநடை, சிறுவர் கதை, திறனாய்வு, வரலாறு எனப் பல்வேறு வகைகளிலும் படைத்துள்ளார். ஆங்கிலம், தமிழ் ஆகிய இருமொழிகளிலும் இதழ்களில் படைத்துள்ளார். தமிழர்நேசன், பஞ்சாமிர்தம் ஆகிய இரு இதழ்களையும் அவரே நடத்தி, அவற்றில் நிறைய வெவ்வேறு வகைகளில் அவர் எழுதினார். நூல்களை வெளியிட ஆசிரியர் அச்சுப் பிரசுராலயம் என்ற அமைப்பை உருவாக்கி நடத்தியுள்ளார். 1892-ஆம் ஆண்டில் அவருடைய இருபதாம் வயதில் தொடங்கி, 1925-ஆம் ஆண்டில் தம்முடைய ஐம்பத்து மூன்றாம் ஆண்டு முடிய 33 ஆண்டுகள் அவருடைய எழுத்துப் பணி தொடர்ந்து நடைபெற்றது. அக்காலச் சூழலில் அரசியல் விடுதலை எழுச்சி மெல்ல மெல்ல உருப்பெற்று வளர்ந்த சமயத்தில், சமூகத் தளைகளிலிருந்து விடுதலையே வேண்டப் பெறுவது என அவர் வலியுறுத்தினார். சமூகத்தில் நடைமுறையிலிருந்த காலத்திற்கு ஒவ்வாத பழக்கவழக்கங் களையும் நம்பிக்கைகளையும் சீர்திருத்துவதே அவரின் முதல்நோக்கமாக இருந்தது. ஆங்கிலக் கல்வியால் பெற்ற மேற்கத்திய மறுமலர்ச்சிக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு, இந்தியப் பண்பாட்டுச் சூழலுக்கு ஏற்ப, அவர் சமூக மறுமலர்ச்சியை வலியுறுத்தி இலக்கியம் படைத்தார். ஆங்கிலமும் தமிழும் கற்ற படித்த மத்தியதர வாசகர்

வட்டத்தில், படைப்புக்கள் வழி தம்முடைய சீர்திருத்தக் கருத்துக்களை அ.மாதவையா பரப்பினார்.

ஆங்கிலேயரின் வரவாலும் புதிய ஆங்கிலக் கல்விமுறையாலும் தொன்மையான வாழ்க்கை முறையிலிருந்து புதுமையை நோக்கி எழும் பண்பாட்டு மறுமலர்ச்சி நம் நாடெங்கிலும் ஏற்பட்ட காலம் அது. தமிழகத்தில் அன்றைய சூழலில், படித்துப் பட்டம் பெற்று, அரசு அலுவலில் இருந்த அ.மாதவையா, நாவல், சிறுகதை, கவிதை, நாடகம் போன்ற படைப்பிலக்கியங்கள் வாயிலாகச் சமூகச் சீர்திருத்தத்தை பண்பாட்டு மறுமலர்ச்சியை - ஏற்படுத்தினார். சமூகப் பிரச்சினைகளை நடப்பியல் நெறியில் அவர் படைத்தார்.

பெண் குழந்தைகளின் இளமை மணம், இளம் வயதிலே விதவை ஆகும் நிலை, பருவம் வருமுன்னரே மிகச் சிறுவயதில் மணம் செய்து கொடுத்தல், பருவம் அடைவதற்காகச் செயற்கையான முறையில் மருத்துவஞ் செய்து பெண்பிள்ளகளைக் கொடுமைப்படுத்தல், இவற்றால் சிறுமியரின் மனம், உடல் ஆகியவை பாதிக்கப்பட்டு நோயாளி ஆதல், அவைகளை அறியாமல் தரப்படும் முரட்டுத்தனமான மருத்துவம், வரதட்சணை வழக்கம் காரணமாகப் பெண்களும் அவர்கள் பெற்றோரும் படும் துயரம், கட்டாய விதவைக் கோலம் ஆகிய கொடிய, காலத்திற்கு ஒவ்வாத பெண்கள் மீது நிகழ்த்தப்பட்ட வன்முறைகளை இனங்காட்டினார் அ.மாதவையா. பெண் கல்வியை வலியுறுத்தி, காதல், கலப்புத் திருமணங்களை அவர் வலியுறுத்தினார். அந்தணர் சமுதாயத்தில் காதல் திருமணத்தை ஏற்கமாட்டார்கள் என்பதால், கிறித்தவமதம் மாறியவர்களுக்கு அத்தகைய காதல் மணங்களை அவர் நிகழ்த்தினார், தம் நாவல்களில் விதவை மறுமணத்தைச் செய்து காட்டினார். முத்துமீனாட்சி நாவலில் விதவை மறுமணம் நிகழ்கிறது. அவள் கல்வி கற்றுச் சுயமாகச் சிந்தித்துப் பார்த்து மறுமணத்திற்கு மனமுவந்து இசைகிறாள். விதவை மறுமணஞ் செய்து கொண்டதை மரபுவாதிகள் எதிர்ப்பதால், அவர்களின் அன்றாட வாழ்க்கை போராட்டமாகிறது என்பதையும் இந்த எதிர்ப்புகளுக்கு அஞ்சாமல், துணிவுடன் எதிர்த்து நின்று போராடுபவர்களாக முத்துமீனாட்சி-சுந்தரேசன் தம்பதியரை அ.மாதவையா படைத்துள்ளார். பெண் ஆணின் பாலுறவிற்கு உரிய இன்ப நுகர்வுப் பொருளாக ஆக்கப்பட்டு, வன்முறைக்கு ஆளாக்கப்பட்டு, துன்பங்களுக்கு ஆட்படும் அவலத்தைச் சத்தியானந்தன் நாவலில் காட்டுகிறார். வரதட்சணை என்னும் கொடிய சமூக வழக்கத்தால் பெண்கள் படும் துயரங்களைச் சிறுகதைகளில் காட்டியுள்ளார். பெண்களின் உரிமைக்காக அ.மாதவையா அழுத்தமாகக் குரல் எழுப்பியுள்ளார். அவர் அளவிற்குத் தீவிரமான முறையில் செயற்பாட்டிற்கு ஏற்ற நடப்பியல்

நெறியில் எழுதிய சீர்திருத்தவாதிகள் மிகச் சிலரே. விதவை மறுமணத்தை அந்நாளில் நாவலில் காட்டி சாதனை செய்துள்ளார்.

சமூக அமைப்பில் காணப்பட்ட ஏறுவரிசையிலான சாதியமைப்பையும் உயர்சாதியினர், தாழ்ந்த சாதியினரைக் கொடுமைப்படுத்தித் தம்முடைய கட்டிற்குள் வைத்திருக்கும் ஆதிக்கப் போக்கையும் மிகுந்த பொறுப் புணர்வுடன் அவர் தம் படைப்புக்களில் கண்டித்துள்ளார். பத்மாவதி சரித்திரம் நாவல் முதல், கண்ணன் பெருந்தூது என்னும் அவருடைய இறுதியாக வெளிவந்த சிறுகதை முடிய இதைப் பரவலாகத் தொடர்ந்து காணலாம். நந்தன் பற்றி ஆங்கிலத்தில் சிறு குழந்தைகளுக்காக அவர் எழுதிய உரைநடை நூலில் (1923) சாதிக் கட்டமைப்புள்ள நம் சமூக அமைப்பைச் சாடி, இது மாறவேண்டும் என்ற அவரின் குரலைக் கேட்கலாம். "நம்முடைய அன்றாட வாழ்வில், நந்தனை மனத்திற்கொண்டு சக மனிதர்களைச் சாதிவேறுபாடு பாராட்டாமல் அனைவரையும் சகோதரர்களாக எண்ணி நடத்த வேண்டும்" (Nanda, p.82) என்று அ.மாதவையா கூறுகிறார். அந்நாட்களில் மேல் சாதியினரின் கொடுமை களிலிருந்து விடுபட வேண்டி, பிற்பட்ட சாதி மக்கள், கிறித்தவ மதத்திற்கு மதம் மாறி, கல்வி கற்று, பொருளாதார முன்னேற்றம் பெற்று, அரசு அலுவல்களில் அமர்ந்த நிலையையும் நடப்பியல் நெறியில் அ.மாதவையா காட்டினார். சாதிச்சண்டை நிகழும் அவலத்தை 'ஏணியேற்ற நிலையம்' என்னும் சிறுகதையில் மிக அழுத்தமாகக் காட்டியுள்ளார். சாதிக் கட்டமைப்பு உள்ள சமூகத்தைக் காட்டி, சமூகமாற்றம் ஏற்பட வேண்டும்; அனைவரும் சகோதரர்களாக 'ஒன்றே குலம்' - மனிதகுலம் - வாழவேண்டும் என அவர் வலியுறுத்தினார். அந்தணராக அவர் இருந்தபோதிலும், சமூக மாற்றம் ஏற்பட்டு அனைவரும் ஒன்றாக - சகோதரர்களாக - வாழும் நிலை உருவாக இடையறாது பாடுபட வேண்டும் என்று சீர்திருத்த எண்ணத்தை முன்வைத்தார்.

அந்நாளைய படித்த, அரசு அலுவல் பார்த்த இளைஞர்களிடையே காணப்பட்ட புதிய மறுமலர்ச்சி சிந்தனைப் போக்குகளைக் காட்டும் அ.மாதவையா, இவர்களைப் போன்ற புதிய இளைய தலைமுறை யினராலே சமூகமாற்றம் வரவேண்டும் என்று காட்டுகிறார். இத்தகைய விழிப்புணர்வு ஏற்பட ஆங்கிலக் கல்வி காரணம் எனக் காட்டி, கல்வியின் பயன் தீமையை இனங்கண்டு, தீமைக்கு எதிராகப் போராடுவது என்று காட்டுகிறார். மிகச் சரியான முறையில் நாவல்-சிறுகதை வழி, நடப்பியல் நெறியில் இளைஞர் சமுதாய எழுச்சியைப் பதிவுசெய்த சமூக வரலாற்று அறிஞராக அ.மாதவையா விளங்குகிறார். அவர் காலத்தில் நடப்பில் இருந்த அரசு அலுவலர்களின் தனிமனித ஒழுக்கக் கேடுகளையும்

பொதுவாழ்வில் அவர்கள் ஊழல் புரிவதையும் பத்மாவதி சரித்திரம், சத்தியானந்தன் போன்ற நாவல்களில் காட்டி, அப்போக்கை வன்மையாகக் கண்டிக்கிறார். அத்தகைய அரசு அலுவலர்கள் தண்டனை பெறுவதையும் அவர்களின் குடும்பம் சிதிலமடைந்து போவதையும் மாற்றாக, அவர்களின் பிள்ளைகள் இத்தகைய ஒழுக்கக் கேடுகளுக்கு ஆளாகாமல் இருப்பதையும் நேர்மையாக வாழ்வதையும் - காட்டி, குறை, நிறைகளைத் திறனாய்ந்து தெளிய வேண்டும் என அவர் காட்டுகிறார். பழமை, புதுமை இரண்டிலும் நன்மை தருவனவற்றை ஏற்கவும் மனிதகுல வளர்ச்சிக்கு ஒவ்வாத தீயனவற்றத் தள்ளவும் வேண்டும் என்பதை அ.மாதவையா படைப்புக்கள் வழி காட்டுகிறார்.

அ.மாதவையா தாம் நன்கு அறிந்த அந்தண இனத்தைத் தம் படைப்புக்களுக்குக் களமாகக் கொண்டார். அந்தணர்களிடையே காணப்படும் இளமை மணம், இளம்வயதிலே விதவையாகும் பெண்களின் பிரச்சினை, பெண்கல்வி மறுப்பு, கட்டாய விதவைக் கோலம், வரதட்சணைக் கொடுமை, வயதான ஆண்களின் பாலுறவு வேட்கையால் இளம்பெண்கள் படும் அவலம், இளமை மணத்தால் கல்வியின் போதிய கவனஞ்செலுத்த முடியாமல் இளைஞர்கள் படும் துயரம், கல்வி கற்று அரசு அலுவல்களில் இருக்கும் ஆண்களின் தனிமனித ஒழுக்கக் கேடுகள், காதல் மணம் புரிந்து கொள்வதை எதிர்க்கும் பழமைப் போக்கு, காலத்திற்கு ஒவ்வாத மரபுகள், கீழ்ச்சாதியாரை அல்லல்படுத்தல் ஆகியவற்றை அவர் மிகவும் கடுமையாகத் தம் படைப்புகளில் விமர்சனஞ் செய்தார். இத்தகைய ஆசாரக்கேடுகள் நீக்கப்பட வேண்டும் என வலியுறுத்தினார். இளமைப் பருவத்தில், பெருங்குளத்தில் வாழ்ந்தபோது, பள்ளிப் பருவநாட்களில், அவருக்கு மிக நெருக்கமான நட்புகொண்ட ஓர் அந்தண இளைஞர் குடும்பச் சூழல் காரணமாகத் தன் சகோதரன் இறக்கவே, குடும்பத்தைக் காப்பாற்றத் தன் கல்வியை விட்டுவிட்டு, சமையல் வேலை செய்து வந்த அனுபவம் மாதவை யாவைப் பாதித்துள்ளது. விதவைத்தாய், தன் பிள்ளையை வளர்த்து ஆளாக்கப்படும் துயரைப் பத்மாவதி சரித்திரம் நாவலில் படைக்க இந்த அனுபவம் உதவியது. விஜயமார்த்தாண்டம் நாவலில், அவர் மறவர் இன மக்கள் வாழ்க்கைக்குக் களத்தை மாற்றிக் கொண்டார். திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள மறவர் இனம் அவருக்கு நன்கு அறிந்த அறிமுகமான - ஒன்றாகும். கிளாரிந்தா, சத்தியானந்தன் நாவல்களில் கிறித்தவ மதமாற்றத்திற்கு ஆளான நிலையைக் காட்டுகிறார். அவர் காலத்தில் திருநெல்வேலிப் பகுதிகளில் கிறித்தவ சமயப் பிரச்சாரம், மதமாற்றம் வேகமாக நடைபெற்றது. இந்து சமயத்திலிருந்த சாதிக்கட்டமைப்பு, அடிமட்டத்து மக்களைப் பெரிதும் கொடுமைகளுக்கு

ஆளாக்கியதால், கிறித்தவ சமயத்திற்கு மதம் மாறினர் என்று அ.மாதவையா நடப்பியலைக் காட்டினார். அதே சமயத்தில், கிறித்தவ மதத்திலும் சாதிக்கட்டமைப்பு காணப்படுவதை உயர் சாதியினர், அடிமட்டத்து மக்களை ஒடுக்கி அல்லல் படுத்துவதை அவர் சுட்டிக்காட்டினார். எந்தச் சமயமாயினும் மனித நேயத்துடன் சகோதர உணர்வுடன், தனிமனித ஒழுக்கத்தை வலியுறுத்தவும், பிறப்பால் வரும் சிறப்பை விடவும் தம் மனசாட்சிக்கு அஞ்சி, தன்னுழைப்பால், அடையும் சிறப்பைப் போற்றவேண்டும் என அ.மாதவையா வலியுறுத்தினார். நேர்மையும் துணிவும் எதற்கும் அஞ்சாது கடமையாற்றும் ஈடுபாட்டுணர்வும் கொண்டு, சமூகத் தீமைகளை, ஒழுக்கக் கேடுகளை எதிர்த்து அனைத்து நிலைகளிலும் சமூக அடிமைத்தனங்களை எதிர்த்து அ.மாதவையா எழுதினார். அவர் சமூகச் சீர்த்திருத்தவாதியாகவும் பெண்ணியவாதியாகவும் விளங்கி, தமிழில் நாவல், சிறுகதை இலக்கிய வகைகளுக்குப் புதுநெறி காட்டினார். பின்னாளில் தமிழில் ஏற்பட்ட அத்தனை மறுமலர்ச்சி சிந்தனைகளுக்கும் அ.மாதவையா முன்னோடி ஆவார்.

அ.மாதவையா படைப்பிலக்கியம் மட்டுமின்றி (நாவல், சிறுகதை, கவிதை, இசைப்பாட்டு, நாடகம்) ஏராளமான கட்டுரைகளையும் உரைநடை நூல்களையும் சிறுவர்க்கான கதைகளை உரைநடையில் தரும் படைப்புக்களையும் படைத்தார். திறனாய்வுக் கட்டுரைகளையும் தொடர்ந்து எழுதினார். இலக்கிய வகை எதுவாயினும் சமூக மறுமலர்ச்சி, சீர்திருத்தம், அறிவூட்டல் என்ற அவருடைய இலக்கியக் கொள்கை நன்கு வெளிப்பட்டது. அரசுப் பணியில் இருந்த காலத்திலே 1917-ஆம் ஆண்டில் அ.மாதவையா, தம் உறவினரான அறிவியல் எழுத்தாளர் பெ.நா.அப்புசாமி, நீதிபதி சதாசிவம், எஸ்.பவானந்தம் பிள்ளை, அ.அரங்கசாமி, சி.ஆர்.ஸ்ரீநிவாசன் ஆகியோருடன் கூடி 'தமிழர் கல்விச் சங்கம்' என்னும் அமைப்பை உருவாக்கினார். இவ்வமைப்பின் நோக்கம், தமிழ் மக்களுக்கு அறிவியலைத் தமிழில் கற்பிக்கவேண்டும் என்பதாகும். இதற்காக அந்த அமைப்பின்வழி, 'தமிழர் நேசன்' என்னும் மாத இதழைத் தொடங்கினர். இவ்விதழில் 1917 முதல் 1924 முடிய அ.மாதவையா எழுதியுள்ளார். இலக்கிய ஆராய்ச்சி, அறிவியல் (இயற்பியல், வேதியியல், உயிரியல், தாவரவியல், மருத்துவம், சிற்பக்கலை, சுகாதாரம்), கல்வியியல், தமிழ்மொழி ஆகிய துறை ஆய்வுகளை எளிய தமிழில் கட்டுரைகளாகப் பலர் எழுதினர், இந்த இதழில் அ.மாதவையா, தமிழ்ச் செல்வம் என்ற பகுதியைத் தொடர்ந்து எழுதிவந்துள்ளார் 'உலக சரித்திரம்' என்ற பெயரில் அறிவியல் கட்டுரைத் தொடரை அவர் எழுதினார். 'தமிழ் இலக்கிய அபிவிருத்தி' என்ற தலைப்பில் இலக்கியத் திறனாய்வையும்

செய்துள்ளார். பழந்தமிழ் இலக்கியப் பாடல்களுக்கு விளக்கவுரை எழுதி உள்ளார். ஓரங்க நாடகம் எழுதியுள்ளார். அவர் இவ்விதழின் ஆசிரியராகச் செயற்பட்டுள்ளார்.

அ.மாதவையா அத்வைத நெறியாளர். தம்முடைய இன வழக்கத்தின்-படி தம் பெற்றோர்களின் மறைவிற்குப் பின்னர், அவர்களுடைய மனநிறைவிற்காக அவர்களின் நினைவு நாட்களில் நீத்தார்கடன் (திதி கொடுத்தல்) செய்துள்ளார். ஆனால், தமக்கு அவற்றில் எல்லாம் நம்பிக்கை இல்லை என்பதால், தம் மறைவிற்குப் பிறகு தம் பிள்ளைகள் தமக்கு அத்தகைய சடங்குகள் எவையும் செய்யவேண்டாம் என்று கூறியுள்ளார். இது அவருடைய ஆளுமையை - காலத்திற்கு ஏற்ப வாழ்க்கை முறைகளை மாற்றிக் கொள்ளும் போக்கை - வெளிப்படுத்தும். பிரும்ம ஞானசபையில் அவர் பல காலம் தொடர்ந்து ஈடுபட்டு வந்துள்ளார்.

**இறுதிக்காலம்**

1922-ஆம் ஆண்டில் தம்முடைய ஐம்பதாம் வயதில் அரசுப் பணியிலிருந்து தாமே விரும்பி ஓய்வு பெற்றார். சென்னையில் தாம் கட்டிய வீட்டில் - பெருங்குளம் இல்லத்தில் இருந்தார். அதன் பின்னர் 3 ஆண்டுகள் முழுமையாக எழுத்துப் பணியில் ஈடுபட்டார் 1924-ஆம் ஆண்டில் 'பஞ்சாமிர்தம்' என்னும் மாத இதழைத் தொடங்கி மறைவு வரை நடத்தினார். 1924-ஆம் ஆண்டு சித்திரை மாதம் முதல் இதழ் வெளிவந்தது. 'நாடெங்கிலும் ஆங்காங்கு முளைத்தெழும் தேசிய உணர்ச்சிப் பயிருக்கு இப்பத்திரிகை மூலமாய் உரம் இட்டு, அறிவுநீர் பாய்ச்சி, அவ்வுணர்ச்சியைத் தழைத்தோங்கச் செய்ய முயலுவது என் முக்கிய நோக்கம்' (பஞ்சாமிர்தம், முன்னுரை, ப.3, சித்திரை, 1924) என்று அவ்விதழின் நோக்கத்தை அ.மாதவையா கூறியுள்ளார். நான் ஒரு மானுடன். நான் மதியாதன மானுட வாழ்வில் இலை' என்ற குறிக்கோளைக் கொண்டது அவ்விதழ். கனமான செய்திகளையே இவ்விதழ் தந்தது. கார்த்திகை 1925 முடிய இருபது இதழ்கள் வெளிவந்தன. இவைகளில் அ.மாதவையா, நான்கு சிறுகதைகளையும், 13 தொடர் கட்டுரைகளையும், 12 கட்டுரைகளையும், அமுதகவி என்ற புனை பெயரில் 17 கவிதைகளையும், நூல்-மதிப்புரை, பத்திராதிபர் குறிப்பு, சுற்றுப்பயணம், பொறுக்கு மணிகள் ஆகிய பகுதிகளையும் படைத்துள்ளார். பத்மாவதி சரித்திரம் நாவலின் மூன்றாம் பாகம் தொடர்கதையாக வந்து முற்றுப்பெறாமல் நின்று விட்டது. அவர் மறைவின் காரணமாக, கடைசி இதழ் அவருடைய மறைவிற்குப் பின்னர் அவருக்கு அஞ்சலி செலுத்துவதாக அவருடைய படைப்புக்களுடனும் சரமகவிகளுடனும் வெளிவந்து உள்ளது. சமூக முன்னேற்றம், பெண் விடுதலை என்பன அ.மாதவையாவின் முதன்மை நோக்கமாக உள்ளதை இவ்விதழில் வந்த

அவருடைய படைப்புகளும் வலியுறுத்துகின்றன.' மேல்சாதிக்காரர்கள் தம் போக்கை மாற்றிக்கொண்டால், நாடு மேன்மை அடையும்' என்று அ.மாதவையா இவ்விதழில் கூறுவது, சமூக மாற்றம் குறித்த அவர் நிலைப்பாட்டை நன்கு காட்டும்.

பஞ்சாமிர்தம் இதழை நடத்தியதுடன், தம்முடைய நூல்களையும் அவர் வெளியிட்டு வந்தார். ஆசிரியர் அச்சுப் பிரசுராலயம் என்ற அமைப்பிலிருந்து நூல்களை அவர் வெளியிட்டார். நூல்களைப் படிப்பதும் எழுத்துப் பணிகளைப் பார்ப்பதும் குடும்பத்தாருடனும் நண்பர்களுடனும் உரையாடி மகிழ்வதுமாக அவருடைய நாள்கள் சென்றன. அன்றைய காலகட்டத்தில் தமிழ்நாட்டில் கல்விநிலையங்களில் ஆங்கிலமே கல்வி கற்பிக்கப்படும் மொழியாக இருந்தது. கல்லூரி மாணவர்களுக்கான பாடங்கள் யாவும் ஆங்கிலத்தின் வழியே கற்பிக்கப்பட்டன. ஆங்கிலமொழிவழிக் கல்வியே நடைமுறையில் இருந்தது. இதனை அக்கால அறிஞர் பலரும் எதிர்த்துத் தமிழ் வழிக் கல்வியை வலியுறுத்தி வந்தனர். தமிழ்மொழி வளர்ச்சி, தமிழரின் மேன்மை, தமிழ்ச் சமூக மறுமலர்ச்சி என்ற நோக்கங்களைக் கொண்டு தமிழை நவீனப்படுத்தும் பணியில் தம் வாழ்நாள் முழுவதும் ஈடுபட்டு வந்தவர் அ.மாதவையா. ஆகவே அவருக்கு தமிழ்வழிக் கல்லூரிக் கல்வி கற்பிக்கப்படவேண்டும் என்பது முதல் நோக்கமாகும். எட்டாண்டுகளுக்கு முன்னரே 1917-இல் அறிஞர் பலருடன் கூடி 'தமிழர் கல்விச் சங்கம்' நிறுவி தமிழர் அனைவரும் பயன்படும் வண்ணம் அறிவியலைத் தமிழில் எடுத்துரைக்கும் பெருநோக்குடன் செயற்பட்டவர் அ.மாதவையா. அவர் அப்போது சென்னைப் பல்கலைக்கழக ஆட்சிமன்ற உறுப்பினராக இருந்தார். 1925-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 22-ஆம் நாளில் பிற்பகல் 3.40 மணி அளவில் சென்னைப் பல்கலைக்கழக ஆட்சிமன்றக் கூட்டத்தில் அ.மாதவையா உரையாற்றினார். மாணவர்களுக்குக் கல்லூரிக் கல்வி தமிழில் கற்பிக்கப்பட வேண்டும் எனவுத் தமிழைக் கட்டாயப்பாடமாக ஆக்கவேண்டும் என்று உரையாற்றிவிட்டு அவர் அமர்ந்தார். உடன் அவருடைய மூளையின் குருதி நாளம் வெடித்து, குருதிக் கசிவு ஏற்பட்டு அ.மாதவையா மறைந்தார்.

காலமெல்லாம் தமிழர் மேன்மை, தமிழ் அபிவிருத்தி, தமிழ்ச் சமுதாய முன்னேற்றம் என்று பேசியும் எழுதியும் வந்த அ.மாதவையா அமரரானார். சமூகச் சீர்த்திருத்தம், பெண்ணியம் என்று தொடர்ந்து தீவிரமாக எழுதிய அவரின் படைப்புகள் தமிழ் இலக்கிய வரலாற்றில் புது நெறி ஏற்படுத்தியவையாகும். இளம் வயதில் மணமாகி, விதவையான பெண்ணுக்கு மறுமணம் நிகழ்வதாகக் காட்டி, விதவைச் சிக்கலுக்குத் தீர்வு மறுமணம் என்று அந்த நாளிலே மிக்க துணிச்சலுடன் எழுதிய அ.மாதவையாவின் முத்துமீனாட்சி நாவல் இந்தியமொழிகளின் நாவல் வரலாற்றில் பெருஞ்சாதனையான நாவல் ஆகும்.

இயல் – 2

# மாதவையாவின் படைப்புக்கள்

**முன்னுரை**

அ.மாதவையா கல்வி கற்று அரசுப்பணியில் சேருமுன் தொடங்கி தம் இறுதி மூச்சு வரையிலும் எழுதி வந்தார். தமிழ்ச் சமுதாய முன்னேற்றம், தமிழ்மொழி மேம்பாடு, சமூகச் சீர்கேடுகளிலிருந்து விடுதலை பெறும் சமூக விடுதலை, பெண் விடுதலை என்ற உயரிய நோக்கங்களை மையமாக வைத்து எழுதினார். கற்ற கல்வியின் பயன், மனச்சாட்சிக்குத் தெரிய தீமை என்று தெரிந்த பின்னர், தீமைக்கு எதிராகப் போராடுவது என்ற உயரிய கொள்கையைத் தம் படைப்புகளில் அவர் தொடர்ந்து வெளியிட்டார். வெறும் பொழுது போக்கிற்கு மகிழ்வூட்டும் கதைகளைப் படைக்காமல், சமூகச் சீர்கேடுகளை எதிர்த்து அவர் எழுதினார். 1892–ஆம் ஆண்டு மார்ச் மாத இதழில் சென்னை கிறித்தவக்கல்லூரி மலரில் அவர் 'நான் கல்வி கற்ற நிறுவனத்திற்கு' (To my Alma Matter) என்னும் தலைப்பில் 16 பகுதிகளைக் கொண்ட கவிதை ஒன்றை ஆங்கிலத்தில் எழுதினார். அப்போது அவருக்கு இருபது வயதுதான். அவருடைய ஆங்கிலப் புலமையையும் அவருள் கனன்று கொண்டிருந்த படைப்பாற்றலையும் அக்கவிதை இனங்காட்டியது. தொடர்ந்து ஆங்கிலக் கவிதைகள், நாடகத் திறனாய்வு, கட்டுரை என்று பல்வேறு இலக்கிய வகைகளையும் அவர் படைத்து வந்தார். 1892–ஆம் ஆண்டு ஜூன் மாதம் முதல் நவம்பர் முடிய விவேகசிந்தாமணி மாத இதழில் 'சாவித்திரி சரித்திரம்' என்னும் நாவலை ஆறு இதழ்களில் தொடராக எழுதினார். அ.மாதவையா இருபது வயதில் எழுதிய முதல் நாவல் என்ற சிறப்புடன், தமிழில் வெளியான முதல் தொடர்கதையும் அதுதான். சாவித்திரி என்னும் பெயரையுடைய அந்தணர் சமூக இளம்விதவையின் கதையாக அத்தொடர் அமைந்தது. ஆறு இதழ்களில் மூன்று இயல்களை அவர் எழுதினார். நாவலுக்கு நம்பகத்தன்மை ஊட்டும் முறையில், 'சாவித்திரி சரித்திரம்' எழுதியவர் சாவித்திரி என்று எழுதினார். அத்தொடர்கதை நடுவில் திடீரென்று நின்றுவிட்டது. 'பத்மாவதி சரித்திரம்' நாவலின் மூன்றாம் பதிப்பின் முன்னுரையில், "நாகரிகம் சிறந்த மேனாட்டில்

பெரும்பாலோரும் தம் மூளைக்கு முக்கிய உணவாகக் கொண்டு அனுபவிக்கும் 'நாவல்' என்ற கிரந்தப் பகுதியைத் தமிழிலும் நடைபெறச் செய்யக் கருதி, 'விவேகசிந்தாமணி' என்ற தமிழ்ப் பத்திரிக்கை வெளியிட்டபொழுது, அதன் முதல் தொகுதியில் 'சாவித்திரி சரித்திரம்' என்ற ஒரு நாவல் எழுதினேன். சில காரணங்களால் அது முற்றுப்பெறவில்லை" என்று அ.மாதவையா அவர்களே இதைக் கூறியுள்ளார். இந்தத் தொடர் பின்னர், 1903-இல் 'முத்து மீனாட்சி' என்னும் நாவலாக மாதவையாவால் நேரடியாக வெளியிடப்பட்டது. 1898-ஆம் ஆண்டு 'பத்மாவதி சரித்திரம்' நாவல் முதல் பாகம் வெளியிடப்பட்டது. நாவல், சிறுகதை, நாடகம், கவிதை, இசைப்பாடல், உரைநடை (வரலாறு), கட்டுரை, சிறுவர் இலக்கியம், இலக்கிய-உரை என்னும் வகைகளில் தமிழிலும் ஆங்கிலத்திலும் 48 நூல்களை எழுதியுள்ளார். இந்த நூல்கள் தவிர, இதழ்களில் மட்டும் வெளிவந்து, இன்னும் நூல்வடிவம் பெறாமல் உள்ள அவருடைய படைப்புகள் உள்ளன. சென்னை கிறித்தவக் கல்லூரி மலரிலும், இந்து ஆங்கில நாளிதழிலும், தமிழர்நேசன், பஞ்சாமிர்தம் இதழ்களிலும் அவர் எழுதிய படைப்புக்கள் இன்னும் தொகுப்புக்களாக வெளிவரவில்லை. இப்படைப்புக்கள் அனைத்திலும் சமூகச் சீர்த்திருத்த நோக்கமே முதன்மை நோக்கமாக வெளிப்படுவதையும் அறிய வேண்டும். பெண்கள் முன்னேற்றம், தமிழ்மொழி மேம்பாடு என்னும் நோக்கங்களும் முதன்மையாக வெளிப்பட்டு உள்ளன. சமூகத் தளை-களிலிருந்து விடுதலை பெறவேண்டும் என்று அவர் தொடர்ந்து வலியுறுத்தி உள்ளார். நாட்டு விடுதலையையும் அவர் நிறையப் பாடியுள்ளார். நாட்டை விடுதலை பெறச் செய்து சகல துறைகளிலும் மேன்மை பெறச் செய்ய வேண்டும் என்று அ.மாதவையா தம் படைப்புக்களில் தொடர்ந்து வலியுறுத்தி வந்துள்ளார். பெண் விடுதலை பற்றி அவர் தொடர்ந்து எழுதிவந்துள்ளார்.

**நாவல்கள்**

அ.மாதவையா தமிழ் இலக்கிய உலகில் தொடக்க கால நாவலா-சிரியர்களுள் நடப்பியல் நெறியாளர் எனவும் சமூகச் சீர்திருத்தப் படைப்பாளர் எனவும் பெயர்பெற்றவர். அவருடைய நாவல்கள் மிகுந்த கலையழகுடன் நடப்பியல் நெறியில் அமைந்து இருந்தன. 1898-ஆம் ஆண்டில் 'பத்மாவதி சரித்திரம்' நாவலை அவர் வெளியிட்டார். முதல் பாகம் மட்டும் வெளியிடப் பெற்றது. அந்த நாவலுக்கு மார்ச் மாத இதழில் அதே ஆண்டில் பிரபுத்தபாரதா இதழில் மதிப்புரை வந்தது. 1899-ஆம் ஆண்டில் இந்த நாவலின் இரண்டாம் பாகத்தை அவர் வெளியிட்டார். பின்னர் அ.மாதவையா ஆசிரியராக இருந்து நடத்திய பஞ்சாமிர்தம் இதழில் 1924-ஆம் ஆண்டு வைகாசி மாத இதழிலிருந்து 1925-ஆம்

ஆண்டு கார்த்திகை மாத இதழ் முடிய 17 இயல்களைக் கொண்ட மூன்றாம் பாகத்தை அவர் எழுதியுள்ளார். 1925-ஆம் ஆண்டு அவர் மறைவிற்குப் பின்னரே பஞ்சாமிர்தம் இறுதி இதழ் வந்து பின் நின்றுவிட்டது. நாவலின் மூன்றாம் பாகம் முற்றுப் பெறாமல் நின்றுவிட்டது. நாவலின் மூன்றாம் பாகம் வீண்வளர்த்தலாக உள்ளது. முதலிரு பாகங்களே நல்ல செறிவான அமைப்பில் கட்டுக்கோப்புடன் உள்ளது. பத்மாவதி சரித்திரம் நாவலில் அந்தணச் சமூகத்தில் காணப்பட்ட சீர்கேடுகளைக் கண்டிக்கிறார். இளமை மணம், வயதுக்கு வருமுன் மணம் செய்து கொடுக்கும் அவலம், வயதான ஆணின் பாலுறவு வேட்கைக்குப் பலியாகும் இளம் பெண்ணின் அவலம், திருமணச் சடங்குகளில் பொருள் விரயமாதல், நகர வாழ்வில் வரும் ஆடம்பரம்-படாடோபம், பெண் கல்வியின்றி இருப்பதால் ஏற்படும் அவலம், குடும்ப ஆசாரங்களில் ஏற்படும் மாற்றம், ஆங்கிலக் கல்வி கற்ற இளைஞர்களிடையே காணப்படும் புதுமையை ஏற்கும் மனத்துணிவு என்று பலவற்றை இந்த நாவல் வலியுறுத்தின. அரசு அலுவல்களில் இருந்தோரின் தவறான செயல்களால் தாம் தண்டனை பெற்றதுடன் தம் குடும்பத்தாரையும் இன்னலுக்கு ஆளாக்கிய அந்நாளைய சமூகச் சூழலை இந்த நாவல் மிக நன்கு அழுத்தமுறக் காட்டுகிறது. தம்முடைய 26-27 ஆம் வயதில் அ.மாதவையா, இந்நாவலின் முதலிரு பாகங்களை எழுதி வெளியிட்டுள்ளார்.

அ.மாதவையாவின் அடுத்த நாவல் விஜயமார்த்தாண்டம் 1903-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. 1903 ஆம் ஆண்டு ஜூலை மாதம் இந்த நாவலில் முதற்பதிப்பு வெளிவந்தது. திருநெல்வேலியில் மிகவும் புகழ் பெற்றிருந்து வெள்ளக்கால் சுப்பிரமணியருக்கு இந்த நாவல் உரிமையுடையதாக ஆசிரியரால் படைக்கப்பட்டுள்ளது. காதற்பத்து, கற்புப்பத்து என்ற இரு பிரிவுகளாகப் பகுக்கப்பட்டுள்ள பாங்கு, பழந்தமிழ் அகஇலக்கிய மரபில் காணப்படும் முறையை அடியொற்றியதாகும். மறவர் இனத்து மக்களின் பழக்கவழக்கங்கள், சமூக மரபுகளை மையமிட்டுப் படைத்து, ஆசிரியர் தற்சார்பற்ற முறையில் முதல் நாவலைத் தமிழ் நாவல் உலகிற்குத் தந்துள்ளார். அந்நாளைய ஜமீன் வரலாறு, நீதிமன்ற நிலை, கிறித்தவர்கள் மதமாற்றம் செய்ய மேற்கொண்ட முயற்சிகள் எனப் பலவற்றை இந்நாவல் நன்கு பதிவு செய்துள்ளது. வட்டார வழக்கு மொழி மிக நன்கு ஆளப்பட்டுள்ளது.

முத்து மீனாட்சி நாவல் 1903-ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. 'முத்து மீனாக்ஷி - ஒரு பிராமணப் பெண்ணின் சுவசரிதை' என்ற அமைப்பில் அதன் தலைப்பு அந்நாளில் அமைக்கப்பட்டிருந்தது. அந்தணப் பெண் ஒருத்தியின் தன் வரலாறு (சுவ சரிதை) என்று பொருள்படும் தலைப்பிற்கு ஏற்ப, முத்து மீனாட்சி, தன் கதையைத் தானே தன் கூற்றில் கூறும்

நோக்குநிலைக்கு ஏற்ப, அவளின் தன்மைக் கூற்றில் உள்ளதைச் சுட்ட அத்தகைய விளக்கத்தைத் தலைப்பில் தந்துள்ளார். அந்தணர் சமூகத்தில் பெருவழக்காக அந்நாளில் நடைமுறையில் இருந்த இளமை மணம் கொடுமையால், பாதிக்கப்பட்டு, கணவனை இழந்து விதவையான முத்துமீனாட்சி, கல்வி கற்று, இளமையில் தான் பழகிய சுந்தரேசனை மறுமணம் செய்து கொள்கிறாள். விதவை மறுமணத்தை ஏற்காத சமூகம் அவர்களுக்குத் தொடர்ந்து துன்பம் தர, அவர்கள் மிகுந்த மனஉறுதியுடன் அவைகளைப் பொருட்படுத்தாமல் ஒன்றுபட்டு வாழ்கின்றனர். பெண்கல்வி மறுப்பு, இளமை மணம், இளம் விதவையர் துயரம், வரதட்சணைக் கொடுமை, வயதுக்கு வராத பெண்ணைச் செயற்கையாக மருந்து தந்து பாலுறவிற்கு ஆளாக்கும் கொடுமை, மாமியார்-நாத்தனார் கொடுமை என்று அந்தணச் சமூகத்தில் காணப்பட்ட அந்த நாளைய சீர்கேடுகளைச் சீர்திருத்தும் துணிச்சலான போக்கை இந்த நாவலில் அ.மாதவையா வெளிப்படுத்தி உள்ளார். விதவை மறுமணத்தை வலியுறுத்தி நாவல் எழுதியதில் அந்நாளில் மிகத் துணிச்சலான சாதனையை அ.மாதவையா செய்துள்ளார். இந்த நாவல் வெளிவந்த உடன் மரபுவாதிகள் மிகக் கடுமையாக இதனை எதிர்த்தனர் எனவும், பின்னர் காலப்போக்கில் இச்சீர்த்திருத்தத்தை ஏற்றனர் எனவும் அவரே இந்த நாவலின் இரண்டாம் பதிப்பில் (1924-ஆம் ஆண்டில்) கூறியுள்ளார். "சிலவாண்டுகளுக்குள் நம்மவர் அபிப்பிராயங்கள் எவ்வளவு திருந்தி முன் வந்திருக்கின்றன என்பதற்கு இதுவே தக்க சான்றாகும். மிகப் பல தலைமுறைகளாக ஒரே பழஞ்சுவட்டில் சுற்றி வந்துகொண்டிருந்த ஜன சமூக வாழ்க்கைப் பெருந்தேரானது, இவ்வண்ணம் புதுச்சுவடுகள் பற்றிப் புதியதோர் கிளர்ச்சியோடு நாளுக்குநாள் முன்னேற்றம் அடைந்துவரும் புத்தியக்கத்துக்கு நானுமே ஒரு சிறு தூண்டுகோலென நம்பி என் மனம் மகிழ்கிறது" (முத்து மீனாக்ஷி, முன்னுரை, பக்.iii, iv) என வரும் பகுதியால் இதனை அறியலாம்.

தில்லைக் கோவிந்தன், கிளாரிந்தா, சத்தியானந்தன் ஆகிய மூன்று நாவல்களும் அ.மாதவையாவால் ஆங்கிலத்தில் எழுதப்பட்டன. தில்லைக் கோவிந்தன், 1903-ஆம் ஆண்டில் ஆங்கில முதற்பதிப்பு வந்தது. 1916-ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் வெளியிடப்பட்டது. தில்லைக் கோவிந்தன் நாவலை அ.மாதவையா அவர்கள் தமிழர் நேசன் இதழில் முதல் அத்தியாயத்தை மட்டும் மொழிபெயர்த்துத் தொடராக வெளியிட்டார். பின்னர் அவருடைய சிறிய பேரன் வே.நாராயணன் எஞ்சிய பகுதிகளை மொழிபெயர்த்தார். 1944-ஆம் ஆண்டில் வே.நாராயணனின் மொழிபெயர்ப்பில் தில்லைக் கோவிந்தன் முழுமையாக வெளிவந்தது. மேனாட்டுக் கல்வி பயின்று அதன் வழியே

பெற்ற குறிக்கோள்களுக்கும் நடைமுறை வாழ்க்கைக்கும் தொடர்பின்றி இருக்கும் நிலையில் அல்லலுற்ற நிலையை இந்த நாவல் விளக்குகிறது. அகநோக்கில், தன்மைக் கூற்று நோக்குநிலையில் கதை கூறப்படுகிறது.

**சத்தியானந்தன்**

1909-இல் இந்நாவல் ஆசிரியரால் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டது. 1979-ஆம் ஆண்டில் திருமதி சரோஜினி பாக்கியமுத்து இதனைத் தமிழாக்கம் செய்து வெளியிட்டார். பழமையான வைதிகக் கட்டுப்பாட்டில் இருந்த அந்தணச் சமூகம் ஐரோப்பிய ஆட்சி முறையால் ஆங்கிலக் கல்வி கற்பதை ஏற்று கிறித்தவ சமயம் ஏற்படுத்திய தாக்கத்தால் மாற்றங்களுக்கு ஆளானதை இந்த நாவல் கூறுகிறது.

**கிளாரிந்தா**

1915-ஆம் ஆண்டில் ஆசிரியரால் ஆங்கிலத்தில் எழுதப்பெற்று வெளியிடப்பட்டது. 1976-ஆம் ஆண்டு சரோஜினி பாக்கியமுத்து இதனைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டார். இந்து சமயக் கட்டுப்பாட்டில் அந்தணர் சமூக அமைப்பில் காதல் மணம், கலப்பு மணம், விதவை மறுமணம் நடக்கச் சாத்தியமில்லை என்பதால், கிறித்தவராக மதம் மாறிய நிலையில் அத்தகைய காதல், மறுமணங்கள் நடைபெறுவதாக அ.மாதவையா படைத்துள்ளார். சாதி, சமயக் கட்டுப்பாடுகளிலிருந்து விடுபடவும் சமூகச் சீர்கேடுகளிலிருந்து விடுபடவும் இத்தகு மணங்களே ஏற்றவழி என அவர் காட்டும் போக்கு நடைமுறைக்கு ஏற்றவையாகப் படைக்கப்பட்டுள்ளன. கிளாரிந்தா என்னும் மராட்டி அந்தண விதவை, ஆங்கிலேய காப்டன் லிட்டில்டனை மணப்பதாக இந்த நாவலில் படைத்துள்ளார். ஆயினும் மதமாற்றத்தை ஆதரித்து அவர் எழுதவில்லை. மதங்களிலும் சாதிகளிலும் உள்ள குறைகளை, சீர்கேடுகளைக் கண்டிக்கும் அவர், மதப் பொதுமையை, மனித நேயத்தையும் மனிதனின் மேன்மையையும் தம் நாவல்களில் வலியுறுத்தினார். மனிதனை முன்னேற்ற, தளைகளிலிருந்து விடுதலை-பெற மனிதனுக்கு உதவும் நல்ல ஆசாரங்களை முழுமையாக ஆதரிக்கும் அவர், இவைகளுக்கு எதிரான, காலத்திற்கு ஒவ்வாத கட்டுப்பாடுகளை- துர் ஆசாரங்களை - மிகக் கடுமையாகச் சாடி, அவற்றை அடியோடு ஒழிக்கவேண்டும் என்கிறார். இதுவே, அவருடைய நாவல்கள் தரும் அடிப்படைச் செய்தியாகும்.

**லெப்டினன்ட் பஞ்சு**

1915-1916-ஆம் ஆண்டுகளில் இந்த நாவல் ஆங்கிலத்தில் எழுதப்பட்டு, வெளியிடப்பட்டது. இந்நாவலிலும் அ.மாதவையா

சீர்திருத்தக் கருத்துக்களை முன் வைத்துள்ளார். பஞ்சு என்னும் அந்தண இளைஞன் மருத்துவப் படிப்பில் தன்னுடன் உடன்படித்த கிரேஸ் என்னும் கிறித்தவப் பெண்ணைக் காதலிக்கிறான். காதல் கைகூடி திருமணத்தில் முடிவதாக நாவல் படைக்கப்படவில்லை. அந்த நாளைய சமூகப் படப்பிடிப்பாக இந்த நாவல் உள்ளது. அந்தண இளைஞர்கள் மருத்துவம் போன்ற உயர்கல்வி கற்று, நகர வாழ்விற்கு வந்து, தம் கல்வியால் உழைத்து வாழ்க்கை அமைத்து உயர்தகுதி அடையும்முறை மாறி வருவதை இந்நாவல் காட்டுகிறது. காதல் மணம், கலப்பு மணம் போன்றவை பெருகவே மரபுவழியான மணஞ்சார்ந்த கொடுமைகள் மறையும் என்று காட்டுகிறார். படித்து, அரசு அலுவல்களில் வருவோர், கல்வி கற்காத எளிய மக்களை ஏமாற்றிப் பொருள் சேர்க்கும் கொடுமைகளை இந் நாவலில் அ.மாதவையா கண்டிக்கிறார்.

**சிறுகதைகள்**

அ.மாதவையா நல்ல சிறுகதையாளராகவும் விளங்கியுள்ளார். ஆங்கிலத்திலும் தமிழிலும் அவர் அவ்வப்போது சிறுகதைகளைப் படைத்துள்ளார். 'குசிகர்' என்னும் புனைபெயரில் ஆங்கிலத்தில் எழுதி, அதன் பின்னர் ஆங்கிலத்தில் தொகுப்பாகவும், பின்னர் தமிழில் தொகுப்பாகவும் வந்த அவருடைய சிறுகதைகள் குசிகர் குட்டிக் கதைகள் ஆகும். ஆங்கிலத்தில் உறிந்து, சோஷியல் ரிபார்மர் அட்வகேட் இதழ்களில் வந்து பின்னர் தொகுப்பாக வந்துள்ளது. தமிழில் ஆசிரியரால் நேரடியாகப் பின்னர் எழுதப்பட்டு, சுதேசமித்திரன் இதழில் தொடர்ந்து வெளியிடப்பட்டு, 22 சிறுகதைகள் மூன்று தொகுதிகளாக ஆசிரியரால் 1924-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. சமூகக் குறைகளைக் கண்டிப்பதும் சீர்கேடுகளைச் சுட்டுவதுமே இச்சிறுக்கதைகளின் மையநோக்கங்களாகும். இதனை முன்னுரையில், "நமது வழக்கங்களில் சீர்கேடானவற்றை நயமாய் எடுத்துக்காட்டிக் கண்டிக்கும் கதைகளை..... படித்து, இவற்றில் உட்கிடக்கைகளைப் பற்றி உள்ளத்தில் ஊன்றி நினைத்துப் பார்த்து, முடிவான தீர்மானங்கள் செய்வது, நமது ஜனசமுதாய முன்னேற்றத்திற்கு இன்றியமையாததாகும்" என்று அவரே கூறுவதால் அறியலாம். சிறுகதைகளின் உள்ளடக்கத்துக்கு முதன்மை தந்து அவர் படைத்தார். குசிகர் குட்டிக் கதைகள் தவிர, தமிழிலும் ஆங்கிலத்திலும் இதழ்களில் அவர் படைத்த சிறுகதைகள் பல இன்னும் நூல்வடிவம் பெறாமல் உள்ளன. இவற்றுள் தமிழர்நேசன் இதழில் வெளியான 'சுவாதிக்கதை', பஞ்சாமிர்தம் இதழில் வெளியான 'நிலவரி ஏலம்', 'முருகன் ஆருடம்', 'ஏணியேற்ற நிலையம்', 'கண்ணன் பெருந்தூது' ஆகிய நான்கு கதைகள். 'இந்து' இதழில் 1923-'24 ஆம் ஆண்டுகளில் நாரதர் என்னும் புனை பெயரில் அவர் ஆங்கிலத்தில் எழுதிய 15 சிறு-

கதைகள் ஆகியன உள்ளன. இவை இன்னும் நூல் வடிவம் பெறவில்லை. இக்கதைகள் அ.மாதவையாவை நல்ல சிறுகதையாசிரியராக இனங்காட்டுகின்றன.

**நாடகம்**

அ.மாதவையா நாடகம் படைப்பதில் மிகுந்த ஈடுபாடு காட்டியுள்ளார். நாடகத்தைத் தம் கருத்தைக் கூறப் பயன்படும் இலக்கிய வகையாக அவர் எடுத்து ஆண்டுள்ளார். செய்யுள் நாடகம், உரைநடை நாடகம், மொழியாக்க நாடகம் என்பவற்றை அவர் படைத்துள்ளார். மணிமேகலை துறவு, அகவல் பாக்களால் ஈரங்க நாடகமாகப் படைக்கப்பட்டது. மணிமேகலை காப்பியத்தின் முதலிரு காதைகளைக் கொண்டு இந்தநாடகம் படைக்கப்பட்டது. திருமலை சேதுபதி (1910) உரைநடையில் அமைந்த நாடகம். வரலாற்று நாடகம் போன்று தோன்றிடினும், நாட்டுப்பற்றை விளக்கும் கற்பனை நாடகம். 'உரோமானிய சரித்திர அற்புத நவிற்சி' என்னும் கதைத் தொகுப்பில் உள்ள 'குஸ்மான் நல்லவன்' என்னும் கதையை அடிப்படையாக வைத்துப் படைக்கப்பட்ட கற்பனை இது. பாரிஸ்டர் பஞ்சநதம் (1924) நான்கு காட்சிகளால் ஆனது. ஐரோப்பிய மரபில் கொண்டுள்ள மோகத்தை அங்கத முறையில் கிண்டல் செய்யும் நாடகம் இது. 'உதயலன்' அல்லது 'கொற்கைச் சிங்களவன்' (1918) மொழியாக்க நாடகம் ஆகும். ஷேக்ஸ்பியரின் 'ஒத்தெல்லோ' நாடகத்தை அடிப்படையாக வைத்துக் கொண்டு மொழிபெயர்ப்பாக அன்றி மொழியாக்கமாகச் செய்துள்ளார். முன்னமே 15 ஆண்டுகளுக்கு முன் 1903-ஆம் ஆண்டில், ஒதெல்லோ நாடகத்தை அப்படியே சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்து ஷேக்ஸ்பியர் வரலாறு, அவர் படைத்த நூற்களின் பட்டியல், பொதுப்பாயிரம், நாடக வரலாறு, விளக்க உரை, குறிப்புரை ஆகியவற்றுடன் வெளியிட்டார். மொழிபெயர்ப்பாக அது அமைந்தது. கதையையும் பெயர்களையும் தமிழக மரபிற்கு ஏற்ப மாற்றியமைத்து மூல நூலின் உட்கருத்தொடு மட்டும் மாறுபடாது, தமிழ்மொழிக்கிணங்க மொழியாக்கம் செய்யப்பட்ட வடிவம் உதயலன். இந்த நூலின் இறுதியில் அனுபந்தமாக, முன்னுரை, ஷேக்ஸ்பியர் சரித்திரம், அவர் நாடகங்களின் பட்டியல், உதயலன் நாடகம், கதைமாந்தர் பற்றிய பண்பு விளக்க விவரம், முடிவுரை என்ற 13 பக்க ஆய்வுரை உள்ளது. இது அ.மாதவையாவின் புலமைத் திறத்தையும், படிக்கும் வாசகர்களுக்கு அந்நாடகம் பற்றிய அனைத்து விவரங்களைத் தரும் அவரின் பொறுப்புணர்வையும் ஒருங்கே சுட்டும். பிற்காலத்தில் தமிழில் தோன்றிய ஷேக்ஸ்பியர் நாடக மொழிபெயர்ப்பு, மொழியாக்கம் என்ற இருவகை சார்ந்த அனைத்து முயற்சிகளுக்கும் அ.மாதவையாவின் இந்த உதயலன் நாடகமே முன்னோடியாகவும் வழிகாட்டியாகவும் அமைந்தது. 'லெப்டினன்ட்

பஞ்சு' என்னும் ஆங்கில நாடகத்தையும், 'இராஜமார்த்தாண்டன்' என்னும் உரைநடை நாடகத்தையும் அவர் படைத்து உள்ளார். நாடகம் படைப்பதில் அவர் தொடர்ந்து ஆர்வம் காட்டிவந்தமையையும் புதிய நாடக இலக்கிய வகையான மொழிபெயர்ப்பு, மொழியாக்கம் ஆகியவற்றைப் படைத்து விரிவான முன்னுரை, அனுபந்தம் தந்த அவருடைய பொறுப்புணர்வையும் இவைகளில் காணலாம்.

ஐரோப்பிய நாடகங்களை-ஷேக்ஸ்பியர் நாடகத்தைத் - தமிழுக்கு அறிமுகம் செய்ததிலும் அ.மாதவையா முன்னோடியாக விளங்குகிறார். நாடகத்தில் உரையாடல்களைப் பேசும்போது, வெளிப்படுத்தவேண்டிய மெய்ப்பாடுகளையும் காட்டவேண்டிய உடல், முக அசைவுகளான அபிநயங்களையும் பிறைக்கோட்டு வளைவில் எழுதும் ஐரோப்பிய நாடகமுறையை அவர் எடுத்துரைத்தல் முறையில் - நாடக வகை எடுத்துரைத்தலை - பத்மாவதி சரித்திரம் நாவலிலும் விஜயமார்த்தாண்டம் நாவலிலும் எடுத்தாண்டு உள்ளார்.

**கவிதை**

அ.மாதவையா சிறந்த கவிதைகளைப் படைத்த கவிஞராகவும் திகழ்கிறார். கவிதை நூல்களையும் இசைப்பாட்டுக்களையும் படைத்து வெளியிட்டுள்ளார். ஆங்கிலக் கவிதைகளை அடிப்படையாகக் கொண்டு, அதனடிப்படையில் கவிதைகளை ஆக்கியுள்ளார். நாட்டுப்புறப் பாடல் வடிவில் இசைப்பாட்டுக்களைப் படைத்துள்ளார். ஆங்கிலத்தில் நிறையக் கவிதைகளைப் படைத்துள்ளார். அவருடைய முதல் படைப்பே 1892-ஆம் ஆண்டு மார்ச் இதழில் கிறித்தவக் கல்லூரி மலரில் தான் கல்வி கற்ற பள்ளிக்கூடம் பற்றி எழுதி வெளியிட்ட 16 பத்திகளாலான ஆங்கிலக் கவிதை ஆகும். இக்கவிதை வெளியானபோது அவருக்கு இருபது வயது நிறைவடையவில்லை. இதுபோன்ற 10 கவிதைகளை ஆங்கிலத்தில் வெவ்வேறு காலகட்டங்களில் அம்மலரில் 1910 முடிய எழுதியுள்ளார். இவை இன்னும் நூல் வடிவம் பெறவில்லை. 1903-ஆம் ஆண்டில் ஆங்கிலக் கவிதை நூல் Dox Vs Dox வெளியானது. 1914-ஆம் ஆண்டில் 'பொதுதர்ம சத் கீத மஞ்சரி' என்னும் இசைப்பாடல் தொகுப்பு வெளியிடப்பட்டது. 22 தலைப்புகளில் இந்நூலில் பாட்டுக்கள் உள்ளன. ஒவ்வொரு பாட்டிலும் எந்த மெட்டில் பாடவேண்டும் என்னும் குறிப்பு உள்ளது. இத்தொகுப்பில்தான் அ.மாதவையா பாடிய இந்தியக் கும்மி என்னும் 51 பகுதிகளால் ஆன கும்மிப்பாட்டு உள்ளது. இப்பாட்டு இரானடே பெயரில் நடத்தப்பெற்ற இசைப் பாடல் போட்டியில் முதல் பரிசைப் பெற்றதாகும். இது பற்றிய ஒரு வரலாறு உண்டு பொது தர்ம சத் கீத மஞ்சரி நூலின் முன்னுரையில், "பொது நன்மைக்காக உழைத்து வரும் எனது நண்பர் பிரும்மஸ்ரீ S.V. விசுவநாத அய்யர், இந்தியாவின் அருமை

பெருமைகளையும் சாமான்ய கல்வியும் கைத்தொழில்களாகிய நாகரிகங்களும் தழைத்து நாம் அபிவிருத்தி அடைதற்கான சாதனங்கள் பற்றி, எளிய நடையில், யாவர்க்கும் பயன்படும் வண்ணம் இயற்றப்படும் தமிழ்ப்பாட்டுக்களுக்கு, இரானடே கோகலே என்னும் தேசாபிமானிகள் பேரில், ரூ.300/- வரை பரிசுகள் கொடுப்பதாகப் பத்திரிகைகளில் பிரசுரஞ் செய்தார். அவ்விளம்பரப்படி வந்த கீதங்களில், இந்தியக் கும்மி தக்க மத்தியஸ்தர்களால், இரானடே தலைப்பரிசு தரப்பட்டது" என்று அ.மாதவையா கூறி உள்ளார். எனவே, போட்டியில் பங்குபெற்று இரானடே முதல் பரிசைப் பெற்ற பாட்டு, இந்திய தேசியக் கும்மி என்று ஆசிரியர் கூற்றால் அறிகிறோம். இந்தப் போட்டியில் மகாகவி சுப்பிரமணிய பாரதியார் கலந்துகொண்டு, 'செந்தமிழ் நாடென்னும் போதினிலே' என்னும் பாட்டை அனுப்பி வைத்தார். ஆயினும் போட்டியில் அ.மாதவையாவின் இந்தியக் கும்பி பாடலையே தலைப்பரிசிற்குரியது என்று தேர்வு செய்தனர்.

போட்டி பற்றிய விளம்பரத்தை இதழ்களில் கொடுத்ததுடன் நின்று விடாமல், எஸ்.வி. விசுவநாத அய்யர் அவர்கள், தமது நண்பர் தமிழறிஞர் ச.சோமசுந்தர பாரதியார் அவர்களுக்கு எழுதி, அவருடைய இலக்கிய நண்பர்களைப் போட்டியில் கலந்துகொள்ளுமாறு ஆவன செய்யச் சொல்லி வேண்டினார். நாவலர் சோமசுந்தர பாரதியும் தம் நண்பர்களான மகாகவி சுப்பிரமணிய பாரதியையும் மதுரை கந்தசாமி கவிராயரையும் கலந்து கொள்ளுமாறு கூறி எழுதினார். பாரதியார் கலந்துகொள்ளும் போட்டியில் அவரே முதற்பரிசு பெறுவார் என்பதால், தாம் போட்டியில் கலந்துகொள்ளாமல் விலகிக் கொள்வதாகவும் மதுரை கந்தசாமி கவிராயர் பதில் எழுதியதாகவும் நாவலர் ச.சோமசுந்தர பாரதியார், மகாகவி சுப்பிரமணிய பாரதியாரின் தம்பி சி.விசுவநாதன் அவர்களுக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார் (விவரம் : பெ.சு.மணி, பாரதியாரும் தமிழ்ப் புலவர்களும், ப.167) வேறு எத்தனை கவிஞர்கள் கலந்து கொண்டனர் என்ற விவரம் இன்று அறியக் கிடைக்கவில்லை.

இந்தியக் கும்பி என்னும் இசைப்பாடல் தொகுப்பைத் தவிர, 'புது மாதிரி கல்யாணப் பாட்டு' என்னும் 57 சரணங்களாலான இசைப் பாட்டுக்களைப் பாடி உள்ளார். இதுவும் நாட்டுப்புறப்பாட்டான கும்மிப் பாட்டு வடிவில் பாடப்பட்டுள்ளது. இந்தியக் கும்மி, புதுமாதிரி கல்யாணப்பாட்டு ஆகிய இரண்டிலும் சமூகச் சீர்கேடுகளைச் சாடும் போக்கு முதன்மையாக உள்ளது. இந்துதாசன் என்னும் புனைபெயரில், புதுமாதிரி கல்யாணப் பாட்டுக்களை வெளியிட்டுள்ளார்.

இவையேயன்றி, தமிழர்நேசன், பஞ்சாமிர்தம் இதழ்களில் அவ்வப்போது அவர் ஏராளமான கவிதைகளை எழுதிவந்துள்ளார்.

அவை இன்னும் தொகுப்பாக வெளிவரவில்லை. ஆங்கிலக் கவிதை களையும் தமிழ்க் கவிதைகளையும், மொழிபெயர்ப்புக் கவிதைகளையும் தழுவல் கவிதைகளையும் அவர் படைத்துள்ளார். 'பழைய நாள் நினைவு', 'கடவுள் கிருபை', 'இந்தியா என் அன்னையே', உலகமே மேன்மையாய் ஒழுகு', 'என் காதல் நிலைக்கும்' போன்ற மொழி பெயர்ப்புக் கவிதைகளைத் தமிழர் நேசன் இதழில் அவர் எழுதியுள்ளார். 'பஞ்சாமிர்தம்' இதழில் அமுதகவி என்னும் புனைபெயரில், 'எங்கள் கண்ணன்' 'உதயஞாயிறு', 'தாய்மொழி', (இசைப்பாடல்), பூதேவித் திருநாள்' புதிய கடவுள், 'படைப்பின்பப் பஞ்சகம், 'ஓர் அதிசயம்', 'தாய்-மக்கள் சம்பாஷணை (கீர்த்தனை)', 'தோழியைத் துயில் எழுப்புதல்', 'தன் நெஞ்சை அறிவுறுத்தல்', 'ஒரு விண்ணப்பம்', 'புதிய இந்தியா (கிளிக் கண்ணிகள்), 'லாலா லஜபதி வாழ்த்து', 'ஸரஸ்வதி பூஜை', 'உன் தாய் நாடு எது தெரியுமா? என்ற கவிதைகளையும் இசைப்பாட்டுக்களையும் படைத்துள்ளார். 'திடப்படுவீரே' என்னும் கவிதை ருட்யார்டு கிப்ளிங்கின் ஆங்கிலக் கவிதையைத் தழுவியும், 'பிறவிப்பேறு' என்னும் கவிதை ராபர்ட் பிரெளனிங்கின் கவிதையின் மொழிபெயர்ப்பாகவும் உள்ளன. 'தேச பக்தியையும் அறிவையும் வளர்ப்பதே என் முக்கிய நோக்கம். ஆதலால் அரிய பெரிய விஷயங்களை விட்டுக் கதைகளைப் பெருக்கத் தயங்குகிறேன்' (அ. மாதவையா, பஞ்சாமிர்தம், ப.890, மாசி, 1925) என்று அவரே எழுதியுள்ள பகுதி கவிதைகளில் தேச பக்தியையும் கனமான விஷயங்களையும் அவர் எழுதியதைக் காட்டும். 'புதிய இந்தியா' (பஞ்சாமிர்தம், ஆடி 1925, பக்.257-258) என்னும் கவிதையில் அ.மாதவையாவின் நாட்டுப்பற்று வெளிப்படுகிறது. நாட்டை விடுதலை பெறச் செய்து, சகல துறைகளிலும் நாட்டை மேன்மை அடையச் செய்யவேண்டும் என்னும் தம்முடைய உள்ளக் கிடக்கையை அவர் வெளியிடுகிறார். 'தாய்-மக்கள் சம்பாஷணை' (பஞ்சாமிர்தம், கார்த்திகை, 1924, பக்.630-633) என்னும் பாடல் அமைப்பு பாரதியாரின் 'தொண்டு செய்யும் அடிமை' பாடலை நினைவூட்டுமாறு உள்ளது.

'உங்களுக் குள்கல கங்கள் பொறாமைகள்
ஊழல்கள் ஓய்ந்தனவோ'

என்னும் பாரதத்தாயின் கேள்வியும்,

'சாதிமதம் தொழில் ஆகிய பேதங்கள்
தன்சுகம் தன்னலம் - ஆகிய
யாதும் எமையினிப் பேதியா தாக்குவம்
அன்னையே'

என்னும் மக்களின் பதிலும் நாட்டுப்பற்றை அழுத்தமாக எடுத்து உரைக்கின்றன. மக்களிடையே விரைந்து பரவவும் எளிமையாகப்

பாடவும் உதவும் முறையில், நாட்டுப்புற இசைப்பாடல் மரபில் கும்மி, சிந்து, கண்ணி, கீர்த்தனை, வினா-விடை (தர்க்கப்பாட்டு) பாட்டு மரபில் - அவர் இப்பாட்டுக்களைப் படைத்துள்ளார். 'தாய்-மக்கள் சம்பாஷணை' பாட்டில் 'வந்தேமாதரம்' என்னும் சொல்லை அருமையாக அவர் ஆண்டுள்ளார். விகடப்பா (Parady) என்னும் முறையில், பழைய கவிதை முறையில் - சங்கப்பாடல், குறள் ஆகியவற்றின் அமைப்பு முறையில் - இன்றைய நடைமுறை வாழ்வின் பிரச்சினைகளை எடுத்துரைக்கும் பாங்கில், புதிய கவிதைகளைப் பஞ்சாமிர்தம் இதழில் அவர் படைத்துள்ளார். ஆங்கிலத்தில் இரு கவிதை நூல்களைப் படைத்துள்ளார்.

**உரைநடை நூற்கள்**

அ.மாதவையா தம்முடைய சமூகச் சீர்திருத்தக் கருத்துக்களைக் கவிதை நாடகம், சிறுகதை, நாவல் என்னும் படைப்பிலக்கியங்கள் வழி வெளிப்படுத்தினார். அத்துடன், உரைநடையில் அமைந்த வரலாறு, கட்டுரை நூற்கள், சிறுவர் நூல், திறனாய்வுக் கட்டுரைகள் என்பன வழியேயும் கூறிவந்தார். நாட்டு விடுதலை என்னும் அரசியல் விடுதலை-யுடன் சமூக விடுதலையையும் அவர் பெரிதும் வலியுறுத்தினார். விடுதலை பெற்று, சகல துறைகளிலும் மேன்மை பெற வேண்டும் என அவர் இவற்றில் வலியுறுத்தினார். சமூகச் சீர்கேடுகளை நீக்கி, தளை-களிலிருந்து விடுதலை பெறவேணடும் என்று அவர் மீண்டும் மீண்டும் வலியுறுத்தினார். ஆகவே, எந்த வகையாக இருந்தாலும் அவர் படைப்புகளில், உள்ளடக்கம் கனமான ஒன்றாக, படிப்பவரைச் சிந்திக்க வைப்பதாக இருக்கும். பஞ்சாமிர்தம் இதழின் முதல் இதழிலே 'மேல் சாதிக்காரர்கள் தம் போக்கை மாற்றிக் கொண்டால் நாடு மேன்மை அடையும்' என்று அவர் எழுதியது, சாதியமைப்பில் உள்ள சீர்கேடுகளைப் போக்கி, சீர்திருத்தம் செய்யும் நோக்கில் எழுதப்பட்டதாகும். அவர் படைத்துள்ள உரைநடை நூற்களைக் கட்டுரை, வரலாறு, சிறுவர்க்கான கதை நூல் என்று வகைப்படுத்திக் காணலாம். நூல் வடிவில் வராத தமிழ், ஆங்கிலக் கட்டுரைகள் நிறைய உள்ளன. 1892-ஆம் ஆண்டு ஆகஸ்ட் முதல் நவம்பர் முடிய நான்கு மாதங்களில் விவேக-சிந்தாமணி இதழில் நான்கு பாகங்களாக, பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் மனோன்மணியம் நாடகம் பற்றிய திறனாய்வை அ.மாதவையா எழுதியுள்ளார். அவருடைய இருபது வயதில் இக்கட்டுரை வெளிவந்து உள்ளது. அவருடைய முதல் திறனாய்வுப் படைப்பும் இதுவே. 'ஆசாரச் சீர்திருத்தம்' என்னும் நூலை 1917-இல் அவர் எழுதி வெளியிட்டார். இது, ஈரோட்டில் நடைபெற்ற மாநாட்டில் அவர் ஆற்றிய தலைமை உரை ஆகும். வருணாசிரமம், பெண் கல்வி பாலிய விவாகம், வைதவ்யம், பிற தேச யாத்திரை ஆகிய தலைப்புகளில் கட்டுரைகள்

உள்ளன. அவைகளுடன் நவீன உறிந்து மதம், விவாக ஸமஸ்காரமும் மந்திரங்களும் மக்கள் தொகை கணக்கு சில குறிப்புக்கள் என்பன பின் இணைப்புக்களாக உள்ளன. இந்த நூலில் மனிதன் பின்பற்ற வேண்டிய நல்ஒழுக்கங்களையும் (ஸதாசாரம் நல் ஒழுக்கம்), பின்பற்றத் தகாத - விலக்க வேண்டிய - தீய ஒழுக்கங்களையும் (துராசாரம்) கூறுகிறார். "நம்முடைய யுக்தி, புத்திக்குப் பொருந்தியதும் மனசாக்ஷி ஒப்பியதும், அபிவிருத்திக்கு ஏற்றதும், பிறர் அனுபவத்தில் நற்பயனை விளைவிப்பதுமான ஆசாரம் ஸதாசாரம்" என்கிறார் அ.மாதவையா (ஆசாரச் சீர்திருத்தம், ப.8). "மனித வளர்ச்சிக்குப் பொருந்தாத ஆசாரங்கள் எவ்வளவுதான் விதிக்கப்பட்டதாயினும், அவை விலக்கப்பட வேண்டிய துராசாரங்கள்" (ஆசாரச் சீர்திருத்தம், ப.8) என்றும் அவர் கூறுகிறார். உயர்சாதியினரான அந்தணர்களின் சமூகக் குறைபாடுகளைச் சுட்டி சீர்திருத்துவதை முதல் நோக்கமாக அவர் இந்நூலில் மையப்படுத்தினார். சாதிப்பகுப்பு, பெண் கல்வி மறுப்பு, இளமை மணம், விதவையர் துயரம் ஆகிய சீர்கேடுகளை மிகக் கடுமை யாக இந்நூலில் அ.மாதவையா கண்டித்துள்ளார். சாதிக்கட்டு என்ற பெயரால் மேற்சாதி மக்கள் (அந்தணர், வேளாளர்) அடிமட்டத்து உழைக்கும் மக்களைக் கொடுமைப்படுத்துவதற்கு எதிராகக் குரல் எழுப்பி, உயர்சாதியினரின் ஆசாரங்களைச் சீர்திருத்தம் செய்ய வேண்டும் என வலியுறுத்துகிறார் இந்த நூலில். இளமை மணத்தால் பெண்களின் உடல் நலனும் மனநலனும் பாதிக்கப்பட்டுத் துன்புறுகின்றனர். "பெண்கள் வயிற்றுவலி, பேய் பிடித்தல் முதலிய நோய்களால் படும் கஷ்டங்களையும் அவர்களின் அகால மரணத்தையும் நாம் வீடுதோறும் குடும்பந்தோறும் பார்க்கிறோம்" (ஆசாரச் சீர்திருத்தம், ப.17) என்று அழுத்தமாகக் கூறி, இச் சீர்கேடுகளை ஒழிக்கப் பெண்ணுக்குக் கல்வி, உரிய வயதில் மணம், விதவை மறுமணம், சொத்தில் சமபங்கு என்பனவற்றைத் தீர்வுகளாக அந்நாளிலே முன் வைத்தார். பெண் விடுதலை அவருடைய மிகத் தீவிரமான நிலைப்பாடு என்பதை இந்த நூல் காட்டும். காதல் மணத்தை அவர் வலியுறுத்தினார். இந்த நூலில் 'ஆசாரச் சீர்திருத்தம்' மிகப் பெரிய பங்களிப்பாக அமைந்துள்ள நூலாகும்.

**வரலாறு**

புத்த சரிதை, தட்சிண சரித்திர வீரர், தளவாய் முதலியார் குடும்ப வரலாறு ஆகிய வரலாறுகளை உரைநடையில் தமிழில் அ.மாதவையா படைத்தார். ஆங்கிலத்தில் அதுபோல இராமாயணக் கதை, மணிமேகலை, நந்தன், மார்க்கண்டேயன், தளவாய் முதலியார் ஆகிய உரைநடை நூல்களை வரலாறு கூறுவனவாகப் படைத்தார். அடிமைப்பட்டுக் கிடந்த சமூக மக்களுக்கு அவர்களின் நாட்டு வரலாற்றையும் இன வரலாற்றையும்

எடுத்துக்கூறும் வண்ணம் தட்சிண சரித்திர வீரர் வரிசையை அவர் பஞ்சாமிர்தம் இதழில் தொடர்ந்து எழுதினார். பின்னர் அக்கட்டுரைகளை நூலாகவும் தொகுத்து அவர் வெளியிட்டார். கௌதம புத்தரின் வாழ்க்கை வரலாற்றையும் அவருடைய அருளுரைகளையும் விளக்கும் வகையில் சித்தார்த்தன் என்னும் நூலை 1918-இல் வெளியிட்டார். இந்த நூல் 12 இயல்களால் ஆனது. இந்த நூலின் பின் இணைப்பாக - அனுபந்தமாக -78 பாடல்களால் ஆன புத்தசரிதை உள்ளது. எட்வின் ஆர்னால்டு ஆங்கிலத்தில் எழுதிய ஆசியசோதி (The Light of Asia) நூலின் அடிப்படையில், அதனைப் பாடல்களாக மொழியாக்கம் செய்து உள்ளார். சித்தார்த்தன் நூலின் முன்னுரையில் "ஸர் எட்வின் ஆர்னால்டு என்பார் இயற்றியுள்ள ஆசியசோதி என்னும் அருமை நூல் எனக்குப் பேருதவியா யிருந்தது. அத் தொடர்நிலைச் செய்யுளில் எனக்குரிய அளப்பரிய பற்றினால், அதனைத் தமிழ்ப்பாக்களில் ஒரோ வழி மொழி பெயர்த்தமைக்கும் அவாவுற்று, சில்லாண்டுகளுக்கு முன் பாடத் தொடங்கியது, நடுவில் தடைப்பட்டு முடிவுபெறவில்லை. ஒழிவு நேரமும் உடல் வலியும் குன்றிக் கொண்டுவரும் இந்நாளிலே, இனி நான் அதைப்பபாடி முடிப்பேன் என்னும் நம்பிக்கையற்று, பாடியுள்ள பாக்களை மட்டும் இத்துடன் சேர்த்து வெளியிட்டு இருக்கிறேன்" (அ.மாதவையா-சித்தார்த்தன், முன்னுரை பக்.vi - viii) என்று கூறுவதால் அறியலாம். ஆர்னால்டின் ஆசியசோதி முழுவதையும் தமிழில் மொழியாக்கம் செய்து வெளியிட அ.மாதவையா எண்ணி அதில் பெரு விருப்புற்று, ஈடுபட்டு அவ்வப்போது எழுதி வந்துள்ளார் என்பதை இம் முன்னுரையால் அறிகிறோம். 1918-ஆம் ஆண்டில் இப்பாடல்கள் வெளியிடப்பட்டுள்ளன. எனவே, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை எழுதிய 'ஆசியஜோதி' (1944) நூலிற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னமே அ.மாதவையா இப்பணியை ஆற்றியுள்ளார் என்பது இங்கு அறியத்தக்கது. புத்தர் வரலாற்றை எழுதுவதற்கு உ.வே.சா. அவர்கள் எழுதிய புத்தர் சரித்திரம் நூல் துணையாக இருந்தது என்று முன்னுரையில் கூறியுள்ளார். பிறப்பு காரணமாகச் சாதி வேறுபாடுகளும் பழக்கவழக்கங்களும் காரணமாக நாடெங்கும் காணப்பட்ட அழுக்காறு, அவா, அறியாமை, பகைமை முதலியன மேலோங்கி இருந்த நாளில், புத்த பகவான் தோன்றி தம் அருளுரைகளைப் பரப்பினார். எனவே, சாதிப் பழக்கவழக்கங்கள் என்னும் நடைமுறைகளில் காணப்பட்ட சமூகச் சீர்கேடுகளைச் சீர்திருத்தும் நோக்கத்தை முதன்மையாகக் கொண்டு தம் படைப்புக்களை எழுதிய அ.மாதவையா, புத்தர் வரலாற்றையும் அருளுரைகளையும் ஈடுபாட்டோடு எழுதினார்.

தளவாய் முதலியார் குடும்ப வரலாறு (1925) என்னும் நூல் உரைநடையில் தமிழில் எழுதப்பட்ட வரலாறு ஆகும். முன்னமே ஆசிரியர்

ஆங்கிலத்தில் எழுதிய தளவாய் முதலியார் (Dalavai Mudaliar - 1924) நூலினை அடியொற்றி அவரே எழுதியதாகும். தட்சிண சரித்திர வீரர் (1925) என்னும் நூல் முதலில், பஞ்சாமிர்தம் இதழில் தொடர் கட்டுரைகளாக வெளிவந்து, பின்னர் நூலானது. பஞ்சாமிர்தம் இதழில் (1924-ஆம் ஆண்டு கார்த்திகை இதழில்) முதன் முதலில் இத்தொடர் தொடங்கியபோது, அ.மாதவையா இத்தொடரின் நோக்கம் பற்றி விளக்கினார். நம்முடைய வரலாற்று மரபின் பரந்து விரிந்த தொடர்ச்சியை அறியவும் நம்முடைய பழைய நிலையை அறிந்து கொள்ளவும் நம் முன்னோர்களான தென்னக வரலாற்றுத் தலைமை மாந்தர்கள், வீரர்கள் பற்றி அறியவும் உதவும் வண்ணம் இம்முயற்சியை மேற்கொண்டதாக அ.மாதவையா கூறுகிறார்: "சரித்திரம் வனைவதில், நாம் நன்கறியாத பழக்கவழக்கங்கள் நடைபெறும் வேற்றுப் பிரதேசங்களில் விளங்கினோரைப் பாத்திரங்களாகக் கொள்வதினும், நமது நேர் முன்னோர் எனத்தகும் தென்னாட்டினரையே கொள்வது மிகப் பலனளித்து, படிப்பவர் மனத்தில் பழத்தில் ஊசி போல் இறங்கி, வேரூன்றி, சரித்திர உணர்ச்சியையும் நமது தொன்னிலை பற்றிய அறிவையும் வளர்க்குமென்று கருதி, தென்னிந்திய சரித்திர வீரர் சிலர் வரலாறுகளை எழுதலானேன்" (அ.மாதவையா, பஞ்சாமிர்தம், ப.700, கார்த்திகை, 1924) என வரும் பகுதி இதனை வலியுறுத்தும். அடிமைப்பட்டுக் கிடந்த மக்களுக்கு அவர்தம் தொன்னிலையையும் பெருமையையும் எடுத்துக் கூறவும், இந்தியர்களுக்குச் சரித்திர உணர்வு குறைவு என்று பழித்துரைக்கும் மேனாட்டாருக்கு, குறிப்பாக ஆங்கிலேயர்களுக்கு - பதிலடி கொடுக்கவும் இத்தகு வரலாற்றுக் தொடர்களை அவர் எழுதினார். கட்டுரைத்தொடர் எழுதியதுடன் வரலாற்றுணர்வை ஊட்டும் சரித்திரக் கதைகள் தொடர் ஒன்றையும் அவர் பஞ்சாமிர்தம் இதழ்களில் எழுதினார். 'மோகினிமாசா' என்னும் தலைப்பில் மகம்மது யூசுப்கான் வரலாற்றையும் விரிவாக எழுத எண்ணி முதலிரு இயல்களை (அத்தியாயங்களை) எழுதி வைத்திருந்த நிலையில், அவர் அமரராகிவிடவே, அவர் மறைவிற்குப் பிறகு வெளிவந்த 1925-ஆம் ஆண்டு கார்த்திகை மாதப் பஞ்சாமிர்தம் இறுதி இதழில் மோகினிமாசா முதலிரு இயல்கள் மட்டும் வெளியிடப் பெற்றன. அ.மாதவையாவின் நினைவைப் போற்றும் வகையில், மா. அனந்த நாராயணன் அவர்களின் சிறிய குறிப்புடன் வெளியிடப்பட்டுள்ளது.

உரைநடையிலான கதை நூல்கள் வரலாற்று நூல்களை ஆங்கிலத்திலும் அ.மாதவையா எழுதியுள்ளார். 1914-ஆம் ஆண்டில் இராமாயணக்கதை (The Story of Ramayana) நூலை வெளியிட்டார். உயர்ந்ததாகவும் பயன்படத்தக்க முறையிலும் மேன்மேலும் சிறந்ததாகவும் ஒவ்வொருவரும் வாழவேண்டும் எனவும் அதற்கு இராமாயணக் கதை

உதவ வேண்டும் எனவும் அதற்காகவே இராமாயணக் கதையைத் தாம் ஆங்கில வாசகர்களுக்காக எழுதியுள்ளதாக அ.மாதவையா முன்னுரை-யில் கூறி உள்ளார். அவ்வாறே மார்க்கண்டேயன், நந்தன், மணிமேகலை வரலாறுகளையும் தமிழ் அறியாத வாசகர்களுக்காக ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். 1922-இல் மார்க்கண்டேயன் (Markandeya) நூல் வெளிவந்தது உள்ளது. மணிமேகலை (Manimekalai) 1923 ஆம் ஆண்டில் வந்தது. மணிமேகலையின் கதைப்போக்கும் அறக்-கருத்துக்களும் இன்றைய சூழலுக்கு மிகவும் பொருந்தும் என்பதால், அதனை எழுதி வெளியிடுவதாக முன்னுரையில் அ.மாதவையா எழுதியுள்ளார். 20 இயல்களில் மணிமேகலை காப்பியக் கதை சுருங்கிய அளவில் தரப்பட்டுள்ளது. ஒவ்வோர் இயலின் தொடக்கத்திலும் மணி-மேகலை பாடல் அடிகள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. இம்மொழி பெயர்ப்பை மட்டும் ஆசிரியரின் மகள் இலட்சுமி அம்மாள் செய்துள்ளார் என்று அ. மாதவையாவின் முன்னுரையால் அறிகிறோம். நந்தன் (Nanda) 1923 ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இந்த நூலின் முதற்பதிப்பிற்கு அ.மாதவையா சிறிய ஒரு முன்னுரை எழுதியுள்ளார். அதில் பெரியபுராணம், கோபாலகிருஷ்ணபாரதியாரின் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை, காலஞ்சென்ற பி.ஆர்.இராஜம் அய்யர் ஆங்கிலத்தில் எழுதியுள்ள நந்தன் ஆகிய மூன்று நூல்களையும் தம்முடைய நூலுக்கு முன்னோடிகளாகக் கொண்டாலும், எந்த நூலையும் அப்படியே பின்பற்றாமல் தம் போக்கிலே தாம் எழுதியுள்ளதாகக் கூறி உள்ளார். இந்த முன்னுரையிலிருந்து நமக்குக் கிடைக்கும் அரிய செய்தி கமலாம்பாள் சரித்திரம் நாவலை எழுதிய பி.ஆர்.ராஜம் அய்யர் ஆங்கிலத்தில் நந்தன் கதையை நூலாக எழுதியுள்ளார் என்பதாகும். கோபாலகிருஷ்ணபாரதியின் இசை நாடகமான நந்தனார் சரித்திரக் கீர்த்தனை நூலைப் பெரிதும் அப்படியே பின் பற்றியே ராஜம் அய்யர் தம் நந்தன் நூலைப் படைத்துள்ளார் எனவும் இம்முன்னுரையால் அறிகிறோம். இராஜம் அய்யருக்கு வேதாந்தம், தத்துவம், பக்தி மரபுகளில் பெரிதும் ஈடுபாடு இளமை முதலே இருந்ததால், பக்தி நோக்கில் நந்தன் கதையைப் பார்த்து, அந்த நோக்கிலே ஆங்கில வாசகர்களுக்காக நந்தன் கதையை ஆங்கிலத்தில் தந்துள்ளார். கமலாம்பாள் சரித்திரம் எழுதிய நாவலாசிரியர் ராஜம் அய்யர் நந்தன் பற்றி இப்படி ஒரு நூலை எழுதி உள்ளதை இதுவரை அவரைப் பற்றி எழுதிய திறனாய்வாளர் யாருமே வெளிப்படுத்தாதது வியப்பான செய்தியாகும்.

அ.மாதவையாவின் நந்தன் நூல் எழுதப்பட்டதன் காரணம், சாதி முறை யிலான நம் சமூக அமைப்பில் இன்னமும் ஒடுக்கப்பட்டு உரிமைகளின்றித் துயர வாழ்வு வாழும் அடிமட்ட மக்களைப் பற்றி

விழிப்புணர்ச்சி ஏற்படுத்த வேண்டும்; ஒடுக்கப்பட்ட மக்களுக்கு மேன்மைகளும் உரிமைகளும் கிட்டவேண்டும் என்பதாகும். இதனை நூல் நெடுக அவர் கூறியுள்ளார். "இந்து சமயம் நால் வருணப் பாகுபாட்டை ஏற்றுக்கொண்டு பின்பற்றி வருகிறது. தீண்டத்தகாத அடிமட்ட மக்கள் பஞ்சமர் எனப்படுகின்றனர். ஒவ்வொரு வகுப்பினரும் அவரவர் கடமைகளைத் தவறாமல் செய்யவேண்டும். தன் இனத்திற்குரிய கடமைகளைச் செய்யாமல் புறக்கணிப்பதோ தன்னிலும் மேலான இனத்து மக்களுக்கு உரிய உரிமைகளைத் தானும் அடைய எண்ணுவதோ பாவம் ஆகும்" (ப.4, அ.மாதவையா, நந்தன்) என்று வரும் முதல் இயல் கருத்தும், "ஆனால்... இன்றும் நம்மிடையே வாழும் நந்தனின் சகோதரர்களான பஞ்சமர்கள் பல நூற்றாண்டுகளுக்கு முன் நந்தன் வாழ்ந்த நிலையிலேயே உள்ளனர். நந்தனின் சகோதரர்களான பஞ்சமர் மக்களுக்குக் கோயில்களில் நுழைவதற்குக்கூட உரிமையில்லை. இந்தப் பாடத்தையா உயர்சாதியினருக்கு நந்தன் கற்றுத் தந்தான்? ஆகவே, உயர்ந்த தாழ்ந்த எந்த இனத்தவராக நாம் இருந்தாலும், இதனை நம் சிந்தனையில் எண்ணிப் பார்க்கவேண்டும். மனிதர்கள் அனைவரிடமும் சகோதர உணர்வையும் கடவுளின் தந்தை உணர்வையும் காட்டுமாறு நாம் நாளும் வாழவேண்டும்" (A. Madhavaiah, Nanda, pp.81-82) என்னும் இறுதி இயல் கருத்தும் இதனை வலியுறுத்தும். சாதியின் பெயரால் நடக்கும் கொடுமைகளை அடியோடு நீக்க வேண்டும் என்று தொடர்ந்து தம் படைப்புக்கள் பலவற்றில் எழுதிவந்த அ.மாதவையா நந்தன் கதையையும் அதே நோக்கில் எழுதியுள்ளார்.

சிறுவர்களுக்காக அவர் பாலஇராமாயணம், பால விநோதக் கதைகள் ஆகியவற்றை எழுதி வெளியிட்டுள்ளார்.

நூலாக வெளிவந்துள்ளவை தவிர, இன்னும் நூல் வடிவம் பெறாத அவர் பல்வேறு இதழ்களில் எழுதிய பல்வேறு பொருட்களிலான கட்டுரைகள் நிறைய உள்ளன. தம்முடைய இருபதாம் வயதில், ஆங்கிலத்தில் மனோன்மணியம் நாடகம் பற்றிய திறனாய்வை நான்கு பாகங்களாக விவேகசிந்தாமணி இதழில் எழுதியது முதல் பஞ்சாமிர்தம் இதழின் இறுதி இதழில் 1925-ஆம் ஆண்டில் அவர் மறைவிற்குப் பின் வந்த கட்டுரைகள் முடிய அவர் எழுதிய கட்டுரைகள் ஏராளம். விவேக-சிந்தாமணி, சென்னை கிறித்தவக் கல்லூரி மலர், தமிழர் நேசன், பஞ்சாமிர்தம் என்னும் பல்வேறு இதழ்களில் தமிழிலும் ஆங்கிலத்திலும் அவர் எழுதியுள்ள பல கட்டுரைகள் நூலாக்கம் பெறாமலேயே இன்னும் உள்ளன. அரிய பெரிய விஷயங்களையே-கனமான கருத்தாழமிக்க, படிப்பவரைச் சிந்திக்கத் தூண்டும் செய்திகளையே - அ.மாதவையா தொடர்ந்து எழுதியுள்ளார். தொடக்கத்தில், சென்னை கிறித்தவக் கல்லூரி

மலரில் மாதங்கி, திரிபுராந்தகம், தில்லை கோவிந்தன் கலவை (5 பகுதிகளைக் கொண்ட தொடர் கட்டுரை) போன்ற கட்டுரைகளைப் படைத்தார். இவை ஆசிரியரின் இலக்கிய ஈடுபாடடையும் சமய அறிவையும் திறனாய்வு நுட்பத்தையும் காட்டும். மாதங்கி என்னும் பெயருடைய நாட்டுப்புற பெண் தெய்வம் பற்றிய ஆய்வு 'மாதங்கி-ஆர்வமூட்டும் சமய நிறுவனம்' என்னும் பெயரில் டிசம்பா 1905-ஆம் ஆண்டு சென்னை கிறித்தவக் கல்லூரி மலரில் வெளியானது. ஆந்திர மாநிலம், கர்னூல் மாவட்டம் கம்பம் என்னும் ஊரின் மேற்கில் உள்ள துடிமல்ல கிராமத்தின் அருகிலுள்ள குன்றில் உள்ள இந்துக்கோயிலில் சிதைந்த இடிபாடுகளில் மாதங்கி என்ற பெண் தெய்வ உருவங்கள் உள்ளன. தமிழில் உள்ள மதங்கியார் என்பதற்கும் இந்த மாதங்கி என்பதற்கும் தொடர்பு இருக்கலாம் என்று காட்டுகிறார் அ.மாதவையா. மிக நுட்பமான ஆய்வு இது. தில்லை கோவிந்தன் கலவை என்னும் தொடர் கட்டுரை, (i) பெண் - இரு கருத்து நிலைகள்; (ii) உண்மைத்தன்மை, (iii) சாதி, (iv) நாட்டுப்பற்று, (v) சமயச் சீர்த்திருத்தம் என்னும் ஐந்து பகுதிகளைக் கொண்டதாக ஆக்டோபர் 1906-ஆம் இதழிலிருந்து ஜூலை 1907-இதழ் முடிய வந்துள்ளது. அ.மாதவையாவின் சீர்திருத்தச் சிந்தனைகள் இத்தொடரில் மிக அழுத்தமாக - ஆணித்தரமாக வெளிப்பட்டு உள்ளன. "இந்தியப் பெண்ணுக்கு மட்டும் கற்பு, குருட்டுத்தனமான கீழ்ப்படிதல், தானே முன்வந்து சுயதியாகம் செய்தல் ஆகிய ஒழுக்க விழுமியங்களைச் சுமத்தியுள்ளது. இதுவே நாட்டிற்குக் கேடாக அமைந்துள்ளது' என்று பெண்நிலையைக் கூறி, பெண்ணுக்குச் சமத்துவம் வேண்டும் என வலியுறுத்துகிறார். "சம்பூர்ண சுயராஜ்ஜியம் அரசியல் ரீதியில் பெறுவதல்ல. வறுமை, அறியாமை நீங்கித் தாழ்த்தப்பட்டவர்கள் விடுதலை பெற்றுச் சமமாகிற போதுதான் அந்தச் சுயராஜ்யம் கிடைக்கும்" என்று நாட்டின் முழுமையான விடுதலை பற்றி அவர் விளக்குகிறார். இன்னும் கூட, அந்த முழுமையான விடுதலை நமக்கு கிடத்துவிட்டதாகக் கூற முடியாது. இதே கருத்தைப் பின்னர் பஞ்சாமிர்தம் இதழில் "இந்தியர் அனைவரும் சமத்துவமான நிலையில் வறுமை நீங்கி, அறியாமை களைந்து வாழக்கூடிய நாள்தான் சம்பூர்ண சுயராஜ்ஜியத்தை அனுபவிக்கும் நல்லநாள்" (அ.மாதவையா, பஞ்சாமிர்தம், ப.444, புரட்டாசி 924) என்று விளக்கினார். ஆகவே அவரின் எண்ண ஓட்டத்தில், இது ஆழப் பதிந்த தொலை நோக்குடடைய சிந்தனை ஆகும்.

தமிழர் நேசன் இதழில், கட்டுரைகள் பலவற்றை அ.மாதவையா எழுதினார். தனிக்கட்டுரை, தொடர்கட்டுரை, மொழிபெயர்ப்புக்கட்டுரை என்ற நிலைகளில் அவர் படைத்துள்ளார். இவை தவிர 'தமிழ்ச் செல்வம்'

என்ற தலைப்பில் கலித்தொகை, புறநானூறு, சிலப்பதிகாரம், மணி-மேகலை, கம்பராமாயணம், நளவெண்பா முதலான பழந்தமிழ் இலக்கியங் களிலிருந்து தேர்ந்து எடுத்த பாடல்களுக்கு விளக்கமான உரை தந்து, சூழலை விளக்கி, கவிதையைச் சுவைக்கச் செய்யும் பகுதிகளைத் தந்துள்ளார். 'தமிழ் இலக்கிய அபிவிருத்தி' என்னும் நீண்ட கட்டுரை, 'என் புத்தகங்களின் மத்தியில்', 'பழைய நாள் நினைவு', என்னும் கட்டுரைகள் 'உலக சரித்திரம்' என்ற அறிவியல் தொடர் கட்டுரை ஆகியவற்றைப் படைத்துள்ளார். 'இந்துக்களின் கல்வி அபிவிருத்தி' என்னும் கட்டுரை மொழிபெயர்ப்பாக எழுதப்பட்டு உள்ளது. இக் கட்டுரை களிலும் ஆசிரியர் கனமான செய்திகளை, அறிவுத் தூண்டலான செய்திகளை நுட்பமாகத் தந்துள்ளார். தமிழ் இலக்கிய அபிவிருத்தி கட்டுரை மிக நுட்பமான ஆய்வாக உள்ளது. "கவிதை என்பது செய்யுளில் அமைந்துள்ள எதுகை, மோனை, மடக்கு போன்ற சொல்-விளையாட்டுக்களில் அமைவதில்லை. இவ்வோசை நயத்தைவிடக் கவிதை பெரிது. சொற்புரட்டுக்களையே காவியத்தின் இன்றியமையாப் பண்பாகக் கொள்ளுவது, கூத்தில் கோமாளியைத் தலைமைப் பாத்திரமாகக் கொள்ளுவது போலாகும்" (தமிழர் நேசன், மே, 1920, பக்.263) என்றும், "உரைநடையில் நூல்களைப் படைக்கிறபோது எளிய நடையில் தனித்தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தவேண்டும். தனித்தமிழ்ச் சொற்களைத் தவிர பிறசொற்களைக் கையாள முடியாதென்று பிடிவாதம் செய்தால் நடையழகு குன்றி விடும்" என்றும் இக்கட்டுரையில் அ.மாதவையா எழுதினார். இலக்கியம், அதன் உள்ளடக்கம், அறிவு நூல்களிலிருந்து இலக்கியம் வேறுபடும் பாங்கு, மரபான பழைய காவியம் சிற்றிலக்கியம் போன்ற செய்யுள் நூல்களை எவ்வாறு இன்றைய நாகரிகக் கொள்கைக்கு ஏற்பத் தேர்வுசெய்து கற்பது, உரைநடை இலக்கிய வகைகள், உரைநடை இலக்கியத்தில் அமையும் நடை என்பன பற்றி அவருக்குத் தெளிவான அறிவும் பார்வையும் இருந்தன. மேலை நாட்டு இலக்கிய அறிவும், நம் தமிழ் இலக்கிய அறிவும் பரந்த அளவிலும் ஆழமான முறையிலும் அவரிடம் காணப்பட்டன. இவற்றைத், தம் காலச் சமூகத் தேவைக்கும் தனிமனித மேம்பாட்டிற்கும் ஏற்ற முறையில் சீர்திருத்தக் கருத்துக்களுடன் வெளியிட உரமாக ஆக்கிக் கொண்டதில்தான் அவருடைய மேதைமை வெளிப்பட்டுள்ளது.

பஞ்சாமிர்தம் இதழில் தொடர் கட்டுரைகளையும் நடைச் சித்திரத்தையும் பத்திராதிபர் குறிப்புக்கள், பொறுக்கு மணிகள், சுற்றுப் பயணம், நூல் மதிப்புரை, மொழி பெயர்ப்புக் கட்டுரை ஆகியவற்றையும் அவர் படைத்துள்ளார். இக்கட்டுரைகளில் அரசியல், வரலாறு, அறிவியல் குடியேற்றம், கல்வி, வாழ்வியல், சமூக அறிவு, பலதுறை அறிவு, பெண்

உரிமை, இலக்கியம், மொழி, சட்டம், சமயநிறுவனம் போன்ற பல்வேறு பொருள்கள் விரிவாக ஆராயப்பட்டுள்ளன. 'தானே தானாம் தக்கடி தங்கம்' என்ற தலைப்பில் நகைச்சுவை தொடர் கட்டுரை நடைச்சித்திரம் போன்ற முறையில் அ.மாதவையா படைத்துள்ளார். பெண் கல்வி, தமிழ் மொழி ஆராய்ச்சி, தமிழ் அகராதி, திருவருட்பா, மறச்சுவை, விகடப்பா, இந்திய தேசியக் கல்வி, இந்திய சுயராஜ்ஜியம், சுதந்திரத் தொட்டில், நாகரிக சமூக வாழ்க்கை என்ற பல கட்டுரைகள் இவற்றில் குறிப்பிடத்தக்கன. ஆழமும் நுட்பமும் மிக்க சிந்தனையும் பரந்த அறிவும் பல்துறைச் சிந்தனையுமிக்க அ.மாதவையாவின் ஆளுமை இவற்றில் புலனாகின்றன. விகடப்பா என்றொரு கட்டுரையை அவர் பஞ்சாமிர்தம் இதழில் (ஆனி, 1924, பக்.255-258) எழுதினார். "ஹாஸ்யரசம் அல்லது நகைச்சுவையால் உண்டாகும் சிரிப்பை நாம் பல வழிகளில் அடைகிறோம், விகடப்பா (Parady) அவற்றுள் ஒன்று. வசன நடையையும் விகடமாக மாற்றலாம். ஆதலால் விகடவசனம் என்று பொதுப்படக் கூறுவது பொருந்துமாயினும், செய்யுள்களையே இப்படி மாற்றியெழுதுவதுதான் பெருமரபாயிருத் தலால், விகடப்பா என்கிறோம்" என்று முதலில் விளக்குகிறார். வடமொழி வேதம், தமிழில் ஆழ்வார், நாயன்மார், சித்தர் பாடல்கள், நடனமேடைப் பாடல், கல்யாணப் பந்தலில் பாடப்படும் கல்யாணப் பாட்டுக்கள் ஆகியவற்றை விகடம் செய்து விகடப்பாக்களைத் தந்துள்ளார். இறுதியில் ஆங்கிலத்தில் உள்ள இத்தகு விகடப்பாக்களைக் கொண்டு, விகடப்பாவின் பொதுமைப் பண்புகளை அ.மாதவையா வகுத்துத் தந்துள்ளார். "1) பரிகசிக்க எடுத்துக் கொண்ட பகுதி, மூலத்தில் மிகச் சிறந்ததாய், பேர் போனதாய் பலர் அறிந்ததாயிருக்க வேண்டும், 2) மூலகவியின் நடை நுட்பங்களையும் சொல்லாட்சிகளையும் பாவினம் அல்லது 'வர்ணமெட்டை'யும் கருத்துப் போக்கையும் பிற அம்சங்களையும் நெருங்கித் தழுவிச் செல்லவேண்டும். 3) மூலகவியின் கவிநடை, கருத்தொழுங்குகளிலுள்ள குற்றம் குறைகளை, துரும்பைத் தூணாக்குவது போல, முற்படுத்தி விளக்கி எடுத்துக்காட்டப் பரிகசிப்பதாயிருக்க வேண்டும். 4) சிற்சிலவிடங்களில் மூலமோ விகடப் பிரதியோ என்று பலர் சந்தேகிக்கும்படி அவ்வளவு பொருத்தமாயிருத்தல் வேண்டும். 5) விகடப்பாவானது, பொருத்தமான பொருளில்லாததாய் அல்லது இழிபொருள், பயனில் பொருள் தருவதாய் இருத்தல் வேண்டும்" என்று அவர் கூறியுள்ளார். (அ.மாதவையா, 'விகடப்பா' பஞ்சாமிர்தம், ப.258 ஆனி 1924). ஆசிரியரின் நுட்பமான அறிவுத் திறனையும், வடமொழி, ஆங்கிலம் இவற்றுடன் ஒப்பிட்டுக் காட்டும் ஒப்பீட்டுப் புலமையையும் ஒருங்கே இக்கட்டுரையில் காணலாம். புதிய ஒன்றை அறிமுகப்படுத்தும் சமயம், அது தொடர்பான அனைத்து

விவரங்களையும் ஒரு சேரத் திரட்டி, எளிமையாகப் புரிய வைக்கும் அவருடைய பொறுப்புணர்ச்சி இதில் புலனாகிறது.

'பெண் கல்வி' என்னும் கட்டுரை மிகக் கூர்மையான, கனமான சிந்தனையை உள்ளடக்கியதாகும். அ.மாதவையாவின் படைப்புக்களில் பெண்ணுரிமை, பெண் சமத்துவச் சிந்தனை நன்கு ஆழமாக வேரூன்றி உள்ளன. இக்கட்டுரையிலும் அதைக் காணலாம். "ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளுக்கு முன்பே நமது தேசத்துக்கு வியாபாரிகளாக வந்து, உழன்ற அந்நியர்கள், நாட்டிலே ஆதிக்கமும் அதிகாரமும் பெற்று நூறு வருஷங்களே ஆகின்றனவெனினும், அவ்வதிகாரத்தையும் ஆதிக்கத் தையும் விட்டுக் கொடுத்து இழந்து விடுகிறதென்றால் எவ்வளவு மனம் வருந்துகிறார்கள்! அப்படியிருக்க எத்தனையோ ஆண்டுகளாகப் பெண்டுகளைத் தமது அடிமைகளைப் போலும் சங்கம சொத்துக்களைப் போலும் அடக்கியாண்டு அனுபவித்து வந்த ஆண்மக்கள், பெண்களும் ஒத்த கல்வியும் சுவதந்திரியமும் கவுரமும் அதிகாரமும் பெற மனமிசைவது எவ்வளவு கஷ்டமாகும்? அரசன் குடி என்னும் தொந்தத்திலும் மேல்சாதி, கீழ்சாதி என்னும் தொந்தத்திலும் ஆண்டான் அடிமை என்னும் தொந்தத்திலும் மிக வலியதும், நீடித்ததும், ஊனிலும் உயிரிலும் உள்ளத்திலும் ஊன்றி ஊறிப் போனதுமான தொந்தமாகும், ஆண் மேல், பெண் கீழ் என்னும் தொந்தம். அவ்வுணர்ச்சியை நியாய புத்தியால் அடக்கித் துறந்து, ஆண்மக்களாவார், பெண் மக்களையும் சமமாக நினைத்து, திரிகரண சுத்தத்தோடு அப்படியே நடத்துதல் அருமையிலும் அருமையாகும். பெண்களும் ஆண்களைப் போலவே எவ்விதத்திலும் தாழ்வின்றித் தாமே படித்துத் தாமே தமக்குரிய சுதந்திரங்களைக் கைப்பற்ற முன்வரின், அந்தநாள் நம் நாளிலே வந்துவிடும்" (ப. 134, பஞ்சாமிர்தம், 'பெண் கல்வி', வைகாசி, 1924). வெள்ளையர்கள் நாட்டைவிட்டுப் போனாலும் ஆண்கள் பெண்களைச் சமத்துவத்துடன் நடத்த முன்வரார் என்பதும் எல்லா அடிமை நிலைகளை விடவும் பெண்ணடிமையே வலுவானதும் வேரூன்றியதுமாகும் என்பதும் தமக்குரிய சுதந்திரங்களைப் பெண்கள் தாமே கைப்பற்ற வேண்டும் என்பதும் மிக ஆழமானதும் தீவிரமானதுமாகும். பெண் சமத்துவம் பற்றிய அவருடைய நீள்பார்வையும் துணிச்சலான நிலைப்பாடும் இக்கட்டுரையில் புலனாகின்றன.

'குறள் நானூறு' என்னும் தலைப்பில், தேர்ந்த நானூறு குறட்பாக்களுக்கு உரையுடன் கூடிய தொகுப்பு நூலை அவர் வெளியிட்டார். அந்நாளில் பெரும் தமிழறிஞர் பலர் துணையுடன் இதை அவர் செய்துள்ளார். தமிழ்ச் சமுதாய மேன்மை தமிழை மேம்படுத்தல், பெண் சமத்துவம், சமூகச் சீர்திருத்தம் ஆகிய சிந்தனைகளை

முன்வைத்தே அ.மாதவையா எப்படைப்பையும் எழுதினார். தாம் சொன்னதை - எழுதியதை அப்படியே கடைப்பிடித்து, வாழ்ந்தும் காட்டினார். அவர் அளவிற்குத் தீவிரமான சிந்தனையாளர், சீர்திருத்தவாதி என்னும் பரிமாணங்களை உடைய இன்னொருவரைக் காணமுடியாது. அவர் படைத்த படைப்புக்கள் அனைத்திலும் இந்த ஆளுமையை - தீவிரத் தன்மையை - நாம் காண முடியும்.

## இயல் – 3

# புனைகதைகள்

### முன்னுரை

சீர்திருத்தவாதியாகவும் சிந்தனையாளராகவும் இருந்த அ.மாதவையா பல்வேறு இலக்கிய வகைகளைப் படைத்தார். எனினும் அவர் புனை கதை யாசிரியராகவே பெரும்பாலும் அறியப்பட்டுள்ளார். அவருடைய நாவல்களும் சிறுகதைகளும் வெளியுலகில் நிறைய அறிமுகமாகி, தமிழ் உலகில் அவர் புனைகதை படைப்பாளராகவே அறியப்பட்டுள்ளார். தொடக்க காலத் தமிழ் நாவலாசிரியர், தொடக்க காலத் தமிழ்ச் சிறுகதையாசிரியர் என்னும் அளவில் அவருடைய பத்மாவதி சரித்திரம், முத்துமீனாட்சி, விஜயமார்த்தாண்டம் ஆகிய நாவல்களும் குசிகர் குட்டிக்கதைகள் தொகுப்பில் உள்ள சிறுகதைகளும் பரவலாக அறியப்பட்டுள்ளன. 'கண்ணன் பெருந்தூது' என்னும் அவருடைய சிறு-கதை (பஞ்சாமிர்தம் இறுதி இதழில் அவருடைய மறைவிற்குப் பின்னர் வெளிவந்த சிறுகதை - பஞ்சாமிர்தம், கார்த்திகை, 1925, பக்.607-611), புதுமைப் பித்தன் அவர்களால் மிகச் சிறந்த வடிவச் செம்மையுடைய தமிழ்ச் சிறுகதை என்று பாராட்டப்படும் கூட, ("கண்ணன் பெருந்தூது என்ற கதை தமிழ்ச் சிறுகதைகளின் இலக்ஷியம் என்றே கூறலாம். அதன் அமைப்பு வெகு அற்புதமாக விழுந்திருக்கிறது" - புதுமைப்பித்தன், புதுமைப்பித்தன் கட்டுரைகள், ப.41) தமிழ்த் திறனாய்வாளர்கள் அக்கதையில் ஆழ்ந்த அக்கறை காட்டவும் இல்லை; சிறுகதை வரலாறுகளில் பெரும்பாலும் அதைக் குறிப்பிடவுமில்லை, பஞ்சாமிர்தம் இதழ்களிலும் 'இந்து' ஆங்கில இதழிலும் எழுதியுள்ள, இன்னும் நூலாக வெளிவராத சிறுகதைகள் அவ்வளவாக் கவனிக்கப்படவில்லை. அதே போன்று, தில்லைக் கோவிந்தன், கிளாரிந்தா, சத்தியானந்தன், லெப்டினன்ட் பஞ்சு போன்ற ஆங்கிலத்தில் எழுதப்பட்டு, தமிழாக்கம் செய்யப்பெற்ற நாவல்களும் போதுமான அளவு பரவலாகப் போற்றப்படவில்லை. ஆங்கிலத்தில் இந்தியப் படைப்புக்கள் பற்றி ஆராய்ந்த ஆங்கில ஆய்வாளர்கள் பாராட்டிய அளவிற்குக் கூடத் தமிழ்த் திறாய்வாளர்கள் இப்படைப்புக்களைக் கண்டு கொள்ளாமல்

விட்டது, வியப்பைத் தருகிறது. மாதவையாவின் புனைகதைகளை விரிவாக இவ்வியலில் காண்போம்.

**புனைகதைகள் தோன்றிய காலச்சூழல்**

அ.மாதவையா வாழ்ந்த காலம் நம்நாடு அன்னியருக்கு அடிமைப் பட்டிருந்த காலம். ஆங்கிலக் கல்வி கற்பிக்கப்பட, அதைக் கற்று அரசு அலுவல்களைப் பெற்று, கிராமங்களில் கூட்டுக் குடும்ப வாழ்வை விடுத்து நகரங்களில் தனிக் குடும்பமாக வாழ்வதற்கு உயர்சாதி மத்தியதர இளைஞர்கள் வந்த காலம். உயர்சாதி சமூகக் குடும்பப் பழக்கவழக்கங்களில் மாறுதல் ஏற்பட்டு, ஐரோப்பிய நாகரிகம் மெல்ல மெல்லத் தலை தூக்கிய காலமாக அது இருந்தது. அந்தணர் சமூகத்தில் இளமை மணம், சிறுவயதிலே பெண்ணுக்குக் கட்டாய விதவைக் கோலம், விதவை மறுமணம் என்பது சாதியாசாரத்திற்கு எதிரானது என்ற கட்டுப்பாடு காரணமாக மறுப்பு, மூட நம்பிக்கைகள், ஆண்கள் எவ்வளவு வயதானவராக இருப்பினும் பாலுறவுத் தேவைக்காக, மனைவி இறந்துவிட்டால், உடனடியாக இளம் பெண்ணை - சிறுமியைக் கட்டாயப்படுத்தி மணஞ்செய்து கொள்ளல், பெண் கல்வி மறுப்பு, வரதட்சணை வழக்கம், பருவம் வருமுன்பாக இளமை மணத்திற்கு ஆட்படுத்தப்பட்ட சிறுபெண்ணை அவளுடைய வயதான கணவனின் பாலுறவுத் தேவைக்காக மருந்துகள் மூலமாக உடல் உறவிற்கு ஆளாக்க முற்படும் நம்பிக்கை சார்ந்த கொடூரமான பழக்கம், பெண்ணுக்குச் சொத்துரிமை மறுப்பு, அரசு அலுவல்களில் இருந்த கல்வி கற்ற அலுவலர்களின் தவறானதும் முறைகேடானதுமான பொருளீட்டும் முறை, கையூட்டு பெறல், நீதிமன்றங்களில் காணப்பட்ட காசிற்காகப் பொய்சாட்சி கூறும் நிலை உள்ளிட்ட முறைகேடு, திருமண விழாக்களில் காணப்பட்ட படாடோபமான ஊதாரித்தனமான செலவு ஆகிய சமூகச் சீர்கேடுகள் அக்காலத்தில் நிறைந்து காணப்பட்டன. இச்சீர்கேடுகள் நீக்கப்பட வேண்டும் என்றும் சமூகம் மேன்மை பெறவேண்டும் எனவும் அ.மாதவையா தம் புனைகதைகளில் தொடர்ந்து வலியுறுத்தினார்.

அந்தணர், வேளாளர் போன்ற மேற்சாதியினரின் சாதிக்கட்டுப்பாடுகளுள் சிக்குண்டு காணப்பட்ட சமூக அமைப்பில், அடிமட்டத்து மக்கள் சாதிக் கொடுமைகளுக்கு ஆளாகினர். அந்நாளில் கிறித்தவ சமயமாற்றம் ஒருபுறம் தீவிரமாக நடந்துவந்தது. கலப்புமணம், காதல் மணம் போன்ற முற்போக்கான திருமணமுறைகளைச் சாதிக் கட்டுப்பாடுமிக்க இந்து சமய அமைப்பு ஆதரிக்காத சூழ்நிலையில், கிறித்தவ மதத்திற்கு மதம் மாறியவர்கள் இத்தகைய திருமண முறைகளை நடைமுறைப்படுத்த முயன்றனர். மதமாற்றம் பிரச்சினைக்குத் தீர்வாகாது எனவும் கிறித்தவ சமயத்திலும் சாதி உயர்வு, தாழ்வு காணப்படுவதை

அன்றைய சமூகச் சூழல் காட்டியது. படித்துப் பட்டம் பெற்று, அரசு பதவிகளில் அமர்ந்துள்ளோர், தாம் தேடிப் பெற்றுவிட்ட சமூகத் தகுதி, பதவி காரணமாக, மற்றவர்களால் மதிக்கப்படும் நிலை அன்று காணப்பட்டது. ஆங்கிலமொழி, ஐரோப்பிய நடை உடை பழக்க வழக்கங்கள், வாழ்க்கை மரபுகள் ஆகியவற்றை விரும்பி ஏற்று வாழும் மோகமும் வெளி வேடத்தைப் பெரிதாகப் போற்றும் பழக்கமும் மத்திய தர வகுப்பாரிடம் காணப்பட்டது. அடிப்படையில் ஆங்கில மொழியை நீசமொழி என்று கூறி இழித்துப் பேசுவதும் வேலை பெறும் பொருட்டு அதைக் கற்பதுமான இரண்டாட்ட நிலையும் அன்றைய சமூகச் சூழலில் காணப்பட்டது. கிறித்தவ மதமாற்றம் தீர்வாகாது என்ற பின்னணியில் இந்துமத சீர்திருத்த இயக்கங்கள் தோன்றிச் செல்வாக்கு பெற்றன. ஆரிய சமாஜம், பிரம்மசாமாஜம் போன்ற இந்து சமய சீர்திருத்த இயக்கங்கள் தங்கள் மதத்திற்குள் புதிய வாழ்வியல் சிக்கல்கள் ஏற்பட்டால், கட்டமைப்பிற்குள் சீர்திருத்தம் செய்யப்பட வேண்டுமே அல்லாது, மதத்தைப் புறக்கணித்து, மதமாற்றத்திற்கு ஆளாவது தீர்வாகாது என வாதிட்டு வந்தனர். இக்கருத்து அ.மாதவையாவிற்கும் உடன்பாடு என அவர் நாவல்களால் அறியலாம்.

அன்றைய சூழலில் நகர வாழ்க்கையும் புதிய தொழில் வளங்களும் பெருகி வரவே புதிய பொருளாதார மாற்றம் ஏற்பட்டதை அறிந்த அந்தணச் செல்வர்கள், நில உடைமையாளர்கள், மறவர்களான ஜமீன்தார்கள் ஆகியோர் தத்தம் பழமையான கிராம வாழ்க்கை மரபுகளை விடுத்து, வணிக, தொழில் முயற்சிகளில் முன் அனுபவமின்றி ஈடுபட்டுச் செல்வத்தைச் சீரழிக்கவும் செய்தனர். புதிய கல்வி முறை, ஐரோப்பிய நாகரிகம் என்பன இத்தகைய செல்வர்களிடம் படியவில்லை. மாறாக, அடிப்படையில் வீண் ஆடம்பரச் செலவும், புலன் இன்பங்களுக்காகப் பொருளைச் செலவு செய்வதுமாகப் பொருளை இழந்து வாழலாயினர். நாடகம், கேளிக்கை, தாசிகளிடம் சென்று கூடா ஒழுக்கம் கொண்டு சீரழிதல் என்னும் தீய ஒழுக்கங்களால் உடல் நலத்தையும் இழந்து பொருள் இழப்பிற்கும் ஆளாகி, குடும்ப வாழ்வையும் சிலர் சீரழித்தனர். அன்றைய சூழலில் காணப்பட்ட இந்தச் சீர்கேடுகளைக் கண்ட சீர்திருத்தவாதிகள், அவைகளைப் போக்கும் வழிமுறைகளை வற்புறுத்தினர். கிறித்தவ மதமாற்றத்திற்கு உள்ளாவதிலிருந்து இந்து மதத்தைக் காத்துப் புதுப்பிக்கவும் பெண் விடுதலை - பெண் உரிமை என்பவற்றை வலியுறுத்தியும் சாதி வேற்றுமைகளைப் போக்கிச் சமத்துவம் ஏற்படுத்தவும் இந்த இயக்கங்கள் வலியுறுத்தின. இத்தகைய சீர் திருத்தங்களைச் செய்வதற்கு மக்கள் மத்தியில் கருத்துக்களைப் பரப்புவதற்கு - இதழ்கள் நடத்தி அவைகளில் எழுதியும், புதிய இலக்கிய

வகைகளான நாவல், சிறுகதை போன்ற புனைகதைகளில் இச்சீர்கேடுகளை விரிவாகப் படைத்து, சீர்திருத்தங்களை முன்வைத்து எழுதினர்.

அ.மாதவையா அவர்கள் புனைகதைகள் வாயிலாகத் தொடர்ந்து சமூகச் சீர்திருத்தக் கருத்துக்களை எழுதினார். அன்றைய காலச் சமூகச் சூழலை நன்கு வெளிப்படுத்தும் சமூக ஆவணங்களாக, நடப்பியல் நெறியில் அவர் புனைகதைகளைப் படைத்தார். அந்தணர் சமூகத்தில் காணப்பட்ட சமூகச் சீர்கேடுகளை அவர் சீர்திருத்த விழைந்து புனைகதை களில் தீவிரமான நிலைப்பாட்டுடன், முற்போக்கான கருத்துக்களை முன்வைத்து எழுதினார். தமிழ் நாவல், சிறுகதை படைப்பாளர்களுள் அந்நாளைய சூழலில் தொடக்க காலப் புனைகதையாசிரியர்களில் அ.மாதவையா அளவிற்கு இவ்வளவு தீவிரமாகவும் முற்போக்காகவும் சமூகச் சீர்திருத்தச் சிந்தனைகளைப் புனைகதைகளில் எழுதிய படைப்பாளர் வேறு எவருமிலர். புனைகதை படைப்பாசிரியர்களில் இத்தன்மையில அ.மாதவையாவே முதலிடம் பெறுகிறார். நடப்பியல் நெறியில், அக்காலப் புனைகதை மரபின்படி, தாம் படைத்த கதைமாந்தர்களின் கூற்றுக்களாக உரையாடல்களிலும், ஆசிரியர் எடுத்துரைத்தலிலும் சமூகச் சீர்திருத்தக்கருத்துக்களை அவர் புனைகதை களில் வெளியிட்டார். பின்வந்த திறனாய்வாளர் சிலர், அவருடைய இப்போக்கு பிரச்சாரமாக உள்ளது என்று கூறினர். ஆயினும அன்றைய சமூகச் சூழலை நடப்பியல் நெறியில் இத்தனை தீவிரமாக வெளிப்படுத்தும் போக்கில் வெளிப்பட பேசுவது - வெடிப்புற பேசுவது - காலத்தின் தேவையாகும். மேலும், புனைகதை படைப்பின் கலையழகை மையமிட்டு உள்ளடக்கத்தையோ சமகாலச் சமூகச் சீர்கேடுகளையோ காவு கொடுக்காமல் இலக்கியம் படைத்த நடப்பியல் நெறியில் அ.மாதவையா உயர்ந்து நிற்கிறார். புனைகதைகளில் உள்ளடக்கத்திற்கு முதன்மை தந்து, படைப்புக்களைச் சமூக ஆவணமாகப் படைத்த புதிய செல் நெறியாளராக (Trendsetter) அ.மாதவையா விளங்குகிறார்.

**புனைகதைகள் காட்டும் சமூகச் சிக்கல்களும் தீர்வுகளும்**

அ.மாதவையா தாம் பிறந்த அந்தணர் சமூகத்தில் காணப்பட்ட பல்வேறு சமூகச் சீர்கேடுகளையும் சீர்திருத்த விழைந்தார். "நம்முடைய நாகரிகங்களுக்கெல்லாம் மூலஸ்தானமாகிய பிராமணரது ஆசார அனுஷ்டானங்களைச் சீர்திருத்துவதே முதற்கடமை' (ஆசாரச் சீர்திருத்தம், ப.3) என்று அவர் எழுதினார். அந்தணர்களிடையே காணப்பட்ட போலி வேடப் பண்பு, படாடோபமானதும் ஊதாரித் தனமானதுமான செலவு போன்ற நடைமுறைகளையும் கிராமங்களில் மூத்த தலைமுறை அந்தணர்களிடம் காணப்பட்ட சாதிவேறுபாடு காட்டும்

வழக்கத்தையும் அவர் நாவல்களில் வன்மையாகக் கண்டித்தார். தங்களுடைய உயர்சாதி தகுதி ஒன்றை மட்டுமே வைத்துக்கொண்டு, பிற சாதியாரை அடித்து, துன்புறுத்தி அவமானப்படுத்தும் செயலைச் செய்வதை, பத்மாவதி சாத்திரம் நாவலில் சிறுகுளம் சீதாபதி அய்யரின் படைப்பில் அ. மாதவையா காட்டுகிறார்.... "ஆமாம்பிலே! வெள்ளாளப் பயலே! என்ன கொழுத்துப் போய்விட்டதோ..." என்று கூப்பாடு போட்டார். இராமப் பிள்ளையைக் கன்னத்தில் படீரென்று அடித்தார்... இடம் பூசுரர் தெருவாயிருந்ததாலும், சீதாபதி ஐயருக்குப் பயந்தும் சில பிராமணர் சேர்ந்து, இராமப்பிள்ளையைக் கொடூரமான காயங்கள் உண்டாகும்படி அடித்துவிட்டார்கள்." (அ.மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப.12) என்று வருமிடத்தில், மேற்சாதியினரான அந்தணர் சிலர் தம் கையில் சட்டத்தையும் நீதியையும் எடுத்துக்கொண்டு, நமக்குக் கீழ் உள்ள இனத்தவர்களை அடித்துத் துன்புறுத்தி மிகவும் கேவலமாகவும் ஏசிடும் காட்சியைக் காட்டியுள்ளார். மேற்சாதியினரின் ஆதிக்கப் போக்கை இது காட்டும். ஆங்கிலக் கல்வி பரவியதன் விளைவாகவும் நீதிமன்றங்கள் இருந்ததாலும் இதற்கு நியாயமும் அடிபட்ட கீழ்ச் சாதியாருக்கு நீதியும் சட்டத்தின் பாதுகாப்பும் நியாயமான முறையில் கிடைத்தன. அடிபட்ட இராமப்பிள்ளை நேரே காயங்களுடன் இறங்கல் துணைநீதிபதியிடம் சென்று முறையிட நீதிமன்றத்தில் வழக்கு நடைபெற்று, சீதாபதி அய்யருக்கும் அவருக்கு உடந்தையாயிருந்த வேறுசில அந்தணர்களுக்கும் தக்க தண்டனை கிடைத்தது. சட்டத்தின் முன், நீதியின் முன் அனைவரும் சமம் எனவும், தவறு செய்தவன் அந்தணராயிருந்தாலும் தண்டனை, சிறைவாசம், அபராதம் கிட்டும் எனவும் காட்டுவதன் மூலம், ஐரோப்பிய வரவால் ஏற்பட்ட புதிய வாழ்க்கை முறையில் அனைவரும் சமம் எனவும், சனநாயக அமைப்பில் சட்டமும் நீதியும் சாதிப் பாகுபாடின்றிப் பொதுவாக இருந்ததையும் அவர் காட்டுகிறார்.

'தில்லைக் கோவிந்தன்' நாவலில் மூன்றாம் இயலில், பாட்டனார் தில்லை சாம்பசிவ தீட்சிதரைக் கிறித்தவனான கீழ்ச்சாதியான் ஒருவன் வந்து வம்புக்கிழுத்து, துன்புறுத்தும் நிகழ்ச்சி ஒன்று வருகிறது. பாட்டனார் நீராடி தூய்மையுடன் வரும்போது, அவருடைய வயோதிகம், ஆசார நியமம் முதலியவை காரணமாக, எதிரே வரும் பிறசாதியார் மரியாதையுடன் ஒதுங்கி வழிவிடுவர். கிறித்தவ சமயத்திற்கு மதம்மாறிய அந்த கீழ்ச்சாதிக்காரன், வம்புக்கிழுத்து, பெரியவரான தீட்சிதரை விரட்டித் துன்புறுத்துகிறான். அவர் வேறுவழியில்லாமல், சிலரைக் கொண்டு அவனை அடிக்கச் செய்கிறார். அவன், நேராக நீதிமன்றம் சென்று நீதியின் பெயரால் பாட்டனாருக்கும் பிறருக்கும் தண்டனை வாங்கித் தருகிறான் (தில்லைக் கோவிந்தன், பக்.24-25) என்று அ.மாதவையா காட்டுகிறார்.

நீதியின் முன் அனைவரும் சமம் என்றும், சாதியின் பெயரால் வேறுபாடு காட்டுவதும், அதனை வைத்து உயர்சாதியினரான அந்தணன், தனக்குக் கீழ்ப்பட்ட சாதியாரை அடிப்பதும் துன்புறுத்துவதுமாக, தானே தண்டனை தருபவனாகச் செயல்படுவதும் கூடாது என்று காட்டுகிறார். ஆங்கில அரசாட்சியில் நீதிமுன் அனைவரும் சமம் என்பதையும் இப்புதிய சட்டமுறையில், குற்றம் செய்பவர் யாராக இருந்தாலும் உரிய தண்டனை பெறுவர் எனவும் காட்டுகிறார். இதனால், மரபுவழியாக வந்த அந்தணர்களின் ஆதிக்கம் வீழ்ந்ததையும் காட்டுகிறார். ஆயினும், ஒதுங்கிப் போன வயது முதிர்ந்த அந்தணரை வம்பிற்கு இழுத்து, சிக்கல் ஏற்படக் காரணமாக இருந்த அம்மனிதனின் செயல் எந்தவித கண்டனத்திற்கும் ஆளாகாமல் விடப்பட்டது. அதற்குக் காரணம், மேல் சாதி அந்தணர், நீதிமன்றத்திற்குப் போகாமல், நீதியை - சட்டத்தை - தாமே கையிலெடுத்து, ஆட்களைக் கொண்டு தாமே அவனைத் தண்டித்தது தவறான செயல் எனவும் மாதவையா காட்டுவது அறியத்தக்கது. இந்துமத சாதிக் கட்டுப்பாடு, உயர் சாதியினர் எதிரில் வந்தால், தாழ்ந்த சாதியினர் பணிந்து, ஒதுங்கி வழிவிட வேண்டிய கட்டுப்பாடு நடைமுறையில் இருந்ததையும் அ.மாதவையா இந்த நாவலில் காட்டுகிறார். அத்துடன், கிறித்தவனாக மதம் மாறிவிட்ட தாழ்ந்த சாதியாருக்கு இந்தக் கட்டுப்பாடுகள் எல்லாம் கிடையா என்றும் அவர் இந்த நிகழ்ச்சியில் காட்டுகிறார். இதனால் மதமாற்றத்தை அவர் ஆதரித்தார் என்று கொள்ளக்கூடாது. புதிய வாழ்வியற் சிக்கல்கள் ஏற்பட்டபோது, கட்டமைப்பிற்குள் மாற்றம் செய்யவேண்டுமே அன்றி, சீர்கேடுகளை நீக்கிச் சீர்திருத்தம் செய்யவேண்டுமே தவிர, வெளியேறி, மதமாற்றம் மேற்கொள்ளுதல் கூடாது என்ற கருத்தை அவர் வலியுறுத்தினார். இதனை, பத்மாவதி சரித்திரம் நாவலில், "மதம் மாறுவது தானா, சமூக வாழ்க்கையில் ஏற்படும் இக்கட்டுகளுக்கு மருந்து? மதம் என்ன ஒரு கோட்டா, தொப்பியா, இறுக்கினால் மாற்றிட? அவரவர் நாகரிகத்துக்கும், பயிற்சிக்கும், ஆஸ்திவாரமாயிருப்பது மதம் தானே? மதம் சம்பந்தமில்லாத விஷயங்களையும் மதம், மதம் என்று பாராட்டி அபிமானிப்பதால்தான் இப்படிப்பட்ட தர்மசங்கடங்களும் விபரீதங்களும் ஏற்படுகின்றன. அதைச் சீர்திருத்த வேண்டுமே அல்லாது, மதம் மாறுவதெப்படி? மதம் அவரவரைப் பொருத்தது என்று நமக்குள்ளும் ஆகவேண்டும். அதற்கு வேண்டிய முயற்சி செய்யவேண்டும்" (அ.மாதவையா, பத்மாவதி சரித்திரம், மூன்றாம் பாகம், ப.359) என்று வலியுறுத்துவதால் அறியலாம்.

'தந்தையும் மகனும்' என்னும் சிறுகதையில், தன் முயற்சியால் ரங்கூன் சென்று கடுமையாக உழைத்து ஏராளமான பொருளீட்டி வரும் சாமிநாத

நாடார் தாழ்ந்த சாதியினர் என்பதால் தன் சொந்த ஊரில் அந்தணர் வாழும் வீதிகளில் நடக்க விடாது, பத்திர பதிவு அலுவலகத்தில் அதிகாரி அந்தணராயிருப்பதால் உள்ளே அனுமதிக்கப்படாது வெளியிலே நிறுத்தப்படுவதும் கண்டு வருந்துகிறார்; அவருடைய மகன் சுந்தரம் கல்வி கற்று, அரசுப் பணியில் தாசில்தாராகி, கிறித்தவனாக மதம் மாறி, கிறித்தவ மதம் மாறிய பெண்ணை மணந்து, ஊருக்குள் வரும்போது மிகவும் மதித்துப் போற்றப்படுகிறான். குதிரை மீதேறி பவனி வந்து அக்கிரகாரத்தினுள் சென்று வருகிறான்; யாரும் அவனைத் தடுக்கவில்லை; காரணம் அவனுடைய அதிகாரமிக்க அரசுப் பணியும் கிறித்தவனாக மதம் மாறிவிட்ட நிலையுமாகும் என்று அ.மாதவையா காட்டுகிறார் (அ. மாதவையா, குசிகர் குட்டிக்கதைகள், தந்தையும் மகனும், பக்.84-90). இந்துவாக இருந்தவரை, சாதிக்கட்டுப்பாடுகள் காரணமாகத் துன்பத்திற்கும் அவமானத்திற்கும் ஆளான நிலையையும், கிறித்தவனாக மதம் மாறி, அரசுப் பணியில் அதிகாரத்துடன் வருபவனிடம் உயர்சாதியினரின் ஆதிக்கமும் கட்டுப்பாடுகளும் தூளாகின்றன என்று அவர் காட்டுகிறார். அதே போல, குதிரைக்கார குப்பன் என்ற சிறுகதை-யிலும், கிறித்தவனாக மதம் மாறிய குப்பனை அந்தணரின் சாதிக் கட்டுப்பாடு ஒன்றும் செய்யவில்லை என்று மாதவையா காட்டுகிறார். சாதிக் கட்டுப்பாடுகளையும் ஆதிக்கப் போக்கையும் மாற்றி, அனைவரையும் சமமாக நடத்துவதை மேற்கொள்ளவேண்டும் என அவர்தம் புனைகதைகளில் தொடர்ந்து வலியுறுத்தினார்.

சாதி சார்ந்த சில கட்டுப்பாடுகளை மிகவும் கடுமையாகப் பின்பற்றிய அந்தணர்களில் சிலர் தங்களுடைய சொந்த நலன்களுக்காக அவற்றைத் தளர்த்தியும் அறவே விட்டுவிடவும் செய்தனர். பிறருக்கு ஒரு நியாயம், தமக்கென ஒரு நியாயம் என்று இரட்டை அளவுகோல்களுடன் புறத்தே வேடமிட்டு வாழ்ந்தனர். இந்த வேட வாழ்வை அ.மாதவயையா தம் புனை-கதை படைப்புக்களில் கண்டித்தார். தாம் உருவாக்கிய சாதி ஆசாரங்கள், கட்டுப்பாடுகள் ஆகியவைகளைத் தாமே பின்பற்றாமல், அவற்றைப் புறந்தள்ளி, நெறி பிறழ்ந்து வாழ்வதை அவர் கண்டிக்கிறார். ‘வேளைக்குத் தக்க வேஷம்’ என்று பத்மாவதி சரித்திரம் (ப.52) நாவலில் இப்போக்கு கண்டிக்கப்படுகிறது. முன்காலத்தில் வேதம் ஓதியும் சாத்திர நூற்களைக் கற்றும் வாழ்ந்த அந்தணர் இன்று, கால மாற்றத்திற்கு ஏற்ப ஆங்கிலக் கல்வி கற்று, அரசு உத்தியோகங்களில் அமர்ந்து, பொருளீட்டத் தலைப்பட்டுள்ளனர். ஒரு காலத்தில் ஆங்கிலத்தை ‘நீசபாஷை’ எனப் பழித்தவர்கள், இன்று தங்களின் வயிற்றுப் பிழைப்பிற்காக அக்கட்டுப்பாட்டைத் தளர்த்தி, ஆங்கிலத்தைக் கற்று அரசுப் பணிகளில் உள்ளனர். இதனை, ‘அந்தக் காலங்களில், ‘இங்கிலீஷ்’ என்று யாராவது சொன்னால்,

இரண்டு காதையும் பொத்திக்கொண்டு 'அடா, அடா நீசபாஷையின் பெயரையும் கேட்கலாகாது,' என்பார்கள். இப்பொழுதோ, பெரிய குண்டல தீக்ஷிதர் வம்சங்களில்தான் இங்கிலீஷ் அதிகம். இராஜ பாஷையாம்; வேளைக்குத் தக்க வேஷம், (அ.மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப.52) என்று வருமிடம் வலியுறுத்தும். அதேபோன்று, வயிற்றுப் பிழைப்பு - வேலை பெறுவது என்பதற்காக மருத்துவப் படிப்பில் சேர்வதும் பிணத்தை அறுப்பதும், தோல் கிடங்கில் தோலைச் சீவுவதும் போன்ற பணிகளில் ஈடுபட்டுள்ளனர், அந்தணர் எனவும் அ.மாதவையா காட்டுகிறார். ஒரு காலத்தில் இவையெல்லாம் வேத, சாத்திர நெறிகளுக்கு மாறுபட்டவை எனவும், மிகவும் இழிந்த சாதி மக்கள் செய்யும் பணி என்று கூறிய அந்தணர்கள் இன்று பொருளாதாரத் தேவைக்காக அதில் ஈடுபடுகின்றனர் என்று அவர் காட்டுகிறார். இதனை, "பறங்கிக்காரரோடு சேர்ந்து பழகிப் பிணங்களை அறுத்துக்கொண்டு, அந்தப் படிப்பு வேண்டாமென்று எங்கப்பா எவ்வளவோ தடுத்தார். இப்பொழுதோ வைத்திய கலாசாலையில் பிராமண மாணவர்கள் கொள்ளையோ கொள்ளை. பிராமணப் பெண்களுங்கூட சீக்கிரம் வந்து சேர்வார்களென்று தோன்றுகிறது..... பெங்களூர் தோல்கிடங்கில் வேலை செய்கிறவர்கள், ..... வேத வித்துக்கள்; பிராமணப் பழங்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் தான் அதிகம்" (பத்மாவதி சரித்திரம், ப.361) என்று வரும் பகுதி வலியுறுத்தும். கால மாற்றங்களுக்கு ஏற்பப் புதிய தொழில், கல்வி, பணி வாய்ப்பு ஆகியவைகளை ஏற்பதை அவர் தவறென்று சுட்டவில்லை. அந்தணர்கள் ஆங்கிலக் கல்வி கற்று, மருத்துவக் கல்வி பெற்று, மருத்துவஞ் செய்வதை-யோ, தோல் கிடங்கில் தோல் சீவுவதையோ இழிவென்றோ பொருத்த மற்றது என்றோ அ.மாதவையா எங்கும் சுட்டவில்லை. அவர் இவற்றை வரவேற்பவர்; மிகப் பெரிய சீர்திருத்தவாதி. ஆனால், பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும், செய்யும் தொழில் காரணமாக வேறுபாடு கருதக்கூடாது என்னும் நெறியாளரான அவர், தம்மைவிடக் குறைந்த சாதியினரை அவர்களின் செய்தொழில் கொண்டு யாரும் இழிவாக நடத்துதல் கூடாது என்பதை வலியுறுத்தவே இதை எழுதுகிறார். புதிய வாழ்க்கை மரபுகளையும் விழுமியங்களையும் வரவேற்பதில் அ.மாதவையா தீவிரமான நிலைப்பாட்டில் இருந்தார்.

விதவையர் மறுமணம் புரிந்து கொள்ளுவதையும், பிற ஆடவர் கண்களில் படுவதையும் பாலுறவைத் தூண்டும் சிற்றின்ப சுவைமிக்க நூல்களைப் படிப்பதையும் ஆசாரக்கேடு என்ற பெயரில் வலியுறுத்தி விதவைப் பெண்களைத் தங்கள் ஆதிக்கத்தில், கட்டுப்பாட்டில் வைத்திருந்தனர், ஆண்கள். ஆனால் மணமான வயதான ஆண்களும் இளைஞர்களும் தங்களின் பாலுறவுத் தேவைகளை நிறைவேற்றிக்

கொள்வதற்கு விதவைப் பெண்களைப் பயன்படுத்தி, நெறியற்ற பாலுறவில் அவர்களை ஈடுபடுத்தி, அவர்களைத் துன்பத்திற்கு உள்ளாக்கியதை அ.மாதவையா, முத்துமீனாட்சி, பத்மாவதி சரித்திரம், சத்தியானந்தன் நாவல்களிலும், 'என்னை மன்னித்து மறந்துவிடு' சிறுகதையிலும் காட்டி உள்ளார். மனித நேயத்தின் அடிப்படையில் ஆசாரநெறிமுறைகள் மீறப்படுவதை அ.மாதவையா வரவேற்றார். விதவை மறுமணம் செய்து கொண்டு வாழ்வதை அவர் ஆதரித்தார். மாறாக, சாதி ஆசாரத்தின் பெயரால், விதவைக்குக் கட்டுப்பாடுகளை விதித்து அவளை ஈவிரக்கமற்று கொடுமைப்படுத்துவதையும், அதே நேரத்தில் தங்களின் பாலுறவுத் தேவைகளுக்காக அவளை மறைவாக, நெறியற்ற முறையில் பயன்படுத்துவதையும் அவர் கடுமையாகக் கண்டித்தார். மூடப்பழக்க வழக்கங்களையும் வெளிவேடத்தையும் போலி ஆசாரத்தையும் அவர் வன்மையாக எதிர்த்தார். "புனர் விவாகஞ் செய்துகொண்டு கிரமமாய் வாழும் ஒரு விதவையை வெறுத்து விலக்கி, அவ்வாறின்றி இரகசியமாய் மனம் போனபடி வியபிசாரஞ் செய்யும் ஒரு விதவையை நன்கு மதிக்கும் உலகந்தானே இது" (அ.மாதவையா, முத்துமீனாட்சி, ப.77) என்று வரும் பகுதி இதனை வலியுறுத்தும்.

மனிதாபிமானமும் கருணையும் அன்புமே வேண்டுவன எனவும், அவற்றைப் புறக்கணிக்கும் எந்த ஆசாரமும் சாதிக் கட்டுப்பாடும் மாற்றப்பட வேண்டும் - அடியோடு நீக்கப்பட வேண்டும் எனவும் அவர் வலியுறுத்தினார். "நீரில் மூழ்கி இறக்கும் தருணத்திலிருக்கும் நீசன் ஒருவனை, ஒரு பிராமணன் தொட்டிழுத்து கரையேற்றிக் காப்பாற்றினால், பிராயசித்தம் செய்து கொள்ளவேண்டுமென்று நீதி கூறும் உலகந்தானே இது" (முத்துமீனாட்சி, ப.7) என்று முத்துமீனாட்சி நாவலில் அ.மாதவையா கூறுவது அவருடைய சமகாலத்தில் காணப்பட்ட சாதி ஆசாரங்களும் சமூகக் கட்டுப்பாடுகளும் மிக்கு இருந்த நிலையாகும். இத்தகைய, மனித நேயம் அற்ற, காலத்திற்கு ஒவ்வாத மரபுகள் - ஆசார நெறிமுறைகள் - அடியோடு நீக்கப்படவேண்டும் என அவர் வலியுறுத்தினார் இதனை, "இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் நம் முன்னோர்கள் அனுசரித்து வந்த நடை உடை பாவனை நாகரிகங்களோடேயா நாம் இப்பொழுது இருக்கின்றோமா? ஆறு வயதில் ஒரு குழந்தை அணிந்த உடுப்பு இருபது வயதில் சரியாயிருக்குமா?..." (முத்து மீனாட்சி, ப.77) என்னும் கூற்று சீர்திருத்தம் தேவை என்னும் அவருடைய நிலைப்பாட்டை நன்கு காட்டும்.

**மூட நம்பிக்கைகள்**

அ.மாதவையா நாவல், சிறுகதைகள் படைத்த காலம் மெல்ல மெல்ல ஆங்கிலக் கல்வியும் ஐரோப்பிய நாகரிகமும் பரவிக் கொண்டிருந்த

காலம். ஆண்டாண்டுக் காலமாக அடிமைப்பட்டும் உரிமைகளின்றியும் சிந்தனை ஆற்றலுமின்றி இருந்தனர் இந்திய மக்கள். இந்தப் பொதுவான போக்கிற்கு உயர்சாதியினர் கூட விதிவிலக்கு இல்லை. அந்தணர்கள் காலத்திற்கு ஒவ்வாத ஆசாரங்களைப் பின்பற்றி வந்ததைப் போலவே, நாட்டுப்புற வாழ்க்கை முறைசார்ந்த சில மருத்துவ நடைமுறைகளைப் பழக்கத்தில் வைத்திருந்தனர். குறிப்பாகப் பெண்களுக்கு அளிக்கப்பட்ட மருத்துவ முறைகளில், மூட நம்பிக்கைகள் பல கடைப்பிடிக்கப்பட்டதை அ.மாதவையா, பத்மாவதி சரித்திரம், முத்துமீனாட்சி, தில்லைக் கோவிந்தன் நாவல்களில் படைத்துள்ளார். காலமாற்றம், அறிவியல் வளர்ச்சி, புதிய தொழில் நுட்பம் என்பவைகளைக் கருத்தில் கொண்டு, மனிதாபிமான அடிப்படையில், புதிய மருத்துவ முறைகளைப் பின்பற்றி உடனடியான நோய் நீக்கம் செய்ய உதவவேண்டும் என்று அ.மாதவையா அழுத்தமாக வலியுறுத்துகிறார். பெண்களை மட்டும் இத்தகைய மூடநம்பிக்கைகளின் அடிப்படையில், நோய்களைக் காரணங்காட்டித் துன்பப்படுத்தும் கொடுமைகளை முற்கூறிய நாவல்களில் விரிவாக விளக்குகிறார். அ.மாதவையா. பெண்களை இவ்வாறு சிறுமைப்படுத்தி, உடல்-மன நோய்களுக்கு ஆளாக்கித் துன்புறுத்தும் நடைமுறைகளையும் கொடூரமான நம்பிக்கைகளையும் அவர் கண்டிக்கிறார். இப்போக்கு மாற்றப்பட வேண்டும் என்கிறார். பத்மாவதி சரித்திரத்தில் இருபது வயதில் மூன்றாம் முறை கருவுற்ற கல்யாணிக்கு ஏற்பட்ட நரம்புத் தளர்ச்சி நோயை நீக்கி ஆங்கில மருத்துவஞ் செய்யாமல், பிரம்படியும் மந்திரிப்பதும், புளியமிலாறால் அடிப்பதுமாகச் செய்து துன்புறுத்துகின்றனர். குடிப்பதற்குத் தண்ணீர் கூடத் தராததால் அவள் இறக்கிறாள். "வைத்தியன் ஒரு துளி நீர் கூடக் கொடுக்கப்படாதென்று சொல்லிவிட்டதால், ஒருவரும் தண்ணீர் கொடுக்கவில்லை" (பத்மாவதி சரித்திரம், ப.292) என வரும் பகுதி இதைக் காட்டும். புதிய ஆங்கில மருத்துவ முறைப்படி மருந்து கொடுக்காமல் கலியாணியைத் துன்புறுத்திய மூடத்தனமான நம்பிக்கையும் பழமையான பழக்கவழக்கங்களும் அடியோடு மாற்றப்படவேண்டும் என்று அவர் வலியுறுத்துகிறார்.

தில்லைக் கோவிந்தன் நாவலில், பேறு காலத்தின்போது அபாய கட்டத்தில் இருக்கும்போது கூட ஒரு பெண்ணுக்கு மருத்துவம் செய்ய ஆண்மருத்துவனோ, கீழ்ச்சாதி கிறித்தவப் பெண் என்பதால் மருத்துவச்சியோ அழைக்கப்படாததையும், கை கட்டிப் பெரியவர்கள் வாளாவிருப்பதையும் மூடநம்பிக்கைகளாக அ.மாதவையா காட்டுகிறார். அதே போன்று வெறொரு பெண்ணுக்குக் கருப்பை கோளாறினால் தீராத தலைவலி வந்து துடிக்க. அவளுக்கு உரிய மருத்துவஞ் செய்யாமல் மூடநம்பிக்கையின்படி பெரியவர்கள் சடங்கு, பூசை செய்வதும்

சுட்டப்படுகிறது. முத்து மீனாட்சி நாவலில், சிறுமி மீனாட்சி இளமையிலே மணம் செய்து கொடுக்கப்படுகிறாள். வயதுக்கு வருமுன்னரே இளமை மணம் செய்து கொடுக்கப்பட்ட சிறுமி மீனாட்சி, பத்து வயதாகியும் பெரிய பெண் ஆகவில்லை என்று மிகக் கொடூரமாக மருந்துகளைத் தந்து விரைந்து பருவமடையச் செய்யும் முயற்சி விரிவாகக் காட்டப்படுகிறது. "கலைக் கொம்பைத் தேய்த்துப் பாலில் கலக்கிக் குடிக்கத் தந்தும், இலந்தை இலையை எருமைத் தயிரில் கலக்கித் தந்தும் பலவாறாக என்னைச் சீக்கிரம் பெரியவளாக்க முயன்றாள்" (அ.மாதவையா, முத்துமீனாட்சி, ப.44) என்று வரும் பகுதி இதனை வலியுறுத்தும். மேலும், அதே நாவலில் வரும், விரைவில் மீனாட்சி குழந்தை ஒன்றைப் பெற்றுத் தரவேண்டும் என்று அவள் மாமியார் கொடுத்த மருந்துமுறைகள் கூறப்படும் இடத்திலும் இத்தகைய மூடநம்பிக்கை முறைகள் காட்டப்படுகின்றன. "என் மாமி எனக்கு அநேக மருந்துகள் தந்தாள். எவ்வளவு கசப்பாயிருப்பினும் மனத்தைப் பொறுத்துக் கொண்டு அவைகளை-யெல்லாம் நான் சாப்பிட்டேன். கடைசியில் ஒன்றும் பயன்படாமையைக் கண்டு என் மாமி, என்னைப் பிள்ளைப்பூச்சியை விழுங்கச் சொன்னாள். மருந்துகள் பயன்படாமையையும் என் நோயையும் கண்டு, என் மாமி, எனக்குப் பேய் பிடித்திருப்பதாக நிச்சயித்தாள். இதன்பின் ஒரு பேயோட்டும் மந்திரவாதி வந்து வீட்டில் பூஜை செய்யத் தொடங்கினான்..." (முத்துமீனாக்ஷி, ப.53) என்று வரும் பகுதி இதனை வலியுறுத்தும். அறியாமை காரணமாகவும் மூடத்தனமான நம்பிக்கைகள் காரணமாகவும் இவை நடைமுறையில் இருந்தன. நாட்டுப்புற மருத்துவ முறையில் எங்கும் இவை சுட்டப்படவில்லை. இவற்றை வன்மையாகக் கண்டிக்கும் அ.மாதவையா, இவைகளுக்கு மாற்றாக அறியாமை நீங்கும் வண்ணம் புதிய கல்வியும் அறிவியல்பூர்வமான மருத்துவமும் மேற்கொள்ளப்பட வேண்டும் என்று வலியுறுத்தினார்.

**பெண்ணுரிமை மறுப்பு**

அ.மாதவையா வாழ்ந்த காலத்தில், நம் நாட்டில் பெண்கள் கல்வி வாய்ப்பின்றி அடிமைகளாக ஆண்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டு, துன்புற்று வந்தனர். பெண் பலவிதமான மூடத்தனமான பழக்கவழக்கங்களாலும் சமூகக் கட்டுப்பாடுகளாலும் ஆண்களின் சுயநலப் போக்காலும் தொடர்ந்து அல்லலுற்று, இன்னல்களுக்கு ஆளாகி, சொல்லொண்ணாத துயரங்களை அனுபவித்து வந்தனர். பெண்களுக்கு அனைத்து நிலைகளிலும் சமஉரிமை வேண்டும் என்று அ.மாதவையா வலியுறுத்தி எழுதிவந்தார். பெண் அடிமைத்தனத்தை மிகக் கடுமையாக அவர் விமர்சனஞ் செய்துள்ளார். ஆண்கள், பெண்களைத் தங்களின் உடைமைப் பொருளாக – சொத்தாக எண்ணினர் எனவும், எந்த நிலை

யிலும் சமூக அமைப்பில் ஆணுக்குப் பெண் அடிமை என்னும் நிலையே மிகவும் வலிமையானது என்றும், வெள்ளைக்காரர்கள் நம்நாட்டு அரசாட்சியை ஆதிக்கம் செலுத்தி அனுபவித்து வருவதை விட்டுப்போக எப்படி இசையமாட்டார்களோ, அப்படியே ஆண்களும் பெண்களின் மீதான தங்களின் ஆதிக்கத்தை ஒருபோதும் விடமாட்டார்கள் என்று அவர் கூறுவது மிகவும் முற்போக்கான, சீர்திருத்தக் கருத்தாகும். "நமது தேசத்துக்கு வியாபாரிகளாக வந்த அந்நியர்கள் அதிகாரத்தையும் ஆதிக்கத்தையும் விட்டுக் கொடுக்கிறதென்றால் எவ்வளவு மனம் வருந்துகிறார்கள். அப்படியிருக்க எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளாகப் பெண்டுகளைத் தமது அடிமைகளைப் போலும் சங்கம சொத்துக்களைப் போலும் அடக்கி ஆண்டு அனுபவித்து வந்த ஆண்மக்கள், பெண்களும் ஒத்த கல்வியும் சுவதந்திரியமும் கவுரவமும் அதிகாரமும் பெற மனமிசைவது எவ்வளவு கஷ்டமாகும்? அரசன் குடி என்னும் தொந்தத்திலும் மேல்சாதி கீழ்ச்சாதி என்னும் தொந்தத்திலும் ஆண்டான்-அடிமை என்னும் தொந்தத்திலும் மிக வலியதும் நீடித்ததும் ஊனிலும் உயிரிலும் உள்ளத்திலும் ஊன்றி ஊறிப் போனதுமான தொந்தமாகும், ஆண் மேல், பெண் கீழ் என்னும் தொந்தம். அவ்வுணர்ச்சியை நியாய புத்தியால் அடக்கித் துறந்து ஆண் மக்களாவார் பெண் மக்களையும் சமமாக நினைத்து, திரிகரண சுத்தத்தோடு அப்படியே நடத்துதல் அருமையிலும் அருமையாகும்" (அ.மாதவையா, பெண் கல்வி, பஞ்சாமிர்தம், ப.134, வைகாசி, 1924) என்னும் பகுதி இதனை வலியுறுத்தும். அடிமை நிலையை அவர் ஒருபோதும் ஆதரிக்கவில்லை. ஆடவரைப் போலவே, பெண்களுக்கும் சுதந்திரம், சமத்துவம் இருக்க வேண்டும் என அவர் வலியுறுத்தினார். "பிள்ளை பெறுவதையும் மடைத் தொழிலையும் தவிர வேறொன்றுக்கும் யோக்கியதையில்லாமல், பெண்களை முழு மூடர்களாக வைத்திருப்பதனால்தான் இப்படியாகிறது" என்றும், "தான் பிராமணனாய்ப் பிறந்ததால் மட்டும், எவ்வளவோ படித்தவனும் யோக்கியனும், தனவானுமான ஒரு சூத்திரப் பிரபுவைத் தனக்குக் கீழாக எப்படி எண்ணுகிறானோ, அப்படியே தான் புருஷனானதால் எந்த ஸ்திரீயையும் தனக்குக் கீழாகவே நினைக்கிறான்" எனவும் பத்மாவதி சரித்திரம் நாவலில் (பக்.285, 286) அவர் அழுத்தமாகக் கூறியுள்ளார். அறியாமையும் மூடநம்பிக்கைகளும் மிக்கவர்களாகப் பெண்கள் வளர்க்கப்பட்டதையும் அ.மாதவையா விளக்கமாகத் தம் படைப்புக்களில் எழுதியுள்ளார்.

குழந்தைப் பருவத்தில், அறியா வயதில், வயதுக்கு வருமுன்பே, பெண்களுக்கு இளமை மணம் செய்துவைக்கப்படும் நிலை அன்று பரவலாக அந்தணர்களிடம் காணப்பட்டது. இளமை மணம் காரணமாக

அந்தக் காலத்தில், சிறு பெண்கள் இளமையிலே விதவையர்களாகி கடும் துன்பத்திற்கு ஆளாயினர். உடலும் மனமும் நோய்க்கு ஆட்பட்டுத் துன்பப்பட்டனர். இளம் விதவையர்கள் பல கொடுமைகளுக்கு ஆளாயினர். விதவை மறுமணம் ஆதரிக்கப்படவில்லை. இதனை மிக விரிவாக அ.மாதவையா தம் படைப்புக்களில் எழுதினார். விதவை மறுமணம் ஒன்றே இதற்கு ஏற்ற தீர்வு எனவும் அவர் எழுதினார். தில்லைக் கோவிந்தன் நாவலில் நாணிப்பாட்டி, சேஷிப்பாட்டி இருவருமே குழந்தைப் பருவத்திலே விதவைகளாக ஆனநிலை கூறப்படுகிறது. பத்மாவதி சரித்திரம் நாவலில் பத்மாவதி சிறுவயதில் கரிக்கிட்டுவிற்கு மணம் பேசப்பட்டு, மணத்திற்கு முதல்நாள் சீதபேதியால் கிட்டு இறக்க, இளம் விதவையாகாமல், சிறுமி பத்மி தப்புகிறாள். முத்து மீனாட்சி நாவலில், சிறுமி மீனாட்சிகு நிச்சயிக்கப்பட்ட சிறுவன் ராமன், ஆற்றில் நீந்தி விளையாடியபோது, வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டு இறக்கிறான். சிறுமி மீனாட்சி இளம் விதவையாகாமல் தப்புகிறாள். தில்லைக் கோவிந்தன் நாவலில், இளமை மணம் செய்து கொடுக்கப்பட்ட பெண், அடிக்கடி குழந்தைப் பேற்றுக்கு ஆளான நிலையில், கருப்பை கோளாறு, தீராத வயிற்றுவலி நோய்களுக்கு ஆளானதைக் காட்டுகிறார். குழந்தைப் பருவ மணத்தால், உடலும் மனமும் நோய்வாய்ப்பட்டு அடிக்கடி துன்புற்றதைப் பத்மாவதி சரித்திரம் நாவலில் கல்யாணியம்மாள் படைப்பின்வழி காட்டியுள்ளார். அவளுக்கு மருத்துவஞ் செய்த ஆங்கில மருத்துவர் டான்புட் என்பவர், இளம் பருவத்திலே மணம் செய்து கொடுப்பதால் வந்த விளைவு என்று கூறுகிறார். "குழந்தை பருவத்திலேயே புருஷனுடன் வாழத் தொடங்கி, மற்ற சாதிகளில் பெண்களுக்கு விவாகமாகும் வயதிற்குள் இரண்டு பிள்ளைகளும் பெற்று, மூன்றாம் முறையும் சூலுற்றதனால் விளைந்த தீங்குதான் அது என்று சொல்லி, பி.ஏ. பரீக்ஷை கொடுத்து வைத்தியசாலையிற் படித்தும் இவ்வளவு தெரியாமற் போனதற்காகக் கோபாலையரை அவர் கடிந்து பேசினார்" (பத்மாவதி சரித்திரம், ப.265) என்னும் பகுதி இதனை வலியுறுத்தும். முத்துமீனாட்சி நாவலிலும் இளம்வயதில் மணஞ்செய்து கொடுக்கப்பட்டு, இளம் பருவத்திலேயே கணவனின் பாலுறவு வேட்கைக்கு வலிந்து ஆளாக்கப்பட்டு, அதனால் தான் மிகவும் மனம் பாதிக்கப்பட்டதாகவும் உடல்-மன நோய்களுக்கு ஆளானதாகவும் முத்து மீனாட்சியின் கூற்றில் கூறுகிறார்: "வெகு நேரமானபின் என் கணவர் பாவுள்ளுக்குள் நுழைந்து, கதவைத் தாழிட்டார். என் கணவரையும் மாமியையும் நான் அவ்வளவு அதிகம் வெறுத்துப் பகைத்ததற்கு அன்றென்னைச் செய்த குரூரமான இமிசையும் அவமானமுமே முக்கிய காரணம்" (அ.மாதவையா, முத்துமீனாக்ஷி, ப.46) என்ற பகுதி இதைக் காட்டும். இளம் வயது ஆனாலும் விதவையாகிவிட்ட நிலையில்,

பெண்ணுக்கு ஏற்படும் கொடூரங்களையும் அலங்கோலங்களயும், அவர்களுக்குப் பிறர் செய்யும் அவமதிப்புகளையும் குடும்ப அமைப்பில் அவர்களுக்கு ஏற்படும் அவமானங்களையும் முத்துமீனாட்சி நாவலில் அ.மாதவையா விரிவாகவே விளக்கியுள்ளார்.

பெண்களிடம் உள்ள அறியாமை நீங்கவும், அறிவுபெற்று நாகரிகம் பெறவும் அவர்கள் ஆண்களுக்கு இணையாகக் கல்வி கற்பதும், அலுவல் பார்ப்பதும் பொருளீட்டுவதும் மூடநம்பிக்கைகள், மூடப்பழக்க-வழக்கங்கள் ஆகியவற்றை அறவே ஒதுக்கி, அவைகளிலிருந்து மீளவும் வேண்டும் எனவும் அ.மாதவையா வலியுறுத்துகிறார். அவர் காலத்தில் பெண்கள் பள்ளி சென்று கல்வி கற்று வருவதை அவ்வளவாக அந்தணர் குடும்பங்களில் ஆதரிக்கவில்லை. ஒரு சில குடும்பங்களில் பெண்கள் கல்வி கற்பதை ஆதரித்தாலும், பொதுவாக அந்தணர் குடும்பங்களில் பெண் கல்வி கற்பதை மிகக் கடுமையாக எதிர்த்தனர். போன தலைமுறை சார்ந்த மூத்தவர்கள் எதிர்த்ததையும் இளையதலைமுறையினர் பெண் கல்வியை ஆதரித்ததையும் அவர் பத்மாவதி சரித்திரம், முத்துமீனாட்சி, தில்லைக் கோவிந்தன் நாவல்களில் படைத்துள்ளார். முத்துமீனாட்சி நாவ்லில்: "முத்துவை யார் வாசிக்கச் சொன்னது? பெண்கள் வாசித்தால் கெட்டுப் போவார்கள்? அவள் வாசிப்பதை உடனே நிறுத்தவும்" (முத்து மீனாட்சி, ப.26) என்று, தன் மகள் கல்வி கற்பதை (வீட்டிலிருந்தபடியே கூட) விரும்பாமல் தந்தை தடை செய்வதைக் காட்டுகிறார். முத்து மீனாட்சியின் மூத்த சகோதரன் சுப்பிரமணியன், "அவள் படிக்கவேண்டுமென்று ஆசைப்பட்டதினால், நானும் சுந்தரேசனும் அவளுக்குச் சொல்லிக் கொடுக்கத் தொடங்கினோம்" (முத்து மீனாட்சி, ப.28) என்றும், "அவளுடைய புத்திசாலித்தனத்தையும் படிப்பின் பேரிலுள்ள ஆசையையும் பார்த்துத்தான், நான் படிப்புச் சொல்லிக் கொடுக்கத் தொடங்கினேன்.... என் சகோதரிகள் மதுரையில் படிப்பது போலவே முத்துவுக்கும் படிப்புச் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தேன்" (முத்து மீனாக்ஷி, ப.29) என்றும் சுந்தரேசனும் பதில் எழுதியது இதனை வலியுறுத்தும். பத்மாவதி சரித்திரம் நாவலில் நாராயணன் தன் மனைவி பத்மாவதிக்கும் நண்பன் கோபாலனின் தமக்கை சாவித்திரிக்கும் கற்றுத் தருகிறான். தில்லைக் கோவிந்தன் நாவலில் கோவிந்தன் தன் மனைவிக்குக் கல்வி கற்றுத் தருகிறான்.

பெண் கல்வியின் தேவையையும் இன்றியமையாமையையும் அ.மாதவையா பத்மாவதி சரித்திரம் நாவலில், விளக்குகிறார்: " புத்தி விருத்தியும் பேரறிவும் நல்லொழுக்கமுமே கல்வி கற்பதின் முக்கிய பயன்களாகக் கொள்ளவேண்டும்... புருஷனுடைய பணமும் கண்ணியதையும் பெண்சாதிக்கு உதவுவதுபோல் அவனுடைய கல்வியும்

ஞானமும் அவளுக்கு உதவுவதில்லை. புருஷனிடத்தில் பணமிருந்தால் பெண்சாதிக்கு நகைகள் செய்யலாம்; ஆனால், புருஷன் மட்டும் சாப்பிட்டால் பெண்சாதி வயிறு நிறையுமா? அது போல்தான் கல்வியும் அறிவும்; ஆதலால் அறிவடையும் பொருட்டு மானிடப் பிறப்பு எடுத்தவர்கள் யாவரும் கல்வி கற்க வேண்டும்." (பத்மாவதி சரித்திரம், பக்.53-54) என்று வரும் பகுதியால் இதனை அறியலாம்.

கல்வி கற்ற பெண்கள், ஆசிரியைகளாகப் பணிபுரிவதை விஜயமார்த்தாண்டம் நாவலில் சிவகாமி படைப்பு வழியாகவும், சத்தியானந்தன் நாவலில் கல்யாணி வழியேயும் காட்டுகிறார். கல்வி கற்ற பத்மாவதி படிப்பதில் மிகுந்த ஆர்வம் காட்டுவதையும் ஆங்கிலம் கற்பதில் ஈடுபாடு காட்டுவதையும் கணவனுடன் நாடகங்கள் காண வெளியே சென்று வருவதையும் பத்மாவதி சரித்திரம் நாவலில் காட்டியுள்ளார்.

**நல்ல** ஒழுக்கங்களை வளர்க்கவும் மனிதனை மேன்மைப்படுத்தவும் **தீமைகள்** இருப்பின் கண்டறிந்து அவற்றை நீக்கவும் எதிர்த்துப் போராடவும் கல்வி பயன்பட வேண்டும் என்றும் அ.மாதவையா தம் படைப்புகளில் காட்டியுள்ளார். இந்த அடிப்படையில்தான், தம் காலச் சூழலுக்கு ஏற்ப இளைஞர்கள் பெண் கல்வியை ஆதரிப்பவர்களாகவும் செயற்படுத்துபவர்களாகவும் படைத்துள்ளார். இளமை மணத்தால் ஏற்படும் இளம் விதவைச் சிக்கலுக்கு மாற்றாக விதவை மறுமணத்தைத் தீர்வாக முன்வைக்கும் அ.மாதவையா, இளைஞர்கள் அதை ஆதரிப்பதாகவும் தாமே அதைச் செயற்படுத்துபவராகவும் விதவை மறுமணத்தை அந்தணர் சமூகத்துப் பழமைவாதிகள் எதிர்த்தபோது, மிகுந்த துணிவுடன் ஈடுகொடுத்துப் போராடுபவர்களாகவும் படைத்துள்ளார். முத்து மீனாட்சியின் தமையன் சுப்பிரமணியன், விதவை மறுமணத்தை ஆதரிக்க, அவன் நண்பன் சுந்தரேசன் அவளை மறுமணம் செய்து கொண்டு இறுதிவரை வாழ்ந்து காட்டுகிறான்.

இளம் விதவை மறுமணம் செய்துகொண்டு வாழ்வதாக முத்து மீனாட்சி நாவலிலும் சத்தியானந்தன், கிளாரிந்தா நாவல்களிலும் காட்டியுள்ளார். விதவையரை மணம் செய்து கொள்ளும் இளைஞர்கள் கல்விகற்ற, மாறிவரும் புதுயுகப் பிரதிநிதியாக, ஐரோப்பியப் பண்பாட்டின் தாக்கம் பெற்றவர்களாகவும் அ.மாதவையா படைத்துள்ளார். வரதட்சணைச் சிக்கலுக்குள்ளாகி, பெண்களும் பெண்ணைப் பெற்றவர்களும் அல்லல்படுவதை வரன் தேடும் வைபவம், அவனாலான பரிகாரம், அது நேர்ந்தவிதம், கமலத்தின் கல்யாணம் போன்ற சிறுகதைகளில் காட்டியுள்ளார். வரதட்சணை வழக்கம் இந்துமத சாத்திரங்களுக்கு விரோதமானது என்று அ.மாதவையா 'அவனாலான பரிகாரம்'

சிறுகதையில் கூறுகிறார். படித்த இளைஞர்கள் வரதட்சணை வாங்கும் வழக்கத்தை விட்டொழித்தால்தான் இந்தக் கொடிய நோய் நம்மைவிட்டு நீங்கும் என்று அ.மாதவையா வலியுறுத்தியுள்ளார்.

**கிறித்தவ மதமாற்றம்**

அ.மாதவையா புனைகதைகள் படைத்த காலத்தில், கிறித்தவசமயம் செல்வாக்குப் பெற்றுப் பரவி வந்ததால், இந்து சமயத்தில் காணப்பட்ட சாதிக் கட்டுப்பாடுகளின் அழுத்தம் தாளாமல், தாழ்ந்த சாதி இந்துக்கள் கிறித்தவ மதத்திற்கு மதம் மாறினர். இந்துமதத்தில் காணப்பட்ட பல்வேறு மூடநம்பிக்கைகள், சாதிக் கொடுமைகள், சாதிக் கட்டுப்பாடுகள், சமூகச் சீர்கேடுகள் காரணமாக ஆங்கிலக் கல்வி கற்ற, சிறுபான்மை இளைய தலைமுறையினர் கிறித்தவ மதத்தைத் தழுவினர் என்று அவர் தம் நாவல்களில் படைத்தார். அன்றைய காலகட்டத்தில் அந்தணர் சமூகத்தில் விதவை மறுமணம், காதல் மணம், கலப்புமணம் நிகழ எதிர்ப்பு காணப்பட்டது. எனவே, கிறித்தவ மதம் மாறி இத்தகு மணங்களை இளைஞர்கள் செய்துகொள்வதாகக் காட்டினார். சத்தியானந்தன், கிளாரிந்தா நாவல்கள் இதற்குச் சான்றுகள் ஆகும். தம் கால நடப்பைக் காட்ட அ.மாதவையா இவ்வாறு படைத்தார் எனினும் மதமாற்றம் மட்டுமே தீர்வாகாது என அவர் வலியுறுத்தினார். மதமாற்றத்தை அவர் ஆதரிக்கவில்லை. "மதம் மாறுவதுதானா சமூக வாழ்க்கையில் ஏற்படும் இக்கட்டுக்கு மருந்து? மதம் என்ன கோட்டா? தொப்பியா? இறுக்கினால் மாற்றிவிட? அவரவர் நாகரிகத்துக்கும் பயிற்சிக்கும் அஸ்திவாரமாயிருப்பது மதம் தானே? (பத்மாவதி சரித்திரம், ப.359) என்று அ.மாதவையா, பத்மாவதி சரித்திரம் நாவலில் கூறியுள்ளது அவர் கருத்தைப் புலப்படுத்தும். இந்து சமயத்தில் காணப்படும் சமூகச் சீர்கேடுகள், கட்டுப்பாடுகள் போன்றவற்றை மாற்றிச் சீர்திருத்த வேண்டும் என்பதே அவரின் நிலைப்பாடு என அறியலாம். வைதிக இந்துமதத்தில் காணப்படும் சாதி ஏற்றத் தாழ்வு பார்க்கும் சீர்கேடு, கிறித்தவ மதத்திலும் காணப்படுவதை அவர் பத்மாவதி சரித்திரம் நாவலில் காட்டி உள்ளார்: "நம்ம பாளையங்கோட்டை முருகன் குறிச்சியிலுள்ள கிறிஸ்தவப் பிள்ளைமார்களைப் பார். தங்களுக்குக் கீழ்ச்சாதியினராகக் கருதும் கிறிஸ்தவரோடு கொள்வினை கொடுப்புவினை கிடக்க, பந்தி போஜனம் செய்வதுமே துர்லபம். வடக்கன்குளத்திலே சர்ச்சுக்குள்ளேயே சுவர் வைத்துப் பிரித்திருக்கிறார்களாம். உண்மை இப்படியிருக்க, உறிந்துக்கள் எல்லோரும் கிறிஸ்தவராகிவிட்டால் அப்பால் சுவர்க்கந்தான் என்று நினைப்பது தவறே." (பத்மாவதி சரித்திரம், ப.360) என்னும் பகுதி இதனை எடுத்துக்காட்டும்.

மதங்கள் அனைத்திலும் சாதி வேறுபாட்டின் பெயரால், கீழ்ச்சாதியினரை இன்னலுக்கு உள்ளாக்கும் சீர்கேடுகள் உள்ளன என்றும்,

அந்த மதத்திற்குள் உள்ளே இருந்தபடியே, சீர்கேடுகளைப் போக்கவேண்டும் எனவும் மனிதநேயமே முதன்மையானது என்றும் அ.மாதவையா காட்டியுள்ளார்.

**அரசுப் பணி நிலை**

அ.மாதவையாவின் படைப்புகளில் அன்றைய சூழலில், ஆங்கிலக் கல்வி கற்று, அரசு அலுவல்களைப் பார்த்து, நேர்மையாக உழைத்து, தன் முயற்சியால் - கடும் உழைப்பால் - பொருளீட்டி வாழ்ந்து சமூகத் தகுதியைப் பெருக்கிய இளைஞர்களை நாம் காணலாம். தனிமனித உழைப்பு, சுதந்திரம், மேன்மை பெறுதல், சமூகத் தகுதியை அடைதல் போன்றவைகளை இவைகளைக் கொண்டு வலியுறுத்திய அ.மாதவையா மாந்தர்கள் படைப்பு மூலம் இவற்றை வெளிப்படுத்தினார். அதே நேரத்தில் அரசு அலுவலர்களாக இருந்து தவறான நெறிகளில் பொருளீட்டியும், குற்றங்களைச் செய்தும், தம்முடைய அரசுப்பணிகளை - பதவிகளை - முன்னிறுத்திப் பிறரைத் துன்புறுத்தியும் தவறான செயல்களைச் செய்தவர்கள் தண்டனை பெற்றுச் சீர்கெட்டுத் தாமும் துன்புற்றுத் தம்மைச் சார்ந்தோரையும் துன்பத்திற்கு ஆளாக்கியதை அ.மாதவையா தம் புனைகதைகளில் படைத்துள்ளார். இதன்வழி, இப்படி இருக்கக்கூடாது எனவும் அவர் வலியுறுத்தினார். நேர்மை தவறிப் பொருளீட்டி வாழும் சீரழிவை - தனிமனித ஒழுக்க வீழ்ச்சியை - அ.மாதவையா கண்டிக்கிறார். அரசுப் பணியாளர்கள் மக்களை ஏமாற்றி, அச்சுறுத்திப் பணம் சேர்ப்பதை லெப்டினன்ட் பஞ்சு, சத்தியானந்தன் நாவல்களில் காட்டி, அப்போக்கைக் கண்டித்தார். விஜயமார்த்தாண்டம் நாவலில், காவல் துறையினர், வழக்கறிஞர் ஆகியோர் மக்களை ஏமாற்றி, அச்சுறுத்திப் பணம் பறிப்பதைக் கண்டித்துள்ளார். தில்லைக் கோவிந்தன் நாவலில் நீதித்துறை, காவல்துறை இரண்டையும் அவர் கடுமையாக விமர்சித்துள்ளார். பத்மாவதி சரித்திரம் நாவலில் வரும் இறங்கல் சப்மாஜிஸ்டிரேட் நரசிம்ம முதலியார், கால்வாய் சூப்பிரண்டெண்ட் நா-கமையர் வக்கீல் அண்ணாசாமி அய்யர் ஆகியோர் சம்பாதித்த முறை ஏற்புடையதாக, பின்பற்றத்தக்கதாக இல்லை என்று அ.மாதவையா காட்டுகிறார். ஊழல், இலஞ்சம், தவறான வழிகளில் பொருளீட்டல் என அத்தனை தவறுகளையும் செய்து, குற்றங்களுக்காகத் தண்டனைபெறுகின்றனர் எனவும் அ.மாதவையா காட்டுகிறார். இவர்களைப் போல இருக்கக் கூடாது என்று அவர் காட்டுகிறார். ஒழுக்கக்கேடும் தவறான நடவடிக்கைகளும் தண்டனைகுரியன என்று அவர் படைத்துள்ளார்

**புனைகதை - படைப்பாக்க நெறிகள்**

அ.மாதவையா நடப்பியல் நெறியாளர் என்று போற்றப்படுபவர். தொடக்ககால நாவல் ஆசிரியர்களுள் அவர் அளவிற்கு ஒவ்வொரு

நாவலிலும் ஒவ்வொரு வகையான கதைகூறு உத்திமுறையையும் நாவலின் கரு புலப்பாட்டிற்கு ஏற்ற கதை எடுத்துரைக்கும் முறையையும் வடிவச் செம்மையுடன் கையாண்டு வெற்றி பெற்றவர் வேறு எவருமிலர். பத்மாவதி சரித்திரம் நடப்பியல் நாவல். அது ஆசிரியர் கதை கூறும் முறையில் அமைந்து உள்ளது. ஆசிரியர் கதை கூறுநடையும் கதைமாந்தர் உரையாடலுமாக அமைந்துள்ளது. கதைமாந்தர் உரையாடலில் நாடகப்பாங்கு அருமையாகவும் சுவைபடவும் ஆளப்பட்டு உள்ளது. முத்துமீனாட்சி, தில்லைக் கோவிந்தன் ஆகிய நாவல்கள் தன்மைக் கூற்றில், தலைமைமாந்தர் தம் கதையைத் தாமே கூறும் பாங்கில் தன்வரலாறு போல - சுயசரிதை போன்று - எழுதப்பட்டுள்ளன. முத்து மீனாட்சி நாவலின் தலைப்பிலே, 'முத்து மீனாட்சி - ஒரு பிராமணப் பெண்ணின் ஸ்வசரிதை' என்று உள்ளது இதைக் காட்டும். நாவல், கதைத் தலைவி முத்து மீனாட்சி கூற்றிலே படைத்துள்ளார். அந்தண விதவைப் பெண்ணின் மறுமணம் இந்த நாவலின் மையச் சிக்கலாக ஆளப்பட்டுள்ளது. இளம்விதவையான முத்து மீனாட்சி, தானே தன் கதை யைக் கூறும் முறையில் - தன் வரலாறு கூறும் பாங்கில் - அமைத்துள்ளார். நடப்பியல் பண்பைப் புலப்படுத்தும் வண்ணம் தலைப்பிலே அதைச் சுட்டியுள்ளார். சமூகக் கொடுமைகளுக்கும் புறக்கணிப்பிற்கும் அவள் ஆளானதை - அக்கொடுமையை - அவளே கூறும்போது அதன் தீவிரத் தன்மையையும் அது நீக்கப்பட வேண்டிய அவசியத்தையும் படிப்பவர் மனத்தில் ஏற்படுத்த, இத்தகு தன் வரலாற்று முறை மிகவும் ஏற்புடைய-தாகவும் பொருத்தமானதாகவும் உள்ளது. 'தில்லைக் கோவிந்தன்' நாவலும் வரலாற்று முறையில், வாழ்க்கை வரலாற்று முறையில் கதை கூறப்படுகிறது. கதைத் தலைமைமாந்தரான கோவிந்தனின் கூற்றில் தன்மைக் கூற்றில் கதை கூறப்படுகிறது. வாழ்க்கையின் பல்வேறு கட்டங்களில், கதைத் தலைவன் கோவிந்தன், அடையும் வளர்ச்சியையும் அதற்கு அடிப்படையான அவனுடைய அனுபவங்களையும் அவன் கூறுவதாகத் தருவது படிப்பவருக்கும் நாவல் மாந்தருக்கும் இடையில் அணுக்க உறவை ஏற்படுத்த உதவும் என ஆசிரியர் எண்ணியுள்ளார். அது வெற்றியும் பெற்றுள்ளது. தில்லைக் கோவிந்தன் நாவலில், தலைவன் கோவிந்தன் இறந்துவிட்டதாகவும் அவன் இருந்தபோது அவன் எழுதிய அவனுடைய தன் வரலாற்றை வெளியிடும் உரிமையைப் பம்பா என்னும் பெயரை உடைய தன் நண்பனுக்குக் கொடுத்தாகவும் ஆசிரியர் கூறியுள்ளார். நடப்பியல் நாவலாக ஆக்குவதற்கு, நாவலிற்கு நம்பத்தன்மையை ஏற்படுத்துவதற்கு ஆசிரியர் கையாண்ட புதிய உத்தியாகும். நாவலின் இடையே வரும் தகவல் பிழைகளை எல்லாம் ஆங்காங்கே, அடிக்குறிப்பிட்டு, பம்பா திருத்தியுள்ளதாகவும் தரப்பட்டுள்ளது. சான்றாக, இரண்டாம் அதிகாரத்தில, "நியாய ஸபையின்

தீர்ப்பைப் பெற்று விவாஹ ரத்து செய்யலாம் என்ற எண்ணம் ஹிந்து மனப்பான்மை கொண்ட அவருடைய மனத்தில் தோன்றவில்லை" (ப.17) என்று கூறிவிட்டு, அதில் உடுக்குறியிட்டு, அடிக்குறிப்பில், அதன் விளக்கமாக, "ஹிந்துக்களுக்குச் சட்டப்படி விவாஹரத்து செய்யும் உரிமையில்லை என்பதை ஆசிரியர் மறந்துவிட்டார் போலும்-பம்பா" (அ.மாதவையா, தில்லைக் கோவிந்தன், மொழிபெயர்ப்பு வே.நாராயணன்,ப.17) என்று தந்துள்ளார். இது கதையன்று; நடந்த நிகழ்வுகள் என்ற உணர்வைப் படித்தவர் மனத்தில் ஏற்படுத்த ஆசிரியர் விரும்பியதே இதற்குக் காரணமாகும். அ.மாதவையா அவர்களின் பெயரே, பெருங்குளம் அ.மாதவையா, பி.ஏ. என்ற ஆங்கில வடிவத்தின் (Perumkulam, A. Madhavaiah, B.A.) சுருக்கமான (Pamba) வடிவம் பம்பா என்பதாகும்.

'விஜயமார்த்தாண்டம்' நாவல், மறவர் சமுதாயம் பற்றிய காதல் கதையாகும். தம்முடைய இனமான அந்தணர் இனத்தை விடுத்து, மறவர் இனத்தை மையமிட்டுக் கதையை அமைத்ததிலிருந்து தற்சார்பற்ற நிலையில் கதைப்பொருளைக் காணும் முறையை உருவாக்கிய முதல் நாவலாசிரியராக அவர் விளங்குகிறார். இவ்வகையிலும் புதிய செல்நெறியை உருவாக்கியவராக (Trendsetter) அ.மாதவையா விளங்குகிறார். புலிமலை ஜமீனுடைய முன்காலத்து நிகழ்ச்சிகள் யாவும் மெய்விளம்பி என்னும் இதழில், இதழ்ச் செய்தியாக வெளியிடப் பட்டதாகக் காட்டப்படுகிறது. 'மெய் விளம்பி', இதழ், எண் 108, நாள் 05.01.1918 என்று நாள், எண் என்னும் புள்ளி விவரங்களுடன் (அ.மாதவை யா, விஜயமார்த்தாண்டம், ப.2) ஆசிரியர் தருவது, நம்பகத் தன்மையைத் தந்து நடப்பியல் பாங்கை நாவலுக்கு ஏற்படுத்துவதற்காகும். சங்க அகப்பொருள் மரபிற்கு ஏற்ப, இந்த நாவல் காதற்பத்து, கற்புப்பத்து என இரு பிரிவுகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. செந்தமிழ் நாவல் என்று நாவலின் தலைப்புப் பக்கத்திலே தரப்பட்டுள்ளது. காதல் கதை என்பதையும் திருமணத்திற்கு முன்னரே, காதலர் இருவரும் பழகிக் காதல் கொண்டு காதலில் தடைகள் ஏற்பட, பெண் (சிவகாமி) வீட்டைவிட்டு ஓடி, நகரத்திற்கு வந்து, தங்கிப் பணிபுரிந்து வாழ்வதையும் இந்த நாவலில் அ.மாதவையா படைத்துள்ளார். காதல் கதையானபடியால், ஆசிரியர் காதற்பத்து, கற்புப்பத்து எனப் பகுத்து, செந்தமிழ் நாவல் என்று குறிப்பிட்டுள்ளார். இரு பகுதிகளிலும் ஒவ்வொன்றிலும் பத்துப்பத்து இயல்களாக உள்ளபடியாலும் காதல் பத்து - கற்புப்பத்து என்று பெயரிட்டுள்ளார். நூலினுள் பொருளடக்கம் பகுதியில் இயல் எண்களாகத் தமிழ் எண்களை ஆசிரியர் ஆண்டு உள்ளார் இவையாவும் அந்நாளில் புதுமை என்பதுடன், அ.மாதவையாவின் தமிழ்ப் புலமையை எடுத்துரைக்கவும் பயன்பட்டுள்ளன.

சத்தியானந்தன், கிளாரிந்தா, லெப்டினன்ட் பஞ்சு நாவல்கள் ஆசிரியர் கூற்றில் படர்க்கை இடத்தில் கதை கூறும் முறையில் உள்ளன. சிறு கதையில் 'திரௌபதி கனவு', 'பொய்யல்ல மெய்யே' கதைகள் மட்டுமே கதைமாந்தர் தன்மைக் கூற்றில் கதை எடுத்துரைக்கப்படுகின்றன. ஏனைய கதைகள் ஆசிரியர் கூற்றிலே படர்க்கையிடத்திலே கூறப்படுகின்றன. ஆயினும் கதைகள் பெரும்பாலானவற்றில் கதை முழுவதிலும் நாடகமுறை உரையாடல் மிக வலுவாகவும் சுவையாகவும் ஆளப்பட்டு உள்ளது. நாடகவகை எடுத்துரைத்தல், உணர்வுவெளிப்பாடு என்பவைகளுக்கு இந்தமுறை மிகவும் துணைசெய்கிறது. 'கண்ணன் பெருந்தூது' சிறுகதை முழுவதிலும் உரையாடல் மிக அற்புதமாக ஆளப்பட்டுள்ளது. தொடக்கப்பகுதியில் மட்டும் கதை நிகழும் சூழலைக்காட்ட, ஆசிரியர் எடுத்துரைத்தல் ஒரு சிறுபகுதி - ஒரு சிறுபத்தி - மட்டுமே வருகிறது. அப்புறம் கதை முழுக்க உரையாடல் மட்டுமே இடம் பெறுவது தமிழ்ச்சிறுகதையில் இன்றளவும் பெரிய சாதனையாகும். கதையில், 'கண்ணன் பெருந்தூது கேளாய் நீ காரிகையே' என்னும் பாடலடி பல்லவியை - மீனா என்ற பெண், தான் புதியதாகக் கற்றுக் கொண்ட பாட்டு என்பதாகக் கூறி, சொல்லத் தலைப்படுகிறாள். ஒவ்வொரு முறையும் அந்த ஓர் அடியைப் பாடுவதற்குள்ளாக வெவ்வேறு திசை திருப்பும் வேலை வர, பாடலின் இரண்டாம் அடி வராமலே, அதற்குள் கதை முடிந்துவிடும் கதையமைப்பு மிகச்செறிவாக உள்ளது. கதை நெடுக வரும் ஓர் அடி மீண்டும் வருவதான உத்திமுறையும் அதுவே கதைக்குத் தலைப்பாக அமைந்துள்ள திறமும் ஆசிரியர் கதை கூறும் எடுத்துரைத்தல் முறையே இல்லாமல் முழுவதும் உரையாடலால் ஆன அமைப்பில் உள்ள செறிவான கட்டுக்கோப்பும் கதையினூடே வரும் எள்ளலும் கேலியும் கிண்டலும் கதையின் கருவான சாதி வேறுபாட்டை வைத்துத் தாழ்ந்த சாதியினனான எதிரில் வரும் வழிப்போக்கனை இழித்துப் பேசி, அவமானப்படுத்தும் உயர்சாதி மனப்பான்மையும் மிக அழுத்தமாக ஒன்றிணைந்து இச்சிறுக்கதையை மிகச்சிறந்த கதையாக, தமிழ்ச் சிறுதையின் உயர் சாதனையாக - ஆக்கியுள்ளது. கதையைப் படிக்கும் வாசகனின் கவனம் முழுவதும் அப்பெண்களின் உரையாடலிலே இருக்கும்படியாக, கதையை அமைத்து, நிகழ்ச்சி ஒருமை, பாத்திரப்படைப்பு ஒருமை, உணர்வு ஒருமை ஒன்றிணைந்து வருமாறு மிகச் சிறந்த சிறுகதையாக இதை அ. மாதவையா படைத்துள்ளார். கதையின் இடையில், வழிப்போக்கனான ஒரு தாழ்ந்த சாதிக்காரன் வருவதைக் கூட, உரையாடல் போக்கிலேயே காட்டுகிறாரே அன்றி, ஆசிரியர் புகுந்து அறிமுகப்படுத்தவில்லை.

"மீனா : மேலே சொல்லறேன்.

கண்ணன் பெருந்தூது கேளாய் நீ காரிகையே.

அடே! அடே! இன்னம் இரண்டி தள்ளிக்கோடா! உனக்கு கோடிப் புண்ணியமுண்டே! நீ நல்லவனாச்சே! பச்சை அமேத்யம் இன்னா! பழம்பாதரகைஷயின்னா! கொஞ்சம் தள்ளிக்கோ அப்பா" (அ. மாதவையா கண்ணன் பெருந்தூது, ப. 610, பஞ்சாமிர்தம், கார்த்திகை, 1925) என்ற பகுதி இதைக் காட்டும். கதையில் ஐந்து அந்தணப் பெண்கள் குளித்து விட்டுத் தூய்மையுடன் வரும்போது நிகழும் நிகழ்ச்சி ஒன்றே கதையின் மையமாகும். பஞ்சபாண்டவர் ஐவருக்காகக் கண்ணன் பெருந்தூது நடந்தது; ஐந்து அந்தணப் பெண்கள் நடந்து வரும்போது கண்ணன் பெருந்தூது பற்றிப் பாடி வருகின்றனர். அரசர்களுக்காகக் கண்ணன் தூது போனதைப் பாட்டாகப் பாடுகின்றனரே அன்றி, நீராடிப் புறத்தூய்மை பெற்றுக் கடவுள் கண்ணனைப் பாடினாலும் அகஉணர்வில் அவர்களிடம் சாதி பற்றிய மேன்மை உணர்வு – ஆதிக்க உணர்வு மேலோங்கியுள்ளது என்பதை எள்ளல் சுவையுடன் அவர் அழுத்தமாகக் காட்டியுள்ளார். கதையின் தொடக்கமான முதற்பகுதியில் "5 பிராமண ஸ்திரீகள் சூரியோதய காலத்தில் தாமிரவருணி நீராடிக் கரை ஏறினர்." (அ. மாதவையா, கண்ணன் பெருந்தூது, பஞ்சாமிர்தம், ப. 607 கார்த்திகை, 1925) என்று வரும் பகுதியில், 'ஐந்து பெண்கள்' என்று எழுத்தால் எழுதாமல் எண்ணால் சுட்டுவதும் சிறுகதையில் புதிய உத்தியாகும். இப்படிப் பலவழிகளிலும் அ.மாதவையா இச்சிறுகதையை மிகவும் கலையழகுடன் படைத்துள்ளார். நாவல்களிலும் சிறுகதைகளிலும் நாடகப் போக்கில் நிகழ்ச்சிகள், மாந்தர் பண்பு நலன், உரையாடல் வழியே முரண்பாட்டை வளர்த்துக் கதைப் பின்னலில் திருப்பங்களை உருவாக்கியுள்ளார். எள்ளல் எடுத்துரைத்தல் உத்தியை இதற்குப் பெரிதும் துணையாக அவர் கையாண்டார். இதற்கு ஏற்பக் கதை மாந்தர்களை வகை மாதிரி மாந்தர்களாக – கேலிச்சித்திரங்களாக – அவர் படைத்து வெற்றி பெற்றார். பத்மாவதி சரித்திரம் நாவலில் வரும் சேஷ அய்யர், பப்புசாஸ்திரி, ஐயாசாமி வாத்தியார், விஜயமார்த்தாண்டம் நாவலில் வரும் வீரசங்கிலித் தேவர் ஆகியோர் இத்தகையவர்களுள் ஒரு சிலர். குறைபாடுகளை உடைய இம்மாந்தர்களின் செயல்களில் மட்டுமின்றி, உருவம், தோற்றம் வருணனையிலும் கேலிச்சித்திரப் பண்பை அ.மாதவையா பின்பற்றியுள்ளார். பத்மாவதி சரித்திரம் நாவலில், 'தாமஸ் கே. என்னும் உயர் சாதிக் கலப்பில் பிறந்த கிறித்தவர் தம் ஒரே மகளுக்கு மாப்பிள்ளையாகத் தேர்ந்து எடுக்கப்படத் தாம் எண்ணிய பீட்டர் சாமுவேலின் மூலம் – கோத்திரம் பற்றித் தீவிரமாக விசாரித்து, அறிந்து பின்வாங்கி விடுகிறார் என்பதை எள்ளல் சுவையில் அவர் காட்டுகிறார். "திருக்குற்றாலம் பிள்ளையின் பேரனும், ஒரு பிராமணத்தியின்

குமாரனுமான அவர், தம் மகளை மணம் புரிந்து கொடுக்கும் விஷயத்தில் வரம்பு மீறிச் செல்ல மனமிசையவில்லை. தன் மனதுக்கிசைந்த மாப்பிள்ளையான பீட்டர் சாமுவேலின் சரீரத்திலுலாவும் இரத்தத்தில் சுந்தரர், அப்பர் மரபினோர் இரத்தக் கலப்பிலும் திருநாளைப் போவார், ஏனாதி நாயனார் மரபினரின் இரத்த சம்பந்தமே அதிகமென்பதை அறிந்தவுடன் காரியம் மேற்போகாமற் அவர் தடுத்துவிட்டார்" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், பக். 322-323) என்ற பகுதி இதற்கு மிக நல்ல எடுத்துக்காட்டு. புதுமைப்பித்தனிடம் பின்னர் மிகவும் நுட்பமாகக் காணப்பட்ட எள்ளல் வகை எடுத்துரைப்பு உத்தி அ. மாதவையாவிடம் அருமையாகக் காணப்பட்டது. சமூகச் சீர்கேடுகளைச் சாடுவதற்கு அ. மாதவையா பின்பற்றிய எள்ளல் எடுத்துரைப்பு உத்தியைப் பின்வந்த புதுமைப்பித்தன் அதே பணிக்காகப் பின்பற்றினார். அவருக்குப் பின் வந்த தமிழ்ப் புனைகதையார்களிடம் இது அதிகம் காணப்படாதது பெருங்குறையாகும். அ.மாதவையாவனின் "ஏணியேற்ற நிலையம்" சிறு-கதை இவ்வகை எள்ளல் எடுத்துரைத்தலுக்கு மிகச் சிறந்த மற்றொரு சான்றாகும். "ஏணியேற்ற நிலையமாகச் சில மாதங்களுக்கு இயங்கிய வீடு, இப்பொழுது ஒரு கடையாகி, பழைய கோணிச் சாக்குகளும் கிரோஸின் டின்களும் பீப்பாய் பதிலிகளும் அதில் விற்கப்படுகின்றன. மூடபக்தி மூட்டைகள், சாதிக் கொழுப்பு பிதிலிகள், வீண்டம்ப டின்கள் சத்திழந்த ஆசாரக் கழிசடைகள் போன்ற பழைய பண்டங்கள் மட்டும் அங்கே விலையாவதில்லை" (அ.மாதவையா, ஏணியேற்ற நிலையம், பஞ்சாமிர்தம், ப. 50, சித்திரை, 1925) என்று வரும் பகுதி இதனைக் காட்டும்.

பத்மாவதி சரித்திரம், முத்து மீனாட்சி ஆகிய நாவல்களில் இடம் பெறும் கடிதங்களில் குழந்தைகள் எழுதிய கடிதங்களைப் பிழையான வடிவில், குழந்தைகள் எழுதிய வடிவிலேயே தந்து, நாவலுக்கு உண்மைத் தோற்றத்தை ஊட்டி, நடப்பியல் நெறியைத் தருவதற்குப் பயன்படுத்தி உள்ளார். பத்மாவதி சரித்திரம் நாவலில் வரும் நாட்குறிப்பு, கடிதங்கள்; அவனாலான பரிகாரம் சிறுகதையில் வரும் கடிதம் என்பன கதை எடுத்துரைத்தலுக்கு ஏற்ற உத்திகளாக ஆளப்பட்டுள்ளன.

பத்மாவதி சரித்திரம் நாவலில் அந்தணர் குடும்பத் திருமணச் செலவினை அப்படியே பட்டியலிட்டுக் (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 60) காட்டி, உண்மையிலே நடக்கும் மணச் செலவுப்பட்டியல் போலத் தோற்றச் செய்து, உண்மைத் தன்மையைத் தர முயன்றுள்ளார். இந்த உத்தியும் பின்னால் தமிழ் நாவல் வரலாற்றில் பலரால் பின்பற்றப்பட்டுள்ளது.

'ஏணியேற்ற நிலையம்' சிறுகதையில் இதே போன்று, அந்த வீட்டிற்கு வந்த பல்வேறு இனத்தார்கள் பற்றிய பட்டியல் ஒன்றை (அ. மாதவையா,

ஏணியேற்ற நிலையம், ப. 47 பஞ்சாமிர்தம், சித்திரை, 1925) இதே பாங்கில் அவர் தந்துள்ளார்.

**நடை**

அ. மாதவையாவின் புனைகதைகளில் பயின்று வரும் நடை எளிமையான, மறுமலர்ச்சி நடையாகும். மாந்தர்களின் உரையாடலில் பேச்சு வழக்குச் சொற்களும் கொச்சைச் சொற்களும் பிறமொழிச் சொற்களும் கலந்திருந்தன. ஆசிரியர் கதைகூறும் எடுத்துரைத்தலில், நீண்ட தொடர்களாலான நடை, எளிய நடை, ஓரளவிற்குத் தனித் தமிழ் நடை என்னும் போக்குகள் கலந்திருந்தன. எளிமையான மறுமலர்ச்சி நடையில் புனைகதைகள் எழுதும் முயற்சி அருகிய வழக்கமாக இருந்த அன்றைய சூழலில் அ. மாதவையா அதை உணர்ந்து "வசன நூல்களே மிக அருமையான நமது தமிழ்ப் பாஷையில்" (பத்மாவதி சரித்திரம், முகவுரை, ப. 4) என்று பத்மாவதி சரித்திரம் நாவலில் முன்னுரையில் எழுதினார். இதனைப் போக்க அவர் உரைநடை நூல்களை நிறைய எழுதினார். நாவல்கள் பெரும்பாலும், எளிய மக்களாலும் அதிகம் கல்வியறிவு இல்லாத பெண்களாலும் படிக்கப்படுவதால், இலக்கண வழுக்களில்லாத நன்னடையில் எழுதப்பட வேண்டும் எனவும் அ.மாதவையா கொள்கையை வைத்திருந்தார். நன்னடை என்று அவர் கூறும் நடை, புனைகதைகளில், மாந்தர்களின் உரையாடலில் அன்றி, நாவலாசிரியர் கதை கூறும் எடுத்துரைத்தல் நடை, எளிமையான பண்பும் திரிபுகளின்றி, உலக வழக்குடன் ஒட்டிய சொற்களுடன், தெளிவுடன் அனைவர்க்கும் ஏற்றதாக இனிமை தருவதாக இருக்க வேண்டும் என்று அவர் விளக்கினார். பொது மக்களுக்கு ஏற்ற நடையிலே அவர் புனை கதைகளை எழுதினார். அவருடைய பத்மாவதி சரித்திரம் நாவலின் நடையைப் பற்றி, "பண்டிதர்கள் போற்றும் நடையாகவும் இல்லாமல், பேச்சுத் தமிழ் நடையாகவும் இல்லாமல், பல்லாயிரக்கணக்கான பொது மக்களுக்குரிய நடையாக உள்ளது" என்று அக்காலத்தில் இதழ் ஒன்று மதிப்புரை செய்து எழுதியது (The Ceylon Independent) - இது அ. மாதவையாவின் 'உதயலன்' என்கிற கொற்கைச் சிங்களவன், நூலின் முதற்பக்க விளம்பரத்தில் உள்ளது. மாதவையாவின் உரைநடை பற்றி அவர் வாழ்ந்த காலத்திலேயே வந்த மதிப்பீடு இது. எனவே, அவருடைய நடை, பொது மக்களுக்குரிய நடையாக இருந்தது என அறியலாம். நன்னடை எனவும், மறுமலர்ச்சி நடை எனவும், தமிழ் படிக்கத் தெரிந்த அனைவரும் படிக்கத் தகுந்த நடை எனவும் அவர் கூறியதும் இதை வலியுறுத்தும்.

தமிழை எழுதும் போது, ஆங்கிலம், வடமொழி (சமஸ்கிருதம்) கலப்பற்ற, தனித்தமிழில் எழுத வேண்டும் என்று அவர் கருதினார். இதனை, சித்தார்த்தன் என்னும் நூலின் முன்னுரையில் "வடமொழிச்

சொற்களே கலவாத நூலென்றும் இதுகாறும் தமிழில் இல்லாமையும், அத்தகைய நூல் தமிழ் மாணவருக்குப் பேருதவியாகும் என்பதையும் நினைத்து, கூடியவரை இந்நூலைத் தனித்தமிழில் இயற்றியிருக்கிறேன். இதனால், சில சொற்றொடர்கள், காதுக்கு இனிமையில்லாதனபோல் முதலில் ஒலிக்கலாம். புதுமையினால் தோற்றும் இவ்வோசைக்குறை நாள டைவில் நீங்கி விடுமென்று நம்புகிறேன்" (அ. மாதவையா, சித்தார்த்தன், முன்னுரை, ப. vii) என்று கூறியுள்ளார். இக்கூற்றில், வடமொழிச் சொற்களே கலவாத தனித்தமிழில் எழுத அவர் ஆர்வங் கொண்டிருந்தார் எனவும், அப்படி எழுதும்போது சில சொற்றொடர்கள் புதுமையாக, காதிற்கு இனிமை தராமல் இருக்கக் கூடும் எனவும் நாளடைவில் பழக்கத்தில் அது சரியாகிவிடும் எனவும் கருத்துக் கொண்டு இருந்தார் எனவும் அறியலாம். இந்த முன்னுரைப் பகுதியே தனித்தமிழ் நடையில் அமைந்துள்ளது என்பது அறியத்தக்கது. இதைத் தொடர்ந்து அவர் தனித்தமிழில் ஆர்வங்கொண்டு எழுதி வந்தார். 1918-ஆம் ஆண்டில் வெளியான 'புத்தசரிதை' நூலைத் தொடர்ந்து, முத்து மீனாட்சி நாவலின் திருத்திய பதிப்பின் முன்னுரையில், 1924-ஆம் ஆண்டில், "மிகப் பல தலைமுறைகளாக ஒரே பழஞ்சுவட்டில் சுற்றி வந்து கொண்டிருந்த நமது ஜனசமூக வாழ்க்கைப் பெருந்தேரானது இவ்வண்ணம் புதுச்சுவடுகள் பற்றிப் புதியதோர் கிளர்ச்சியோடு நாளுக்கு நாள் முன்னேற்றம் அடைந்துவரும் புத்தியக்கத்துக்கு நானுமே ஒரு சிறு தூண்டுகோலென நம்பி என் மனம் மகிழ்கின்றது". (அ. மாதவையா, முத்து மீனாக்ஷி, பக் iiii iv, முன்னுரை) என்று எழுதினார். ஜனசமுகம் என்ற ஒன்றுதான் வடசொல் கலந்த சொற்றொடர்; மற்றபடி இப்பகுதி தனித்தமிழ் நடையிலே உள்ளது. புத்தியக்கம், பழஞ்சுவடு, புதுச்சுவடு என்ற சொல்வாக்கங்கள் அவருடைய தனித்தமிழ் ஆர்வத்தைக் காட்டும். சமூகச் சீர்கேடுகளுக்கு எதிரான புதிய மரபுகளை உருவாக்கும் சமூகச் சீர்திருத்த இயக்கம் என்பதை மையமிட்டு இப்பகுதி எழுதப்பட்டுள்ளது. ஆயினும், பிறமொழிக் கலப்புடன் எழுதப்பட்ட நடை பழஞ்சுவடு எனவும், தனித்தமிழ் நடை புதுச்சுவடு எனவும் பொருள் கொள்ளலாம். அந்தப் புத்தியக்கத்துக்கு அடிநாட்களில் அ. மாதவையாவும் தூண்டுகோலாகச் செயற்பட்டுள்ளார்.

தாம் எடுத்துக் கொண்ட புனைகதைகளில் காட்டப்படும் சமூகப் பின்னணிக்கு ஏற்ற முறையில் மொழியை அவர் ஆண்டுள்ளார். பத்மாவதி சரித்திரம், முத்து மீனாட்சி நாவல்களிலும் வேறு பல சிறுகதை-களிலும் அந்தணர் சமூகப் பின்னனி முதன்மைப்படுத்தப்படுவதற்கு ஏற்ப, வடசொற்கள் கலந்த நடையை அ. மாதவையா ஆண்டுள்ளார். விஜயமார்த்தாண்டம் நாவலின் சமூகப் பிண்னணிக்கு ஏற்ப வடசொற்கள் சற்றுக் குறைவான நடையை அவர் ஆண்டுள்ளார். தனித்தமிழ் நடையில்

- நன்னடையில் - எழுத வேண்டுமென்று அவர் வலியுறுத்தினாலும் கூட, நாவலின் நடையழகைக் குன்றச் செய்யும் முறையில் இடர்ப்படக்கூடாது என்றும் அவர் கருத்துடையவராக இருந்தார். "தனித் தமிழ்ச் சொல் அன்றிப் பிறவற்றைக் கையாளோம் என்று வீண் வருத்தமுற்று நடையழகு குன்றி இடர்ப்படுவது மதியாகாது (அ. மாதவையா, "தமிழ் இலக்கிய அபிவிருத்தி", தமிழர் நேசன், 1920-21, மார்கழி, ப.242) என்று அவர் எழுதியுள்ளது இதை வலியுறுத்தும். அ.மாதவையாவின் புனைகதைகளில் நீண்ட வாக்கியங்களைக் காணலாம். விஜயமார்த்தாண்டம் நாவலில் இப்பண்பை மிகுதியாகக் காணலாம். பத்மாவதி சரித்திரம் நாவலிலும் இப்பண்புள்ளது. "முன்னதிகார வர்த்தமானத்துக்கு மூன்று வருஷங்களுக்குப் பிற்பட்ட சங்கதிகளோடு ஏன்நிறுத்திவிட்டோ மென்றும், நம்முடைய நண்பரின் தற்கால நிலைமையை ஏன் வெளிப்படுத்த வில்லையென்றும் கேட்பீராயின், அவ்வாறு வெளியிட்டால், அவர்களைப் பற்றி விசாரிக்கவும் இன்னாரென்று கண்டு பிடித்தவர்கள் நேரில் போய்ப் பார்க்கவும் அல்லது கடிதங்களெழுதவும், இவ்விதமான தொந்திரவுகள் அர்களுக்குண்டாகுமென்று பயந்தே, நீரும் வீண் தொந்திரவுகளுக்கு ஆளாகாமல், ஒரு சங்கதி சொல்லிவிடுகிறோம்." (அ.மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப.263) என்று வரும் பத்மாவதி சரித்திரம் நாவலில் வந்துள்ள நீண்ட வாக்கிய அமைப்பு இதற்குச் சான்று. வருணனைகளாக அமையும் பகுதியிலும், தொகுத்துக் கூறும் இடங்களிலும் இத்தகைய நீண்ட வாக்கிய அமைப்பை அவர் ஆண்டுள்ளார். 'சாஸ்தாப் பிரீதி' என்னும் சிறுகதையிலும் எடுத்துரைப்பதற்கு நீண்ட வாக்கிய அமைப்பைப் பின்பற்றியுள்ளார்: "செல்வச் சுருக்கமும் சீரணசக்திப் பெருக்கமும் ஒருங்கே வாய்ந்து, ஆங்காங்குள்ள பல புண்ணிய க்ஷேத்திரங்களைச் சென்று தரிசித்து, அவ்வவ்விடங்களில் ஏற்பட்டிருக்கும் ஊட்டுப்புரை, சத்திரம், கோயில்களில் பணச் செலவின்றி, வயிறு புடைக்க உண்டு களித்து, தாம் கண்ட பற்பல தெய்வங்களின் ஏற்றத் தாழ்வுகளையும் வர சக்திகளையும் பற்றிக் கதை பேசியும் வாதாடியும், ஒருநாள் போலப் பல நாளையும் ஆண்டுகளையும் கழிக்கும் பிராமணோத்தம கோஷ்டிகள் எல்லாம் கிழக்கே யுதிக்கும் ஞாயிறு மேற்கே யுதிக்கிலும் ஆரியன்காவு சாஸ்தாப் பிரீதியன்று ஆங்குக் கூடாதொழியார்" (அ.மாதவையா, 'சாஸ்தாப் பிரீதி.' குசிகர் குட்டிக் கதைகள், ப.133) என்னும் பகுதியில், அந்தணர்களின் பண்பு வருணனை கூறப்பட்ட ஆசிரியர் எடுத்துரைத்தல் நடையில் வாக்கிய அமைப்பைக் காணலாம்.

குறைந்த கல்வியறிவுடைய ஆண்-பெண் அனைவருக்கும் பயன்படும் வண்ணம் இனிமை பயக்கும் நடையைக் கையாளவேண்டும் என வலியுறுத்திய அவர், தம் மரபான தமிழ்ப் புலமையை வெளிப்படுத்தும்

புலமை நடையையும் ஆண்டுள்ளார். விஜயமார்த்தாண்டம் நாவல் இதற்கு நல்ல சான்று. நாவலில் இயல்தலைப்புக்களிலே இப்பாங்கைக் காணலாம். 'ஊக்கமது கைவிடேல்', 'இலவு காத்த கிளி', 'தன் வினை தன்னைச் சுடும்', 'தானொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்தது' போன்ற இயல் தலைப்புக்கள் இதற்குச் சான்று. காதறபத்து, கற்புப்பத்து என்னும் இரு பெரும் பிரிவுகளும் அவைகளின் தொடக்கத்தில் முறையே கம்பராமாயண, திருக்குறள் பாடல்களும் அவரின் தமிழ்ப் புலமையைக் காட்டும். பத்மாவதி சரித்திரம் நாவலில் ஏராளமான இலக்கியப் பாடல்களை அவர் ஆண்டுள்ளார். திருக்குறள், சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், தாயுமானவர் பாடல், பட்டினத்தார் பாடல், நாட்டுப்புறப் பாடல்கள், ஷேக்ஸ்பியர் நாடகப் பாடல்கள், மொழி பெயர்க்கப்பட்ட பாடல்கள், சிருங்காரரசப் பாடல்களான பதங்கள் போன்றவை மிகுதியும் பொருத்தமான இடங்களில் ஆண்டுள்ளார். தேவையான இடங்களில் அப்பாடல்களின் பொருள்களையும் கீழே அடிக்குறிப்பிட்டுத் தந்துள்ளார். இவை ஆசிரியரின் புலமையை நன்கு காட்டும்.

உரையாடல்களை ஆளும் இடங்களில், கதைமாந்தர்கள் வெளிப்படுத்த வேண்டிய மெய்ப்பாடுகளை (அபிநயங்களை) பிறைக்கோட்டு அடைப்புக் குறியில், எழுதும் முறையை அவர் ஆண்டுள்ளார். பத்மாவதி சரித்திரம் நாவலில், "சாவித்திரி (பெருமூச்செறிந்து), நாராயணன் (வெட்கத்துடன் தலையைக் கவிழ்ந்து கொண்டு)..." (பத்மாவதி சரித்திரம், பக்.52-53) என்று வருமிடம், இதற்குச் சான்று. நாடகத் தன்மையை ஏற்படுத்த இது ஆளப்பட்டுள்ளது. விஜயமார்த்தாண்டம் நாவலில் இது குறைவாக ஆளப்பட்டுள்ளது. சிறு-கதைகளில் இந்தமுறை காணப்படவில்லை. அவருடைய இறுதிப் படைப்பான 'கண்ணன் பெருந்தூது' சிறுகதை முழுவதும் உரையா டலிலே அமைந்திருந்தும்கூட, இந்த வகை நாடக எடுத்துரைத்தல் முறை-யை அவர் அறவே விட்டு விட்டார். நடப்பு நெறியில் சிறுகதையைப் படைத்து உள்ளார் என இது வலியுறுத்தும்.

நாவல், சிறுகதை ஆகிய இரு வகைகளையும் அவைகளின் அனைத்து நிலைகளிலும் அ.மாதவையா திறம்படப் படைத்துள்ளார். புதிய போக்குகளை உருவாக்கிய செல்நெறியாளராக அவர் உள்ளார். நடப்பியல் நெறியாளரான அவர் பல்வேறு சாதனைகளைப் புனைகதைகளில் செய்துள்ளார்.

இயல் – 4

# பிற படைப்புக்கள்

அ. மாதவையா அவர்கள் புனைகதையாசிரியராக மட்டுமின்றி, நாடகம், கவிதை, உரைநடை, வரலாறு, சிறுவர் நூல்கள் என்ற பல்வேறு படைப்புகளைத் தந்துள்ளார். தமிழிலும் ஆங்கிலத்திலும் அவர் இந்த வகைகளில் நூல்களைப் படைத்துள்ளார். இதழ்களில் எழுதியும் நூலாக வெளியிட்டும் இப்படைப்புக்களை அவர் தந்துள்ளார். புதிய இலக்கிய வகைகள் அத்தனையையும் படைத்துத் தமிழ்மொழியை வளப்படுத்த வேண்டும் என்ற அவருடைய விழைவே இவற்றைப் படைக்கச் செய்தது. எடுத்துக்கொண்ட வகைகளில் பல்வேறு சோதனைகளைச் செய்து பார்த்தும் புதிய உத்திகளை ஆண்டும் அவர் சாதனையாளராக விளங்குகிறார். இலக்கியவகை எதுவாயினும் அவருடைய நடை எளிமையும் இனிமையும் மிக்கதாக, சாதாரணக் கல்வியறிவு உடைய மக்களுக்குப் புரியக்கூடியதாக, மறுமலர்ச்சி நடையாக, நன்னடையாக உள்ளது. அதே போன்று அவருடைய இப்படைப்புக்களின் உள்ளடக்கம் நாட்டுப்பற்று, சமூகச் சீர்திருத்தம், ஆசாரச் சீர்திருத்தம், சமூகத் தளை-களிலிருந்து விடுதலை, பெண் விடுதலை, பெண் சமத்துவம், தமிழை மேன்மைப்படுத்தி வளம்படுத்தல், மூடப்பழக்கங்களை அறவே நீக்குதல் போன்றனவாக உள்ளது. அவருடைய புனைகதைகளில் காணப்பட்ட சமூகப் பொறுப்புணர்ச்சியும் தனிமனித மேன்மையும் நாட்டுப்பற்றும் தமிழ் மொழியை வளம்படுத்தும் பாங்கும் உள்ளடக்கங்களாக இப்படைப்புக்களிலும் காணப்படுகின்றன.

**நாடகம்**

நாடகம் படைப்பதிலும் நாடகத்தைத் திறனாய்வு செய்வதிலும் அ.மாதவையா பெரிதும் ஈடுபாடு காட்டியுள்ளார். செய்யுள் நாடகம், உரை-நடை நாடகம், மொழியாக்க நாடகம் ஆகிய நாடக வகைகளை அவர் படைத்துள்ளார். மணிமேகலை துறவு என்னும் நாடகம் செய்யுள் நாடகம், மணிமேகலை துறவு மேற்கொண்ட நிகழ்வை மையமிட்டு அமைந்த நாடகம். ஈரங்க நாடகமாகப் படைக்கப்பட்டு உள்ளது. மணிமேகலை காப்பியத்தின் முதலிரு காதைகளைக் கொண்டு எழுதப்பட்ட நாடகம் இது.

'பாரிஸ்டர் பஞ்சநதம்' என்னும் நாடகம் தமிழர்நேசன் இதழில் வெளியிடப்பட்டுப் பின்னர் பஞ்சாமிர்தம் இதழிலும் வெளியிடப்பட்டுப் பின் நூலானது. ஐரோப்பிய மரபில் கொண்டுள்ள மோகத்தை அங்கத முறையில் கிண்டல் செய்யும் மையக் கருவைக் கொண்ட நாடகம் இது. உரைநடையிலான நாடகம். நான்கு காட்சிகளால் ஆன நாடகம் இது. ஆங்கிலக் கல்வியின் பயனாகச் சிலர், தம் பண்பாட்டுப் பெருமைகளை மறந்து, அவைகளைப் பழித்து, ஆங்கில நாகரிகத்தில் மூழ்கி அடிமையாகி விடுகின்றனர். இத்தகைய அடிமை மோகத்தைக் கண்டித்து, நாட்டுப்பற்றையும் சொந்தமரபின் பெருமைகளையும் எடுத்துரைப்பதே இதன் முதன்மை நோக்கங்களாகும். காந்திமதி என்னும் பெயருடைய பஞ்சநதத்தின் மனைவி, முல்லர் துரையின் மனைவி, அவர் மகள் ஆகிய கதைமாந்தர்களைக் கொண்டு, பஞ்சநதத்தின் அடிமைமோகம் நன்கு தோலுரித்துக் காட்டப்படுகின்றது.

"துரைமகன் : ஏன்! உம் தாய்நாடு இந்தியா தானே? இல்லையா?

பஞ்சநதம் : இங்கேதான் நான் பிறந்தேன்; ஆனால், இங்கிலாந்தின்மேல் தான் என் ஆசையெல்லாம்; அதையே என் ஜன்மபூமியாக நினைக்கிறேன்."

(அ. மாதவையா, "பாரிஸ்டர் பஞ்சநதம்", தமிழர்நேசன், ப. 228, தொகுதி vii, பகுதி ii) என்னும் உரையாடலில், பஞ்சநதத்தின் ஆங்கில மோகமும் நாட்டுப்பற்றின்மையும் காட்டப்படுகின்றன. அனைத்து நாட்டுப் பண்பாடுகளிலும் நிறையும் குறையும் கலந்தே காணப்படும். குறைகளைப் பற்றிக் கவலைப்படாமல், தாய்நாட்டின் மீதும் தான் சார்ந்த தன் மண்ணின் மீதும் பற்றும் பாசமும் இருக்க வேண்டும் என்பதை இச்சிறு நாடகம் அழுத்தமாக வலியுறுத்துகிறது. "என் தாய் நினைக்கிறபடி, ஐரோப்பியர் இந்தியர் இருவர்க்குள்ளும் சில நல்ல வழக்கங்களும் இருக்கின்றன. சில கெட்ட வழக்கங்களும் இருக்கின்றன. ஆனால், ஒருவரையொருவர் இகழ்ந்து, தம்மையே மேலாக நினைப்பதற்குச் சிறிதும் காரணமில்லை" (அ. மாதவையா, பாரிஸ்டர் பஞ்சநதம், பக். 231-232) என்று வரும் துரைமகளின் கூற்று இதனை வலியுறுத்தும். நாடகத்தின் உரையாடல் அமைப்பும் நாடகக் குறிப்பும் மாந்தர் படைப்பும் பண்பு நலன் வெளிப்பாடும் நன்கு அமைந்துள்ளன. நான்கு காட்சிகளால் ஆன இந்த நாடகத்தில், ஒவ்வொரு காட்சியிலும் 'அரங்க நிலை' என்னும் குறிப்பை ஆசிரியர் தந்துள்ளார். இது, நாடக அரங்கு பற்றிய குறிப்பைத் தருவதுடன், நடிப்பதற்கான குறிப்பையும் படிக்கும் வாசகர்களுக்கு நாடக அரங்கு பற்றிய குறிப்பைத் தரவும் மனத்திற்குள் அரங்கமைப்பு பற்றிய விளக்கம் குறித்துச் சரியாக வரைவு செய்து கொள்ளவும் உதவும்.

'திருமலை சேதுபதி' என்னும் நாடகம் உரைநடையிலான நாடகம். வரலாற்று நாடகம் போன்றிருப்பினும், கற்பனையான நாடகமே. நாட்டுப்பற்றையும் காதலையும் வலியுறுத்தி எழுதப்பட்ட நாடகம். நாடகத்தின் தலைப்பு பக்கத்திலேயே, "காதலும் கடமையும் மோதுறும் காலை பேதியா நெஞ்சே நீதியார் நெஞ்சே" என்ற ஆசிரியர் தந்துள்ள குறிப்பு இதை வலியுறுத்தும். காதலும் நாட்டைக் காக்கும் கடமையும் மோதும்போது நீதியுடையார் மனம் தடுமாற்றம் அடையாமல் தெளிவுடன் இருக்கும் என்று இதில் விளக்குகிறார். இந்நாடகம் தமிழ் நாட்டுப் பண்பாட்டுச் சூழலுக்கும் அரசியல் வரலாற்றுக்கும் இணைந்து வருமாறு படைக்கப்பட்டுள்ளது. காலங்கடந்து, எல்லாக் காலத்திற்கும் எல்லா நாட்டிற்கும் பொருந்துமாறு நீதியுணர்த்துமாறு இதன் கதையமைப்பு உள்ளது என்பதால் இஸ்பானிய நாட்டுப் பழமையான வரலாற்றில் கூறப்படும் கதையொன்றைத் தழுவி இந்நாடகக் கதை கூட்டியும் குறைத்தும் அமைக்கப்பட்டுள்ளது என்று அ.மாதவையா முன்னுரையில் கூறியுள்ளார். "இந்நாடகம் தமிழ் நாட்டுச் சரித்திரத்தைத் தழுவியதன்று. இஸ்பானிய நாட்டுப் புராதன சரித்திரத்தில் கூறப்படும் விருத்தாந்தம் ஒன்று, காலதேச வர்த்தமானங்களுக்கும் நீதியுணர்ச்சிக்கும் இணங்க, மிகக் கூட்டியும் குறைத்தும், மாற்றியும் இதில் எடுத்தாளப்பட்டிருக்கிறது" (அ.மாதவையா, திருமலை சேதுபதி, முகவுரை) என்று வரும் முகவுரைப் பகுதி இதனைக் கூறும். மூலக் கதையை இந்த நூலில் இருந்து எடுத்தேன் என்று, நூற்பெயரைக் கூறி ஆசிரியர் கூறுவது அவருடைய நேர்மையை எடுத்துக்காட்டும். முதற் கதையை அறிய விரும்புவார், 'இஸ்பானிய சரித்திர அதிசய விருத்தாந்தம்' என்னும் ஆங்கிலப் புஸ்தகத்துள், 'நற்குண குஸ்மான்' என்னும் தலைப்பின் கீழ்ப் பார்ப்பாராக (The Story of Guzman the Good in the Romance of Spanish Hisotry) என்று முகவுரையில் அவர் தமிழிலும் ஆங்கிலத்திலும் மூலக்கதை நூலைத் தந்துள்ளார். நாடகம் அங்கம், காட்சி என்ற பகுப்புகளைக் கொண்டுள்ளது. நாட்டுப்பற்றை வலியுறுத்துவதே நாடகத்தின் மையநோக்கமாகும். உரையாடலும் மாந்தர் பண்பு வெளிப்பாடும் நன்கு அமைந்து உள்ளது இந்நாடகத்தில்.

'உதயலன்' அல்லது 'கொறகைச் சிங்களவன்' என்னும் நாடகம் மொழியாக்க நாடகமாகும். ஷேக்ஸ்பியரின் 'ஒத்தெல்லோ' நாடகத்தை அப்படியே வைத்துக் கொண்டு தமிழ்ப் பண்பாட்டுச் சூழலுக்கு ஏற்ப மாற்றி எழுதப்பட்ட நாடகம் இது. ஒத்தெல்லோ என்ற பெயர் உதயலன் என்று ஆகிறது. எனவே, மொழி பெயர்ப்பாக அன்றி மொழியாக்கமாக அமைந்துள்ளது. உதயலன் நாடகம் 1918-இல் வெளிவந்தது. முன்னமே 15 ஆண்டுகளுக்கு முன் 1903-ஆம் ஆண்டில், ஒத்தெல்லோ நாடகத்தை

அ.மாதவையா மொழிபெயர்த்து வெளியிட்டார். இதனை அவரே, "ஒத்தெல்லோ நாடகத்தைப் பதினைந்து வருஷங்களுக்கு முன்னர், தமிழிலே மூலத்தொடு முற்றும் பொருந்த மொழி பெயர்த்து.... வெளியிட்டேன்... அவ்வாறு மொழி பெயர்ப்பதே தகுதியென்பர் ஒரு சாரார். அங்ஙனமின்றிக் கதையையும் பெயர்களையும் தமிழகத்துக்குப் பொருந்த மாற்றியமைத்து, மூலக்கிரந்தத்தின் உட்கருத்தை மட்டும் முரணாது தமிழ் மொழிக்கிணங்க, அமைத்துக் கொள்வதே திறமென்பர் மற்றொரு சாரார். பின் கொள்கையைத் தழுவியதே மொழி பெயர்ப்பு. சுத்தத் தமிழர்க்கு இது முன்னதினும் எளிதில் பொருள் விளங்குமென்று நம்புகிறேன்...." (அ. மாதவையா, உதயலன் அல்லது கொற்கைச் சிங்களவன், அனுபந்தம், பக். 144-145) என்று பின்னிணைப்பில் கூறுகிறார். மூல நூலில் உள்ள கருத்தொடு மாறுபடாமல், தமிழ் மரபிற்கு ஏற்ப அ.மாதவையாவால் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது. ஷேக்ஸ்பியர் நாடகங்களை மொழிபெயர்த்தும், மொழியாக்கம் செய்தும் இவ்வாறு இரு வேறு நெறிகளை முன்னோடியாகச் செய்து புதிய போக்கை உருவாக்கிய செல்நெறியாளராக, சாதனையாளராக அவர் உள்ளார். உதயலன் நாடகத்தில் துன்பியல் உணர்வு, இதர துன்பியல் நாடகங்களை விடவும் மிகுதியாக இருப்பதை ஒரு குறையாகவே ஆசிரியர் சுட்டுகிறார். நல்லவர் காரணமின்றித் துன்புற்றுக் கெடுவதும், தீயவர் வெற்றி பெறுவதாகவும் காட்டும் நாடகப் போக்கு ஏற்கத்தக்கது அன்று எனவும் அது உலகிற்கு நன்மை விளைவிக்காது எனவும் அவர் கூறுகிறார்.

'இராஜமார்த்தாண்டன்' என்னும் உரைநடை நாடகத்தையும் லெப்டினன்ட் பஞ்சு என்னும் ஆங்கில நாடகத்தையும் படைத்துள்ளார். நாடகம் படைப்பதிலும் அவர் தொடர்ந்து ஈடுபாடு காட்டியுள்ளார். நாடகப்பாங்கான எடுத்துரைத்தல் உத்தியையும் ஆசிரியரின் இடையீடான எடுத்துரைத்தல் இன்றியே முழுவதும் உரையாடலிலே கதை கூறும் முறையையும் புனைகதைகளில் அவர் கையாண்டுள்ளார். இப்பாங்கு, நாடக இலக்கிய ஆக்கத்திலிருந்து அவர் பெற்றதாகும்.

**கவிதைகள்**

அ. மாதவையா தம்முடைய படைப்புப் பணியைக் கவிதை வழியே முதன்முதலில் வெளிப்படுத்தினார். 1892-ஆம் ஆண்டில் தம்முடைய இருபதாம் வயதில், சென்னை கிறித்துவக் கல்லூரி மலரில் தான் கல்வி கற்ற பள்ளிக் கூடத்திற்கு (To My Alma Mater) என்னும் தலைப்பில் 15 பத்திகளில் அவர் ஆங்கிலத்தில் எழுதிய கவிதையே அவருடைய முதல் படைப்பாகும். இது போன்று வெவ்வேறு காலகட்டங்களில் அம்மலரில் வெவ்வேறு பொருள்களில் அவர் 10 கவிதைகளை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். 1892-ஆம் ஆண்டிற்கும் 1910-ஆம் ஆண்டிற்குமிடையில்

அவர் எழுதிய இத்தகைய ஆங்கிலக் கவிதைகள் இன்று வரையிலும் நூல் வடிவம் பெறவில்லை. இக்கவிதைகள் பெண் விடுதலை, பெண்ணுக்குச் சமஉரிமை, காதலர்களின் பிரிவுத்துயரம், இளமைக் கால அன்பு வாழ்க்கை, வாழ்க்கை நம்பிக்கை ஆகிய பொருள்களில் உள்ளன.

"என்னுடைய முகத்தில் உள்ளதை விடவும்
அச்சிட்ட தாள்களில்
மின்னிமறைந்துள்ள அழகுளது வென்று
நான் வியக்கிறேன்
என்னுடைய மனம் விரும்பிய அந்த
ஆசைகளை நான் எண்ணவில்லை
மண்ணில் இன்னும் பெண் விடுதலையும்
சம உரிமையும்
கைக்கு எட்டாமல்
மண்ணின் பாவங்களிலிருந்து மீட்சி
கிட்டாத நிலையை..."

(A. Madhaviah, "The Dying Wife to Her Husband." The Christian College Magazine, Madras, P. 160, September, 1894.) என்னும் கவிதை யில் பெண்ணுக்கு விடுதலையும் சமஉரிமையும் கிட்டாத மண்ணின் பாவங்களிலிருந்து இன்னும் மீட்சி கிட்டாத அவலநிலையை அழுத்தமாகச் சுட்டி உள்ளார். 22 வயதிலிருந்தே இந்தியச் சமூக வாழ்க்கையில் பெண்களின் அடிமை நிலை, சம உரிமையின்மை என்பன இந்த மண்ணின் பாவங்கள் எனச் சரியாக இனம் கண்ட அவருடைய நுட்பமான அறிவுத்திறனும், சீர்திருத்த மனப்பான்மையும் நம்மை வியக்க வைக்கின்றன. தாம் வாழ்ந்த காலத் தமிழகச் சமூக வாழ்க்கையை, இந்தியக் குடும்ப அமைப்பிலும் பொது வாழ்விலும் பெண்ணுக்கு இருந்த தளை-களையும் கண்டு அவைகளைப் போக்க வேண்டும்; போக்கி, சம உரிமையுள்ள வாழ்வு பெண்ணுக்குக் கிடைக்கத் தம் படைப்புக்கள் உதவ வேண்டும் என்று அவர் விரும்பினார். அடி நாட்களிலே, சீர்திருத்த எண்ணம் அவரிடம் மூளாத்தீயாக உள்ளே கனன்று கொண்டிருந்ததை, இக்கவிதையில் முகங்காட்டக் காண்கிறோம். பெண் விடுதலை என்னும் கருத்தாக்கம் அவரிடம் தொடர்ந்து காணப்பட்டது.

அ. மாதவையா ஆசிரியராக இருந்து நடத்திய பஞ்சாமிர்தம் இதழிலும் 'தமிழர்நேசன்' இதழிலும் கவிதைகள் எழுதினார். இக்கவிதைகளும் இன்னமும் நூல் வடிவம் பெறவில்லை. இக்கவிதைகள் எளிமையும் ஆழமும் மிக்கவை. எளிமையான வடிவமைப்பில் இவை பாடப்பட்டுள்ளன. சொற்கள் நல்ல கருத்தாழத்துடன் ஆளப்பட்டு உள்ளன. 'பஞ்சாமிர்தம்' இதழில் அமுதகவி என்னும் புனைப் பெயரில் 17

கவிதைகளை அவர் படைத்தார். தழுவல், மொழி பெயர்ப்பு என்ற நிலைகளில் இரு கவிதைகள் உள்ளன. ஏனைய கவிதைகள் அவர் படைத்தவை. கிளிக்கண்ணி, கீர்த்தனை போன்ற, எளிய மக்கள் அறிந்த நாட்டுப்புற மரபிலான இசைப்பாடல் வடிவை அவர் மிகுதியும் கையாண்டுள்ளார். இக்கவிதைகளில் தாய்மொழியின் மேன்மை, நாட்டுப்பற்று, கல்வி ஆகிய பொருள்கள் கருப்பொருளாக உள்ளன. இராபர்ட் பிரௌனிங் கவிதையை மொழிபெயர்த்துப் 'பிறவிப்பேறு' என்னும் தலைப்பில் கவிதையாகப் படைத்துள்ளார். ருட்யார்டு கிப்ளிங் கவிதையை மொழிபெயர்த்துத் 'திடப்படுவீரே' என்று பாடியுள்ளார். தேசபக்தியையும் அரிய பெரிய கனமான விஷயங்களையும் இக்கவிதைகளுக்குப் பாடுபொருளாக அ. மாதவையா கையாண்டுள்ளார். தாய்மொழியின் வழியே கல்வி கற்க வேண்டும் என்பதை வலியுறுத்தி தாய்மொழி என்னும் கவிதையை இசைப்பாடலாக அவர் பாடியுள்ளார்.

"அயலவர் கைதலை அணையென உறங்கிடும்
மயலை ஒழித்துத் தன்மானத்தை எண்ணியே"

(அ. மாதவையா அமுதகவி), 'தாய் மொழி,' பஞ்சாமிர்தம், ப. 120, வைகாசி, 1924) என்னும் கவிதை அடிகளில், அயல் மொழியில் கல்வி கற்பது, அடுத்தவர் கையைத் தலையணையாக வைத்து உறங்கும் மையல் (ஆசை) போன்றது. அதை அறவே நீக்கி விட்டுத் தன் கையைத் தலையணையாக வைத்து உறங்கும் - தாய் மொழியில் கல்வி கற்கும் - நிலை வர வேண்டும் என்று அவர் கூறுகிறார்.

விடுதலை பெற்றபின் நாடு - புதிய இந்தியா - எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைக் கனவுகண்டு கிளிக்கண்ணிகளாக அவர் பாடினார். உயிர் வாழ்வதும் உண்ணுவதும் கற்பதும் அவளுக்காகவே (தாய் நாட்டிற்காகவே) எனவும் அவளுடைய மேன்மைக்காகவே உழைப்போம் என்றும் அக்கவிதையில் அ. மாதவையா பாடுகிறார்.

"உயிர்ப்ப தவள் பொருட்டே
உண்ப தவள் பொருட்டே
பயிர்ப்பு படிப்புகள் எல்லாம் - கிளியே
பயில்வ தவள் பொருட்டே
ஏதும் அவள் பணியே - கிளியே
என்றும் உழைத்திடு வோம்"

(அமுதகவி (அ. மாதவையா), 'புதிய இந்தியா' பஞ்சாமிர்தம், ஆடி, 1925, ப. 257) என்று வரும் பாடலடிகள் இதை வலியுறுத்தும்.

'தாய் - மக்கள் சம்பாஷணை' எனும் கவிதை, இசைப்பாட்டாக, காவடிச் சிந்து மெட்டில் அமைந்து நாட்டுப்பற்றை விளக்குகிறது. இந்தியத் தாய்க்கும் அவள் மக்களுக்கு நடக்கும் உரையாடலாக அமைந்துள்ளது.

"உங்களுக் குள்கல கங்கள் பொறாமைகள்
ஊழல்கள் ஓய்ந்தனவோ? - காணும்
கண்கள் கலங்கி மனங்கலங்கி எனது
ஆவியும் காய்ந்ததுவே -
'என் நலம்', 'என் குலம்', 'என் அதிகாரம்'
எனவே நயந்தோராய் - மிகச்
சின்ன மதியோ அடிமையில்? சீவிக்கும்
சீலர்ப் பயந்தேனே!'

என்று தாய் வினவுகிறாள். தன்னலன் பேணி அடிமைகளாய் வாழும் மக்களைப் பயந்ததற்காகவும், தமக்குள் கலகங்கள் செய்து பொறாமை கொண்டு ஊழல்கள் செய்து வாழும் தன் மக்கள் நிலை கண்டு தாய் வருந்தும் வருத்தம் இப்பாடல் அடிகளில் வெளிப்படுகிறது. தாயின் வருத்தத்தைப் போக்குவோம் எனவும் சுதந்திரம் என்பதே இனிமேல் தங்களின் உயிர் மூச்சு எனவும் மக்கள் தாய்க்கு விடை தருகின்றனர்.

'சாதிமதம் தொழில் ஆகிய பேதங்கள்
தன்சுகம், தன்நலமே - இவை
யாதும் எமையினிப் பேதியா - தாக்குவம்
அன்னையே! - உயிர்
போக வரினும் சுதந்திரம் கொள்வம்
பொருள் அதன் மேலுளவே'

(அமுதகவி (அ. மாதவையா) 'தாய் - மக்கள் சம்பாஷணை', பக். 632 - 633, பஞ்சாமிர்தம், கார்த்திகை, 1924) என்னும் பதிலும் நாட்டுப்பற்றை வலியுறுத்தும். நாட்டு விடுதலையையும் தமிழ்மொழி மேம்பாட்டையும் சமூகச்சீர்திருத்தத்தையும் பெண் உரிமையையும் அவர் தம்முடைய தாரக மந்திரங்களாக வைத்திருந்தார்.

'இந்தியக்கும்மி' என்னும் அவருடைய புகழ் பெற்ற இசைப்பாடல் கவிதை - நாட்டுப்பற்றை முதன்மைப்படுத்திப் பாடப்பட்டது. இப்பாடல், 51 பாடல்களால் ஆன நீண்ட ஒன்று; கும்மிப்பாடலாக உள்ளது.

'சாதி மதமெனும் சாதக பாதகம்
சற்றும் இலாது, நம் தாய்ப்பணியில்
ஓதிடும் பக்தி தழைத்தினி ஒற்றுமை
ஊக்கம் சிறக்க உழைத்திடுவோம்'

(13)

'யாருமே நன்கு படித்திடுவோம்; மட
வாரையும் நன்கு பயிற்றிடுவோம்

(18)

'பொம்மை விவாகம் ஆண்பெண்களை விற்குதல்
புத்தியில் டம்பம் புகலரிய
கைம்மையர் கஷ்டங்கள் ஆகிய நம்முளே
காணும் குறைகளை நாணுவமே' (30)
'... ... பயன்தரும் நூல்களெலாம்
பேறுபெறும்படி நம்மொழி தன்னிலும்,
பேர்த்திடுவீர் தமிழ் போற்றிடுவீர் (47)

(அ.மாதவையா, 'இந்தியக் கும்மி', பொது தர்ம சத்கீத மஞ்சரி, பக். 18–23) என்னும் பாடல்களில் முறையே சாதி, மத வேறுபாடுகளை எதிர்த்தல், மூடப்பழக்க வழக்கங்களைச் சாடல், அனைவர்க்கும் கல்வி, பெண் கல்வி வற்புறுத்தல், திருமணப் பழக்கவழக்கங்களில் காணப்பட்ட சீர்கேடு களைச் சாடல், தமிழ் மொழி மேன்மை என்பன வலியுறுத்தப்பட்டுள்ளன. பயன் தரும் நூல்களெல்லாம் நம் தமிழ் மொழியிலும் மொழி பெயர்க்கப் படவேண்டும் எனவும் அதுவே தமிழைப் போற்றும் ஆக்க பூர்வமான வழி எனவும் அ. மாதவையா 1906–ஆம் ஆண்டிலே கூறியிருப்பது அவருடைய தொலை நோக்கையும் தமிழை வளம்படுத்தி மேன்மையுறச் செய்யும் எதிர்பார்ப்பையும் ஒருங்கே காட்டும். தாய் நாட்டு வணக்கம், தாய் நாடு, அம்மே, இந்தியச் சிந்து, தாய் நாட்டு வணக்கம் ஆகிய பாடல்களில் நாட்டுப்பற்று, தாய் மொழி மேன்மை, பெண்ணுக்குச் சமஉரிமை, சமூகச் சீர்கேடுகளைச் சாடல் என்னும் கருத்தாங்களை அவர் பாடியுள்ளார்.

'சாதிக் கொதிப்பு தணிந்து – நற்
சகோதர நீர்மையைக் கொண்டு குளிர்ந்து (ப. 14)

'இந்த நாடென் சொந்தநாடே; என்தனையே தந்த
நாடே' (ப. 12)

'இந்தியர்க்குள் ஜாதி மதகர்ம பேதங்கள் ஏதுமிலாதம்மே'
(ப. 24)

'பெண்களை இன்றிப் புகழ் பெறுதல் நொண்டி
பெற்றிடும் கொம்புத் தேனாமே – இரு
கண்களில் ஒன்று கலங்கிடின், மற்றதும்
புண்படல் கண்டிடுவோமே – அவர்
குறை நீக்கியும் அறிவாக்கியும்
பெறு பாக்கியம் அதியோக்கியம் (ப. 32)
கல்விஎல் லார்க்கும் சுதந்தர மாகக்
கடவுள் அருளிய சொத்தே: அதைச்
செல்வர், தரித்திரர் ஆண் பெண் கீழ் மேல் எனச்
செப்பிடும் பேதம் ஒழித்தே' (ப. 32)

'கைம்மையர் தம்மையும் செம்மையுறுத்துமின்
பொம்மை விவாகமும் நம்முள் நிறுத்துமின் (ப. 43)

(அ. மாதவையா, பொது தர்ம சத்கீத மஞ்சரி) என்று பல்வேறு பாடல்களில் இக்கருத்தாக்கங்களை அ. மாதவையா மீண்டும் மீண்டும் வலியுறுத்திப் பாடியுள்ளார். எளிமையான சொற்களில், பொதுமக்கள் வழக்கில் காணப்பட்ட நாட்டுப்புறப்பாடல் அமைப்பிலும் நன்கு அறிமுகமான இசைப்பாடல் மெட்டுக்களிலும் இப்பாடல்களை மிகவும் கனமான கருத்தாக்கங்களை உள்ளடக்கமாக வைத்துப் பாடினார். பாடல்களின் இசைப்பண்பால் நல்ல வரவேற்பை அவை பெற்றிருந்தன என அறிகிறோம்.

இந்துதாசன் என்னும் புனைப் பெயரில் 'புதுமாதிரி கல்யாணப்பட்டு' என்னும் இசைப்பாடல் தொகுப்பு நூல் ஒன்றை அ. மாதவையா வெளியிட்டார். இதனை 57 சரணங்களில் கும்மிப்பாட்டு வடிவில் பாடியுள்ளார். அந்த நாளில் அந்தணர் சமூகத்தில் காணப்பட்ட திருமண முறைகளில் காணப்பட்ட சமூகச் சீர்கேடுகளை, பெண் வீட்டார் படும் துன்பங்களைப் போக்க வேண்டும் என்ற நோக்கில் அவர் இப்பாடல்களைப் பாடியுள்ளார். ஆண் குழந்தை பிறந்தால் மகிழ்வதும், பெண் குழந்தைகள் பிறந்தால் மனம் வாடுவதுமாக இருந்த அன்றைய சமூகச் சூழலைக் காட்டுகிறார்.

'பிச்சை எடுத்துப் பிழைப்பவ ரும்சில
பிள்ளைகள் பெற்றிடின் நிச்சயமாய்
வைச்ச புதையல் எடுத்தவ ரின்மனம்
வீங்கி மகிமையும ஓங்குவரே"
'மெய்ச்சு குபேரனை ஒத்துள பேர்களும்
புத்திரிப் பேறுகள் மேவினரேல்
நிச்சயமாகவே கைத்தனம் யாவுமே,
நீங்கினர் என்னவே ஏங்குவரே'

(இந்து தாசன் (அ. மாதவையா), புதுமாதிரி கல்யாணப்பாட்டு, ப. 8, ப. 2) என்று வரும் சரணங்கள் இதனைக் காட்டும் பெண்ணை மணம் செய்து கொடுக்க ஏராளமான பொருட்கள் வரதட்சணை என்னும் பெயரில் பெண் வீட்டாரிடமிருந்து மிகுதியாகப் பறிக்கப்படுகின்றன. இதை மிகுந்த எள்ளல் சுவையுடன் அ. மாதவையா பாடியுள்ளார். பையனின் படிப்பிற்கு ஏற்ப விலை பேசப்படும் நிலையை,

'ஆனப ரீக்ஷையில் எப்.ஏ. ஈ. ராயிரம்
பி.ஏ. நா. லாயிரம்; பி.எல். எட்டாய்
தானப் பெருக்கத்தில் ஏலமே கூறிடும்'

என்று பாடுகிறார். ஏலம் நடைபெறுகிறது என்றே கூறுகிறார். மிகுதியான பணம், பொருள், நகை, பாத்திரம் என வேண்டிப் பட்டியலிட்டுக் கேட்கும் போக்கையும் அதிலும் படித்த இளைஞர்கள் கூசாமல், இந்தச் சீர்கேடுகளுக்கு ஆளாகி, 'அப்பா கேட்கிறார், அம்மா கேட்கிறார்' என்று கூறும் போக்கை அ. மாதவையா பாடுகிறார்:

'அப்பா அறிவர் பணவிஷயம் ; நகை
சீர், இவை அம்மாவைக் கேட்டுக் கொள்ளும்
தப்பாமல் பைசைக்கிள், தங்கக் கடியாரம்
சங்கிலி மோதிரம் ஸூட் எனக்கே'

என்று பாடும் பாடலில், இளைஞர்கள் இவ்வாறு பேரம் பேசும் நிலையிலிருந்து மாறுபட்டு, பெண்களை மதிக்கவும் சமமாக உரிமையுடன் நடத்தவும், வரதட்சணை வாங்காமல் மணஞ்செய்து கொள்ளவும் முன் வர வேண்டும் என்று அவர் விழைகிறார். அடிப்படையில் சமூகச் சீர்கேடுகளை இனம் கண்டு கொள்ளவும் அவைகளை அடியோடு போக்கவும் வல்லவர்களாக இளைஞர்கள் முன்வர வேண்டும் என அவர் எதிர்பார்க்கிறார். அதனை வலியுறுத்தவே இப்பாடல்களை அவர் பாடியுள்ளார். திருமணம் என்னும் பெயரில் வியாபாரம் நடப்பதால், பெண்களை அடிமைகளாக ஆக்கும் மணமுறையைக் கண்டு பெண்களே நாண வேண்டும் என்று அவர் கூறுகிறார்.

'கும்மியடி பெண்ணே, கும்மியடி - வளை
குலுங்கக் குதித்துக் கும்மியடி;
நம்மை அடிமைகள் ஆக்கிவிடும் கலி
யாணக் கும்மிஅடி யுங்கோடி - தலை
நாணிக் கும்மிஅடி யுங்கோடி'

(இந்துதாசன் (அ. மாதவையா), புது மாதிரிக் கல்யாணப்பாட்டு, 17, ப. 6) இப்பாடலில் 'நம்மை அடிமைகளாக்கிவிடும் கல்யாணம்' என்றும், அந்த அடிமைத்தனம் நம்மை பிடித்துள்ள பிணி என்பதற்கு 'நாணிக் (வெட்கப்பட்டு) கும்மி அடியுங்கள்' எனவும் அ. மாதவையா பாடியுள்ளது மிகவும் புரட்சிகரமான சிந்தனையாகும். பெண்களை அடிமைப்படுத்தும் மணவியாபாரத்தையே அவர் கண்டிக்கிறார். காதலர் இருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டு ஒழுகும் இனிய குடும்ப வாழ்விற்கு - அறன் எனப்பட்ட இல்வாழ்க்கைக்கு - அடிப்படையான மணத்தையும் குடும்ப அமைப்பையும் அவர் ஆதரிக்கிறார். திருமணம், குடும்பம் என்பவற்றை அவர் எதிர்க்கவில்லை; அவைகளில் கலந்துள்ள சீர்கேடுகளையே அவர் எதிர்க்கிறார். நூலின் தொடக்கமான 'காப்புப் பாடலில்' 'இந்நாள் நலமாக எம்மை நலியும் அவமெல்லாம் நான்

சிரிக்கவே அழிய நாவினின்று நீ மொழிக தேன் சிரிக்கும் வெண்மலர்மாதே' என்று அவர் பாடுகிறார். இந்நாளில் நம்மைப் புதியதாக நலியச் செய்யும் துன்பந்தரும் தீய சீர்கேடுகள் யாவும் அழிய வேண்டும்; அவை அழிய உதவுமாறு என் கவிதைகள் அமைய வேண்டும். என் நாவினின்று அத்தகு பாடல்கள் வெளிப்பட, வெண்மையான தாமரை மலரில் வீற்று இருக்கும் கலைமகளே நீ உதவ வேண்டும்' என்பது இப்பாடலின் பொருள். அ. மாதவையா எளிமையான சொற்களில், மக்களுக்கு நன்கு அறிமுகமாகி, பழக்கத்திலிருந்த இசைப்பாடல், நாட்டுப்புறப்பாடல் வகைகளில் கடினமான உள்ளடக்கத்தை - சமூகச் சீர்கேடுகளைச் சாடும் சீர்திருத்தக் கருத்துக்களைப் - பாடினார். கவிதை அவருடைய கைகளில் வீரன்கைக்குரிய போர்வாளாக இருந்தது.

**உரைநடை நூல்கள்**

அ. மாதவையா புனைகதை அல்லாத உரைநடை நூல்களையும் இன்னமும் நூல் வடிவம் பெறாத கட்டுரைகள் பலவற்றையும் எழுதியுள்ளார். தமிழிலும் ஆங்கிலத்திலும் இவை உள்ளன. இலக்கிய வகை எதுவாயினும் சமூகச் சீர்திருத்தம், பெண் உரிமை, நாட்டுப்பற்று, தமிழ் மொழி மேம்பாடு என்னும் கருத்தாக்கங்களை அவர் வெளியிட்டார். எளிய சொற்களில், இனிமை பயக்கும் நடையில், மிகச் சாதாரண அளவிற்குக் கல்வி அறிவு உடைய மக்களுக்கும் புரியும் நல்ல நடையில் இப்படைப்புக்களை அவர் தந்தார். வரலாறு, கட்டுரை நூற்கள், சிறுவர் நூல், திறனாய்வு என்னும் பல்வேறு வகைகளில் உரைநடை நூல்களையும் கட்டுரைகளையும் தமிழிலும் ஆங்கிலத்திலும் அவர் படைத்தார். விவேக சிந்தாமணி, சென்னை கிறித்துவக் கல்லூரி மலர், தமிழர் நேசன், பஞ்சாமிர்தம் ஆகியவைகளில் அவர் எழுதிய கட்டுரைகள் யாவும் இன்னமும் நூல் வடிவம் பெறாமலே உள்ளன. அ. மாதவையா இருபது வயது நிறையும் முன்னர், 1892-ஆம் ஆண்டில் விவேக சிந்தாமணி இதழில் ஆகஸ்ட் முதல் நவம்பர் முடிய நான்கு இதழ்களில் நான்கு பகுதிகளாக, மனோன்மணியம் நாடகம் பற்றி நீண்ட திறனாய்வுக் கட்டுரையை எழுதினார். இக்கட்டுரை அவருடைய இலக்கியப் புல-மையையும் திறானய்வு மனப்பான்மையையும் நன்கு காட்டும்.

'ஆசாரச் சீர்திருத்தம்' என்னு நூல் அவருடைய சீர்திருத்த மனப்-பான்மையை அழுத்தமாக வெளிப்படுத்தும். வருணாசிரமம், பெண்கல்வி, பாலிய விவாகம், வைதவ்யம், பிற தேச யாத்திரை என்னும் தலைப்புக்-களில் கட்டுரைகள் உள்ளன. மனிதன் கடைப்பிடித்து ஒழுக வேண்டிய நல்ல பழக்கங்களையும், விலக்க வேண்டிய தீய பழக்கங்களையும் எடுத்துரைப்பதே இந்த நூலின் நோக்கம். "மனித வளர்ச்சிக்குப் பொருந்தாத ஆசாரங்கள் எவ்வளவுதான் விதிக்கப்பட்டதாயினும் அவை

விலக்கப்பட வேண்டிய துராசாரங்கள்" (அ. மாதவையா, ஆசாரச் சீர்திருத்தம், ப. 8) என்று அவர் கூறுவது நூலின் மைய நோக்கத்தை எடுத்துரைக்கும். சாதிப் பாகுபாடு, பெண் கல்வி மறுப்பு, பெண்களுக்கு விதிக்கப்படும் இளமை மணக் கொடுமை, அதன் தொடர்ச்சியாக நிகழும் விதவைத் துயர் ஆகிய சமூகச் சீர்கேடுகளை அவர் இந்நூலில் மிகவும் கடுமையாகக் கண்டிக்கிறார். பெண் விடுதலை, பெண்ணுக்குச் சம உரிமை, பெண் கல்வி, பெண்ணுக்குச் சொத்தில் சம பங்கு, உரிய வயதான பின் மணம், விதவை மறுமணம் ஆகிய அவருடைய சீர்திருத்தக் கருத்துக்கள் அவரைப் பெண்ணியவாதியாக நன்கு இனங்காட்டும். அன்றைய காலகட்டத்தில் மிகப் பெரும் புரட்சிகரமான சிந்தனைகளாகும் இவை.

**வரலாறு**

சித்தார்த்தன் தட்சிண சரித்திர வீரர், தளவாய் முதலியார் குடும்ப வரலாறு ஆகிய வரலாற்று நூல்களை அ. மாதவையா படைத்துள்ளார். ஆங்கிலத்தில் அது போன்ற மணிமேகலை, நந்தன், மார்க்கண்டேயன், இராமாயணக் கதை, தளவாய் முதலியார் ஆகிய வரலாறு கூறும் நூல்களை அவர் படைத்துள்ளார். அரசியல் நிலையிலும் சமூக அமைப்பிலும் தளைகளுக்கு உட்பட்டு அடிமைப்பட்டுக் கிடந்த மக்களுக்கு அவர்களின் பழமையான வரலாற்றுப் பெருமையை எடுத்துக் கூறி, நாட்டு வரலாற்றையும் இனவரலாற்றையும் கூறிப் புத்தெழுச்சியை ஊட்டினார். தட்சிண சரித்திர வீரர் நூல், தொடர் கட்டுரைகளாக முதலில் பஞ்சாமிர்தம் இதழில் வெயிடப்பட்டு அதன் பின்னர் நூலாகவும் வெளி வந்தது. அதில், "சரித்திரம் வனைவதில், நாம் நன்கு அறியாத பழக்க வழக்கங்கள், வேற்றுப் பிரதேசங்களில் விளங்கினோரைப் பாத்திரங்களாகக் கொள்வதினும், நமது நேர் முன்னோர் எனத் தகும் தென்னாட்டினரையே கொள்வது மிகப் பயனளித்து, படிப்பவர் மனத்தில், பழத்தில் ஊசி போல் இறங்கி, வேரூன்றி, சரித்திர உணர்ச்சியையும் நமது தொன்னிலை பற்றிய அறிவையும் வளர்க்குமென்று கருதி, தென்னிந்திய சரித்திர வீரர் சிலர் வரலாறுகளை எழுதலானேன்" (அ. மாதவையா, தட்சிண சரித்திர வீரர், பஞ்சாமிர்தம், ப. 700, கார்த்திகை 1924) என்று அவர் கூறுகிறார். வரலாற்று உணர்வை ஊட்டுவதும், நம்முடைய தொன்னிலை பற்றிய அறிவை வளர்ப்பதும் என்று தம் நோக்கங்களை அவர் தெளிவாகக் கூறுகிறார்.

'சித்தார்த்தன்' என்னும் நூல் புத்தரின் வாழ்க்கை வரலாற்றையும் அவருடைய அருளுரைகளையும் 12 இயல்களில் கதை போன்று தருகிறது. பிறப்பு காரணமான சாதி வேறுபாடுகளும் பழக்க வழக்கங்களும் காரணமாக எங்கும் நிறைந்து விளங்கிய பொறாமை, ஆசை, அறியாமை, புகை ஆகிய சீர்கேடுகளைப் போக்கிட புத்தபகவான் தோன்றி, தம் அருளுரைகளை எளிமையான முறையில் பரப்பினார்.

நம்முடைய சமூகப் பழக்கவழக்கங்களில் காணப்பட்ட சமூகச் சீர்கேடுகளைச் சீர்திருத்தும் நோக்கத்தை முதன்மையாகக் கொண்ட அ. மாதவையா, தொடர்ந்து அந்த நோக்கத்தையே தம் படைப்புகளில் எழுதினார். அந்த வகையில் சித்தார்த்தன் நூலையும் படைத்தார். "என்னையும் நான் சொல்லியவற்றையும் நேசிப்பது போல், நீங்கள் ஒரு-வரை ஒருவர் நேசித்து ஒழுகல் வேண்டும்" என்று புத்தர் இறுதியில் கூறுகிறார் (அ. மாதவையா, சித்தார்த்தன், ப. 125). இது, மனிதர்கள் யாவரும் ஒருவர் மற்றவரிடம் வேற்றுமை பாராட்டாமல், அனைவரும் சமம் எனவும் ஒன்றே குலம் எனவும் கொண்டு, சகோதர அன்பு கொண்டு வாழ வேண்டும் எனவும் வற்புறுத்துகின்றது. 'உண்மை அறிவும் அறவழி ஒழுக்கமும் ஆண் பெண், மேலோர் கீழோர், இளையோர் முதியோர் என்றும் பால் வேற்றுமை, மரபு வேற்றுமை முதலியனவின்றி, மக்களுக்கெல்லாம் பொதுவான உரிமைகளே;... பிறப்பு வேற்றுமைகளைச் சார்ந்ததன்று ஒழுக்கம்; அது அறிவு பற்றியதே, மக்களெல்லாம் உற்ற உறவினர், ஒரே வகுப்பினர்" (அ. மாதவையா, சித்தார்த்தன், பக். 119, 120) என்னும் பகுதியில் மக்கள் அனைவரும் ஒரே இனம்; பிறப்பால் வேற்றுமை இல்லை என்பதை வலியுறுத்துகிறார். அத்துடன் ஆண் - பெண் என்னும் பால் வேற்றுமை, மேலோர் - கீழோர் என்னும் மரபு வேற்றுமை எதுவும் கிடையா என்று புத்தரின் அருளுரையாக அவர் கூறுகிறார். பால் வேற்றுமை, மரபு வேற்றுமை என்னும் சொற்கள் அ. மாதவையா அவர்களால் ஆளப்பட்டுள்ளன. வேறுபாடுகள் பிறப்பால் இல்லை அனைவரும் சமம் என்று கூற இதை அவர் ஆண்டுள்ளார். எனினும் பெண்ணை அவள் சார்ந்துள்ள பால் (பெண் பால் என்று Gender காரணமாக) வேறுபாடு காரணமாக அடக்கி, அடிமைப்படுத்தும் - இழிவு படுத்தும் முறையை அறவே நீக்க வேண்டும் என்று பெண்ணியவாதியாக அவர் குரல் கொடுக்கிறார். பால் வேறுபாடு (Gender Discrimination) என்பது பெண்ணியத் திறனாய்வு நோக்கில் மிக நுட்பமான கலைச்சொல். அதை 1918-ஆம் ஆண்டிலேயே அப்பொருள் நுட்பத்துடன் அ.மாதவையா ஆண்டு சாதனை படைத்துள்ளார்.

தளவாய் முதலியார் குடும்ப வரலாறு என்று நூல் தமிழில் எழுதப்பட்ட வரலாற்று நூல், இது, முன்னமே ஆங்கிலத்தில் அவர் எழுதிய தளவாய் முதலியார் (Dalavai Mudaliar, 1924) நூலினை ஒட்டி எழுதிய நூல். இராமாயணக் கதை என்ற நூலை ஆங்கிலத்தில் அவர் எழுதினார். ஆங்கிலம் அறிந்த வாசகர்களுக்காக அவர் இதனை எழுதினார். உயர்ந்ததாகவும் பயன்படத்தக்கதாகவும் மேன்மேலும் சிறந்ததாகவும் வாழ்க்கை அமைய இராமாயணம் உதவும் என்பதாலே தாம் இராமாயணக் கதையை வெளியிடுவதாக அவர் முன்னுரையில் கூறியுள்ளார். அதே போலவே மார்க்கண்டேயன், மணிமேகலை, நந்தன் வரலாறுகளை அவர்

ஆங்கில வாசகர்களுக்காக ஆங்கிலத்தில் எழுதி உள்ளார். மார்க்கண்டேயன் நூல், 13 இயல்களால் ஆனது. கதை சொல்வது முதன்மை நோக்கமாக இருந்தாலும், இடையிடையே தொடர்புடைய சமூக அமைப்பு, நிலவியல், கதையமைப்பு, நல்ல பழக்கங்கள் போன்றவற்றை ஆசிரியர் விளக்குகிறார். "சிறுவன் மார்க்கண்டே-யனுக்குப் பதினைந்து வயது ஆனபோது ஒரு நாள், மிருகண்டு முனிவரின் ஆசிரமத்திற்கு ஒரு குறத்தி வந்தாள். குறி சொல்லும் குறத்தி பிச்சை எடுத்து உண்டு வாழும் இனத்தைச் சார்ந்தவள். நிலையான வீடு ஏதுமின்றி, நிலமெல்லாம் சுற்றி அலைந்து, மரங்களின் நிழலிலோ அல்லது சிறிய கூடாரத்திலோ தங்கி வாழ்பவள். அவர்கள் இடம் பெயர்ந்து செல்லும் போது, அந்தக் கூடாரத்தைப் பிரித்து எருதுகள் அல்லது கழுதைகள் மீதேற்றிச் செல்வார். கைகளில் உள்ள ரேகைகளைக் கொண்டு பார்த்து ஒருவரின் எதிர்காலத்தைக் குறி சொல்லும் தொழிலை உடையவர்கள் குறத்தியர். இத்தகைய இரந்து வாழும் குறத்திகளை இன்றும் நாம் காணலாம். ஆனால், இன்றைய காலகட்டத்தில் அவர்களும் கூட சிறிய வியாபாரிகளாகி, ஊசிகள், மருந்துப் பொருட்கள், மூலிகைகள், பாசிகள் போன்றவற்றை விற்று வருகிறார்கள். மிருகண்டு முனிவரின் ஆசிரமத்திற்குப் பாடிக்கொண்டு குறத்தி வந்த சமயம், கோடைகாலத்தின் பிற்பகல் ஆகும்" என்று வருமிடம் இதற்குச் சான்று (A. Madhavaiah, Markandeya, p. 18, Chapter VII, 'The Mother and the Sooth Sayer'). குறி சொல்லுவதற்குக் குறத்தி வந்தாள் என்று சொல்லாமல், குறத்தியின் தொழில், பொருளாதார நிலை, இருப்பிடம், இன்றைய நிலை என முழு-மையான வாழ்க்கைச் சித்திரம் ஒன்றை அ. மாதவையா இங்கு தந்துள்ளார். கதை சொல்வது மட்டும் அவருடைய நோக்கமன்று. தேவையான இடங்களில் இவ்வாறு நம் சமூக அமைப்பு பற்றியும் இனவரலாறு பற்றியும் விரிவாக விளக்குகிறார். படிக்கும் வாசகருக்கு நல்ல உயர்தரமான, கனமான பிற அறிவுத்துறை சார்ந்த செய்திகளை விளக்கமாக அவர் கூறுகிறார். அவருடைய உரைநடை நூல்கள் பலவற்றிலும் இப்போக்கைக் காணலாம். மார்க்கண்டேயன் நூலில் இப்படி நிறையச் செய்திகளை நாம் அறிகிறோம்.

மணிமேகலை நூல் மணிமேலை கதையை - வரலாற்றை - இருபது இயல்களில் கூறுகிறது. "பிறப்பால் வரும் சாதியமைப்பை மிகக் கடுமையான முறையில் தாக்கி எதிர்ப்பது, இக்காப்பியத்தில் இடம் பெறும் தவறு செய்த, வழுக்கி விழுந்த பெண்கள், அந்தணர்களால் அடைக்கலம், தரப்பட்டுக் காக்கப்படுவதுமான நிகழ்ச்சிகள் இன்றைய நவீன வாசகர்களுக்கு அதிர்ச்சியையும் ஆர்வத்தையும் ஊட்டும்... இந்நாட்களில் படிப்பதற்கு மிகவும் ஏற்றதாகும். எனவே, இம்முயற்சியை நான்

மேற்கொண்டேன்" (A. Madhavaiah, Manimekalai, pp. x, xi, xii) என்று அ. மாதவையா முன்னுரையில் கூறியுள்ளார். சாதியமைப்பு முறையை மிகக் கடுமையாகச் சாடுவதும், நெறி தவறிய பெண்களுக்கு அடைக்கலம் தந்து பாதுகாத்து உதவும் அறப்பண்பை அந்தணர்கள் கொண்டிருந்தனர் என்பதும் மிகப் பெரும் செய்திகள். அவை ஆசிரியரைப் பெரிதும் ஈர்த்துள்ளன.அ. மாதவையாவின் மனம் எதை எடுத்தாலும் சாதீய அமைப்பிற்கு எதிராகப் போராடும் நிலைப்பாட்டுடன் விளங்குகிறது என்பதை இது அழுத்தமாகக் காட்டும்.

'நந்தன்' நூலை, அ. மாதவையா, சமூக அமைப்பில் காணப்படும் சாதி முறைகளை வெளிப்படுத்த வேண்டி எழுதினார். ஒடுக்கப்பட்டு, உரிமைகளின்றி வாடும் அடித்தளமக்களை முதன்மைப்படுத்தி, அவர்களுக்கு விழிப்புணர்வு ஏற்படவும் அம்மக்கள் உரிமை பெற்று, மேன்மைபெற வேண்டும் எனவும் விரும்பியே அவர் இந்த நூலை எழுதியுள்ளார். "இன்றும் நம்மிடையே வாழும் நந்தனின் சகோதரர்களான பஞ்சமர்கள், பல நூற்றாண்டுகளுக்கு முன் நந்தன் வாழ்ந்த நிலையிலேயே உள்ளனர்... நந்தனின் சகோதரர்களான பஞ்சமர்களுக்குக் கோயில்களில் நுழைவதற்குக் கூட உரிமையில்லை. இந்தப் பாடத்தையா உயர் சாதியினருக்கு நந்தன் கற்றுத்தந்தான்? ஆகவே, உயர்ந்த தாழ்ந்த எந்த இனத்தவராக நாம் இருந்தாலும், இதனை நாம் சிந்தனையில் எண்ணிப் பார்க்க வேண்டும். மனிதர்கள் அனைவரிடமும் சகோதர உணர்வையும் கடவுளிடம் தந்தை உணர்வையும் காட்டுமாறு நாம் வாழ வேண்டும்" (A. Madhavaiah, Nanda, pp.81-82) என்று வரும் பகுதியில் சாதிக் கொடுமை-களை அடியோடு நீக்க வேண்டும் எனவும் அனைவரும் சகோதரர்களாக வாழவேண்டும் எனவும் அவர் வலியுறுத்துவதைக் காணலாம். இந்த உயரிய நோக்கத்திற்காகவே அவர் நந்தன் வரலாற்றை எழுதினார்.

நூலாக வந்தவை தவிர, இன்னமும் நூல்வடிவம் பெறாத, பல்வேறு இதழ்களில் தமிழிலும் ஆங்கிலத்திலும் அவர் எழுதிய ஏராளமான கட்டுரைகள் உள்ளன. அவையாவும் அவருடைய சமூகப் பொறுப்புணர்வையும், சீர்திருத்த மனப்பான்மையையும் நுட்பமான சிந்தனையையும் கூர்மையான திறனாய்வுப் பார்வையையும் பல்துறைப் புலமையையும் ஒருங்கே காட்டும். 'தில்லைக் கோவிந்தன் கலவை' என்னும் தலைப்பில் ஐந்து பகுதிகளாக அவர் எழுதிய தொடர் கட்டுரை, ஆங்கிலத்தில் சென்னை கிறித்தவக் கல்லூரி மலரில் 1906 - 1907ஆம் ஆண்டுகளில் வெளி வந்தது. இக்கட்டுரைத் தொடரில் சமூகச் சீர்திருத்தம், பெண் உரிமை என்னும் கருத்து நிலைகளை அவர் மிகவும் அழுத்தமாக வெளியிட்டுள்ளார். "இந்தியப் பெண்ணுக்கு மட்டும் கற்பு, குருட்டுத்தனமான கீழ்ப்படிதல், தானே முன் வந்து சுய தியாகம் செய்தல்

ஆகிய ஒழுக்க விழுமியங்களைச் சுமத்தியுள்ளது. இதுவே நாட்டிற்குக் கேடாக அமைந்துள்ளது" என்று அவர் ஆணித்தரமாக வலியுறுத்தியுள்ளது. பெண்ணுக்குச் சம உரிமை வேண்டும் என்ற கருத்தாக்கம், வேறுபாடின்றி அவருடைய குருதியில் கலந்து உள்ளது என அறியலாம்.

பஞ்சாமிர்தம் இதழில் அவர் ஏராளமான கட்டுரைகளையும் தொடர் கட்டுரைகளையும் வேறு பல்வேறு பகுதிகளையும் எழுதியுள்ளார். சமூகச் சீர்திருத்தம், பெண் சமத்துவம் ஆகிய முதன்மையான இருகருத்தாக்கங்களுடன் நாட்டுப்பற்று, தாய் மொழி மேன்மை என்பவையும் இவைகளில் காணப்படுகின்றன. சமூகச்சீர்திருத்தம் மேல் சாதியினரிடமிருந்து வர வேண்டும் என அவர் எழுதினார். "பிராமணரும் மற்ற மேல் சாதியாரும் ரோடு மராமத்து, பிணஞ்சுடுதல், தோட்டி வேலை, உழவு, மரம் ஏறுதல் முதலிய கௌரவக் குறைவாக மதிக்கப்படும் வேலைகளைத் தமக்கும் தாமே செய்து கொள்ளப் பழகி, அப்படியே செய்வார்களாயின், நமது தேசம் அதிசீக்கிரத்தில் மேன்மையடைந்து, சுயராஜ்ஜியமும் கையகப்பட்டு விடும்...." (அ. மாதவையா, 'பத்திராதிபர் குறிப்புகள்', பஞ்சாமிர்தம், ப. 82, சித்திரை 1924) என்னும் பகுதி தீவிரமான அவருடைய சிந்தனைப் போக்கைக் காட்டும்.

'பெண் கல்வி' என்றொரு கட்டுரையை அ. மாதவையா பஞ்சாமிர்தம் இதழில் எழுதினார். பெண்ணுக்குச் சம உரிமை என்பதன் முதற்படியாகப் பெண்ணுக்கு ஆணைப் போலவே கல்வி வேண்டும் என வலியுறுத்த அவர் எழுதினார். "மனிதர் ஆத்மாவில் ஆண் - பெண் என்ற பேதமில்லை. இந்த வேற்றுமை உடல் உறுப்புக்களை ஒட்டியதே. அதனால் ஸ்தூலத்துக்கே பொருந்தும். கல்வி ஸ்தூலப் பொருள் அன்று. எனவே, அதை ஆண் - பெண் என்று பாகுபடுத்துவது பொருந்தாது. ஆதி காலத்தில் இப்படிப்பட்ட பேதம் இருந்ததாகத் தெரியவில்லை" (அ. மாதவையா, "பெண்கல்வி." பஞ்சாமிர்தம் ப. 129, வைகாசி, 1924) என்று அவர் எழுதியுள்ளார்.

அந்த நாட்களில் ஆண் - பெண் வேறுபாடு என்பது உடலமைப்பில் உறுப்புக்களில் - மட்டுமே என எழுதியது மிகத்தீவிரமான சிந்தனையாகும். பெண்ணியச் சிந்தனைக்கு இக்கட்டுரை மிகப் பெரும் பங்களிப்பாகும்.

எளிமையும் இனிமையுமிக்க நடையில், அழுத்தமாகத் தம் கருத்துக்களை அ. மாதவையா இப்படைப்புகளில் வெளியிட்டுள்ளார். அவரே கூறுவது போல அனைத்துத்தரப்பு மக்களுக்கும் சென்று சேரும்

நல்ல நடையில் அவர் எழுதியுள்ளார். இலக்கியவகை எதுவாயினும் படிப்பவரை ஆழமாகச் சிந்திக்கச் செய்யும் கனமான உள்ளடக்கங்களை அவர் எழுத்துக்களில் அடிநாதமாகக் காணலாம். புனைகதைகளில் மட்டுமின்றி ஏனைய படைப்புக்களிலும் அவர் ஆழமான சமூகப் பார்வையையும் நடப்பியல் நெறியையும் வெளிப்படுத்தி உள்ளார். அந்த இலக்கிய வகைகளிலும் அவர் சாதனையாளராக உள்ளார்.

## இயல் – 5

# சமூகச் சீர்திருத்த சிந்தனைகள்

அ.மாதவையா வாழ்ந்த காலம் ஐரோப்பிய பண்பாட்டு மரபு, இந்து மரபின் மீது தாக்கம் ஏற்படுத்திய காலம். ஐரோப்பியரின் ஆட்சியால் ஆங்கிலக் கல்வி, ஐரோப்பிய வாழ்க்கை முறை, பண்பாட்டு மரபு, மேற்கத்திய நாகரிகம், கிறித்தவ சமயம் என அனைத்தும் காலங்காலமாக இருந்து வந்த இந்து சமய, சமூக, பண்பாட்டு வாழ்க்கை மரபுகளை, மொழி, நாகரிகம் என அனைத்தையும் பாதித்தன. சான்றாக, கிராம வாழ்க்கை, கூட்டுக் குடும்பம், பழைய கல்வி, முன்னோர் சேர்த்த செல்வங்களைக் கொண்டு வாழும் ஆடம்பர வாழ்வு என்பன மாறி, நகர வாழ்வு, நகரத்தில் தனிக் குடும்பம், ஆங்கிலக் கல்வி, தொழில் செய்து, அலுவல் பார்த்துத் தன் கல்வியாலும் உழைப்பாலும் சேர்த்த செல்வம் கொண்டு தகுதியைத் தேடிக் கொள்ளல் என்ற நிலைகள் ஏற்பட்டன. மேற்கத்திய ஆக்கம் (Westernisation) நகரிய ஆக்கம் (Urbanisation) என்பவை ஏற்பட்ட நவீன வாழ்க்கை மரபுகள் ஏற்பட்ட காலம் அது. இக்காலச் சூழலில் வாழ்ந்த அ. மாதவையா, பண்பாட்டுச் சூழலில் செயற்பட்டு, தம் காலச் சமூக அமைப்பில் காணப்பட்ட சீர்கேடுகளை இடைவிடாமல் சீர்திருத்த விழைந்தார். தம் வாழ்நாள் முழுவதிலும் தம் படைப்புக்கள் வழியே சமூகச் சீர்திருத்த சிந்தனைகளை வெளியிட்டார். தாம் உறுதியாக நம்பிய முற்போக்குக் கருத்துக்களை யாருக்கும் அஞ்சாமல் மிகுந்த துணிவுடன் தம் படைப்புக்களில் எழுதினார். தாம் எழுதிய சீர்திருத்த சிந்தனைகளை அவர் தம் சொந்த வாழ்விலும், கடைப்பிடித்துச் சொல்லும் செயலும் ஒன்றாக வாழ்ந்தார். அவருடைய படைப்புக்களால் அறியப்படும் சமூகச் சீர்திருத்த சிந்தனைகளை இவ்வியலில் காண்போம்.

**சாதியமைப்பு**

இந்தியச் சமூக அமைப்பு சாதியமைப்பிற்கு நெடுங்காலமாக உட்பட்டு, சாதிக் கட்டுப்பாடுகளால் இறுகிப்போய் உள்ளது. உயர் சாதியினர் ஒவ்வொருவரும் தமக்குக் கீழுள்ள இனத்து மக்களை ஒடுக்கி, தம் மேலதிகாரத்தை அவர்கள் மீது செலுத்தி வந்தனர். சாதியின் பெயரால் நடக்கும் கொடுமைகளையும் பல கட்டுப்பாடுகளையும் அவர் தொடர்ந்து

எதிர்த்தார். அந்தணர் சமூகத்தில் காணப்பட்ட சமூகச் சீர்கேடுகளைச் சீர்திருத்த அவர் விரும்பினார். "நம்முடைய நாகரிகங்களுக்கெல்லாம் மூல ஸ்தானமாகிய பிராமணரது ஆசார அனுஷ்டானங்களைச் சீர்திருத்துவதே முதற்கடமை" (அ. மாதவையா, ஆசாரச் சீர்திருத்தம், ப. 3) என்று அவர் மிகத் துணிவுடன் எழுதினார். "சற்குணங்களும் நல்லொழுக்கமும் நிறைந்த ஒரு உத்தம சூத்திரனிலும், பஞ்சமாபாதகனான ஒரு பிராமணன் அதமனே மேலென்று நினைக்கும் உலகந்தானே இது" (அ.மாதவையா, முத்து மீனாக்ஷி, ப. 76) என்று முத்து மீனாட்சி நாவலில் அவர் கூறுகிறார். பிறப்பால் வரும் சாதி பற்றியும் அதனால் வரும் உயர்வு தாழ்வு பற்றியும் மதிக்கும் சாதிக் கட்டுப்பாட்டை அவர் மறுக்கிறார். தீய பழக்கங்களை விடுத்து, நற்பண்புகளும் நல்ல குணங்களும் நல்லொழுக்கமும் உடைய, உள்ளும் புறமும் ஒத்த உயர் ஒழுக்க வாழ்வை அவர் மதிக்கிறார்; வெளிவேடத்தை அவர் கடுமையாக எதிர்க்கிறார். "சாதிக்கட்டு எவ்வளவு தடை செய்கிறதென்பது வெளியாகிவிடும். உண்பதையும் உடுப்பதையும் உறங்குவதையும் சகல கிருத்தியங்களையும் மதத்தோடு கலந்து நாம் பாழாக்குகிறோம்.... பெரியவர்கள் கூடி மதத்தையும் மற்றவைகளையும் பிரித்தாலன்றி, அல்லது காலத்துக்குத் தக்கபடி ஒழுக இடங்கொடுத்தலன்றி நாம் ஒருநாளும் முன்னுக்கு வரமாட்டோம். நமக்குள் இருப்பது போன்ற சாதிக்கட்டு வேறு எந்த தேசத்திலுமில்லை" (அ. மாதவையா, முத்து மீனாக்ஷி, பக். 85, 86) என்று அவர் முத்து மீனாட்சி நாவலில் கூறுவது மிகவும் சரியானதும் காலத்திற்கு ஏற்றதுமான சீர்திருத்த சிந்தனையாகும். மனிதனை மிகவும் கட்டுப்படுத்தி உள்ள சாதியமைப்பை, கால மாற்றத்திற்கும் தேவைக்கும் ஏற்ப மாற்றி அமைக்க வேண்டும் என்று அவர் வலியுறுத்தினார். காலத்திற்கு ஒத்து வராததும் தனிமனித நலனுக்குக் கேடு விளைவிப்பதுமான சமய, சாதிப் பழக்க வழக்கங்களை, நடைமுறைகளை அடியோடு மாற்ற வேண்டும் என அவர் வலியுறுத்தினார்.

சாதியாசாரம் என்ற பெயரில் அவர் காலத்தில் நடந்த கேடுகளைக் கிண்டல் செய்து எள்ளல் நடையில் அவர் நாவல், சிறுகதை மற்றும் உரைநடை நூல்களைப் படைத்தார். 'ஏணியேற்ற நிலையம்' என்னும் சிறுகதை ஒன்றை அவர் பஞ்சாமிர்தம் இதழில் எழுதினார். "சாதி ஏணியில் கீழ்ப்படிகளில் இருப்பவர்களை மேலேற்றி விடும் தன்மையினால் அந்த நிலையத்துக்குத் தான் சூட்டிய விசித்திர நாமத்தைப் பற்றி ஓர் அரிய சொற்பொழிவு சொரிந்தார். மேல் சாதியாரைச் சற்றுக் கீழே இறக்கி, கீழ் சாதியாரை மேலே உயர்த்தி விட்டால், எல்லோரும் ஒரு பொது மேடையில் சாதி பேதமின்றி வாழலாம் என்று எண்ணினார்" (அ. மாதவையா, 'ஏணியேற்ற நிலையம்', பஞ்சாமிர்தம், பக். 46-47, சித்திரை, 1925) என்று

வருவது அறியத்தக்கது. சாதி வேற்றுமைகளைப் போக்க அனைவரையும் சாதிவேறுபாடு இன்றி ஒரே இடத்தில் ஒன்று சேர அமர்ந்து உணவு உண்ணச் செய்ய அவர் முயல்வதும் தன் முயற்சியில் பெரியவர் தோல்வியுறுவதும் இச்சிறுகதையில் எள்ளல் நடையில் காட்டப்படுகிறது. "பிராமணன் கூட இருந்து சாப்பிட விரும்பும் வேளாளன், பறையன் கூடத்தான் இருந்து சாப்பிடக் கூசுகிறானே" (அ. மாதவையா, 'ஏணியேற்ற நிலையம்', ப. 49) என வருமிடம் நம்முடைய மக்கள் மனத்தில் காலங்காலமாகச் சாதிப்பாகுபாடு எவ்வாறு வேரோடிக் கலந்து உள்ளது என்பதைக் காட்டும். ஒவ்வொரு இனத்தாரும் தம் நலனை முன்வைத்து தமக்கு மேல் உள்ள சாதியினரோடு சரி சமமாகக் கலந்து பழகவும் அதே சமயம் தமக்குக் கீழுள்ள இனத்தாரைத் தீண்டாத நிலையிலே வைத்திருந்து அடக்கியாளவும் விரும்பிய சாதிக் கட்டமைப்பை இச்சிறு-கதையில் அவர் அழுத்தமாகப் படைத்துள்ளார்.

அந்தணர் சிலர் தம்முடைய பிறப்பின் காரணமான உயர்சாதித் தகுதியைக் கொண்டு தமக்குக் கீழ்ப்பட்ட சாதியினரைத் துன்புறுத்தி அடித்த நிகழ்ச்சி ஒன்று பத்மாவதி சரித்திரம் நாவலின் முதற் பகுதியில், முதல் இயலில் வருகிறது. அடிபட்டவர் நேரடியாக இறங்கல் நீதிபதியிடம் சென்று முறையிட்டுத் தம்மைத் துன்புறுத்திய சீதாபதி அய்யருக்கும் அவருக்கு உடந்தையாக இருந்த அந்தணர் சிலருக்கும் நீதிமன்றம் வழி தண்டனை பெற்றுத் தருகிறார். ஆங்கிலேயர் வருமுன் நம்முடைய நாட்டில், கிராமங்களில் ஊர்ப்பஞ்சாயத்து நீதிமன்றமாக இருந்து, அதில் உயர்சாதியினர் மேலாதிக்கம் செலுத்தி வந்தனர்; நீதி அனைவருக்கும் ஒருபடித்தாக – சமச்சீராக – இருக்கவில்லை. ஆங்கில ஆட்சி முறை வந்தபின், நீதிமன்றங்கள் ஏற்பட்ட பின்னரே இம்முறை மாறி, நீதியின் முன் சாதிப் பாகுபாடு இன்றி அனைவரும் சமம் என்ற நிலை ஏற்பட்டதைச் சீதாபதி அய்யருக்கும் அவரைச் சார்ந்த வேறு சில அந்தணர்களுக்கும் தண்டனை கிட்டிய நிகழ்ச்சி மூலம் பத்மாவதி சரித்திரம் நாவலில் அ.மாதவையா காட்டியுள்ளார்.

உயர் சாதியினரின் மனப்பான்மை மாற வேண்டும் என்பதை அவர் இதில் வலியுறுத்துகிறார். சாதியைக் காரணங்காட்டி மனிதர்களுக்குள் பிரிவினை ஏற்படுத்துவதையும் உயர் சாதியினரின் ஆதிக்க மனநிலை-யையும் மாதவையா இந்நிகழ்ச்சி வழி காட்டுவதுடன், அப்போக்கு மாற்றப்பட வேண்டும் என வலியுறுத்துகிறார். அதற்காகவே, சீதாபதி அய்யர் சிறைத் தண்டனை பெறுவதையும் படிப்பினையாக ஆசிரியர் காட்டுகிறார். 'தில்லைக் கோவிந்தன்' நாவலில் சாம்பசிவ தீட்சிதர் நடந்து செல்கையில் ஒற்றையடிப்பாதையில், தாழ்ந்த இனத்து, கிறித்தவனாக மதம் மாறிய ஒருவன் எதிரே வரக் கண்டு விலகிப் போகுமாறு கூறும் நிகழ்ச்சி

ஒன்று காட்டப்படுகிறது. உயர்சாதியினரிடம் காணப்படும் சாதிவேறுபாடு பார்ப்பது, தம்மை உயர்வாக எண்ணிக் கொள்வது, பிற சாதியாரை இழிவாக நடத்துவது என்னும் பண்புகளை அ. மாதவையா இதில் காட்டுகிறார். இப்பண்புகள் அடியோடு மாறவேண்டும் எனவும் அனைவரும் சமம் என்ற உணர்வு உயர் சாதியினரிடம் ஏற்பட வேண்டும் எனவும் அவர் இதன் வழி வலியுறுத்துகிறார். 'கண்ணன் பெருந்தூது' என்னும் சிறுகதையிலும் இதைப் போன்றதொரு காட்சியை அவர் படைத்துள்ளார்.

"அடே! அடே! இன்னம் இரண்டடி தள்ளிக்கோடா! உனக்குக் கோடிப் புண்ணியமுண்டே! நீ நல்லவனாச்சே..... கொஞ்சம் தள்ளிக்கோ அப்பா'

வழிப்போக்கன் : போ பாப்பாத்தி, நீ ஓரமாய்ப்போ. இன்னமும் எங்கே போய் விளச்சொல்றாய்'.

திருவி : அட முறிவாய். கொள்ளையிலே போவாய் நீ. இன்னம் நாலடி தள்ளி நடக்கப்படாதா?

வழிப்போகன் : ஏன், பாப்பாத்தி! அந்தக் கொள்ளை உனக்கு வராதோ" (அ. மாதவையா, 'கண்ணன் பெருந்தூது', பஞ்சாமிர்தம், ப. 610, கார்த்திகை, 1925) இவ்வுரையாடலில் உயர்சாதியினரிடம் மேற்கூறிய பண்புகள் உள்ளதை ஆசிரியர் காட்டியுள்ளார். அத்துடன், வழிப்போக்கனான தாழ்ந்த இனத்தவன், மேற்சாதியாரின் ஆதிக்கப்போக்கை எதிர்த்துப் பேசுவதையும் காட்டுகிறார். நவீனமயமான வாழ்க்கைப் போக்கு வளர்கையில் புதிய சிந்தனைகள் வருகையில் இப்போக்கு மாறும் என்ற நம்பிக்கையையும் ஆசிரியர் முன் வைக்கிறார். சாதி வேறுபாடு நீங்கி அனைவரும் ஒன்று என்னும் நிலை மலருவதே மெய்யான விடுதலை என அவர் காட்டுகிறார். சாதி வேறுபாடுகள் நீங்கி, அனைவரும் சமம் என வாழும் நிலையே உண்மையான விடுதலை என அவர் வலியுறுத்தினார். தனி மனித விடுதலை, சமூக விடுதலை என்ற இரண்டுமே முதலில் நிகழ வேண்டுவன என்பது அவர் கொள்கை. மனிதனைக் கேடான வழக்கங்கள் - துர் ஆசாரங்கள் - தளைகளாக அடிமைப்படுத்தியுள்ளன. இவை-களிலிருந்து மனிதன் விடுதலை பெற வேண்டும் என அவர் தொடர்ந்து எழுதினார். "இந்தியர் அனைவரும் வறுமை நீங்கி, அறியாமை களைந்து வாழக்கூடிய நாள் தான் சம்பூர்ண சுயராஜ்ஜியத்தை அனுபவிக்கும் நல்ல நாள்" (அ. மாதவையா, பஞ்சாமிர்தம், ப. 445, புராட்டாசி 1924) என அவர் பஞ்சாமிர்தம் இதழில் எழுதியது இதனை வலியுறுத்தும்.

"அகத்திலே அடிமைகள் அம்பலத்திலே
சுதந்திர வீரர்களாய் இலங்குவ தெப்படி"

(அ. மாதவையா, பஞ்சாமிர்தம், ப. 444, புரட்டாசி, 1924) என்று அவர் எழுதியதும் இதனைப் புலப்படுத்தும். அவருடைய படைப்புக்கள் இருந்து பொழுதைக் கழிப்பதற்காக எழுதப்பட்ட பொழுது போக்கு எழுத்துக்கள் அல்ல. தாம் ஏற்றுக் கொண்ட சமூகச் சீர்திருத்த கருத்துக்களை விளக்கும் வெவ்வேறு இலக்கிய வகைகளை அவர் படைத்தார். அவருடைய மகள் மா. இலட்சுமி அம்மாள், கலைக்களஞ்சியம் தொகுப்பில் எழுதினார். "அவர் சமூகச் சீர்திருத்தத்தில் ஆர்வம் கொண்டவர். பெண்டிரும் தாழ் வகுப்பினரும் பழைய வழக்கங்களின் கொடுமைகளுக்கு உள்ளானதை எதிர்த்து எழுதினார். இந்த எதிர்ப்பையே தம் நூல்கள் பலவற்றிலும் உள்ளுறையாகக் கொண்டு, சமூகத்துடன் நீண்ட காலம் போராடினார்" (மா. இலட்சுமி அம்மாள், மாதவையா, அ., கலைக்களஞ்சியம், தொகுதி எட்டு, ப. 218) என்பது இங்கு மனங்கொள்ளத்தக்க உரிய பாராட்டு.

அ. மாதவையா தான் காலமெல்லாம் எழுதியும் போற்றியும் வந்த சமூகச் சீர்திருத்த சிந்தனைகளைத் தம் சொந்த வாழ்வில் அப்படியே கடைப்பிடித்தார். அவருடைய வீட்டில் பல இனத்தவர்களும் எந்த வேறுபாடுமின்றி வருவதும் அவர்களுடன் எவ்விதமான வேறுபாடும் பாராட்டாமல் ஒன்று சேர்ந்து உணவு உண்ணும் பழக்கம் இருந்ததை அவருடைய பிள்ளைகள் நினைவு கூர்கின்றனர். கடல் கடந்து வெளி நாடு செல்லும் அந்தணரைத் தீட்டுப் பட்டவர்களாகப் பழித்து, சாதி நீக்கம் செய்து ஒதுக்கிவிடும் பழக்கம் அக்காலத்தில், பழமைவாதிகளான மூத்த தலைமுறை அந்தணரிடம் இருந்தது; பாவத்திற்குப் பரிகாரம் - பிராயசித்தம் செய்யும் மரபு நடைமுறையில் இருந்தது. தமிழ் மரபில் கடல் கடந்து பெண்கள் செல்லுதல் கூடாது என்னும் கட்டுப்பாடு இருந்தது. இதனை 'முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை' (தொல்காப்பியம், பொருளதி காரம், அகத்திணை இயல், நூற்பா - 37) என்று பழமையான தமிழ் நூலான தொல்காப்பியம் கூறுகிறது. கடல் கடந்து பெண்களுடன் செல்வது இல்லை எனப் பொது நிலையில் இக்கட்டுப்பாடு கூறுகிறது. ஆண்கள், கடல் கடந்து சென்றாலும் பெண்களை உடன் அழைத்துச் செல்லும் மரபு அறவே இல்லை என இது சுட்டும். இந்தப் பழைய மரபுகளை ஏற்காத அ. மாதவையா தம் மகள் இலக்குமி அம்மாளை இலண்டனுக்கு அனுப்பி அங்கு தங்கிப் படிக்கவும் அனுமதித்த செயல், காலத்திற்கு ஒவ்வாத பழைய கட்டுப்பாடுகளை ஏற்காத அவருடைய சீர்திருத்த மனப்பான்மையை அழுத்தமாகக் காட்டும். காலங்காலமாக அவர் வலியுறுத்தி வந்த பெண் கல்வியைத் தம் மகளுக்கு நல்குவதற்காக அவர் முனைந்து நின்ற பண்பைக் காட்டும். தாம் எழுத்துக்களில் வலியுறுத்தியதை அவர் தம் சொந்த வாழ்க்கையிலும் கடைப்பிடித்துச் சொல்லும் செயலும் ஒன்றென வாழ்ந்தார்.

**குடும்ப வாழ்வு**

குடும்ப அமைப்பில் காணப்பட்ட சீர்கேடுகளை அறவே நீக்கிச் சீர்திருத்த அ. மாதவையா விரும்பினார். தம் படைப்புகளில் சீர்திருத்த சிந்தனைகளை அவர் வெளியிட்டார். பத்மாவதி சரித்திரம், முத்து மீனாட்சி, தில்லை கோவிந்தன் போன்ற நாவல்களில் கூட்டுக் குடும்ப வாழ்வையும் தனிக்குடும்ப வாழ்வையும் அவர் படைத்தார். கல்வி கற்பதற்காகவும் அலுவல் காரணமாகவும் கிராமங்களை விட்டு நகரங்களில் குடியேறி, தனிக் குடும்ப வாழ்வை மேற்கொண்ட நிலையைப் பத்மாவதி சரித்திரம். முத்து மீனாட்சி நாவல்கள் காட்டும். ஆங்கிலக் கல்வியும் ஐரோப்பிய நாகரிகமும் நவீனமயமான நகர வாழ்க்கைக்குக் கிராம இளைஞர்களை மாறச் செய்த காட்சியைப் பத்மாவதி சரித்திரம் நாவலில் நாராயணன், கோபாலன் வாழ்வில் விரிவாகக் காட்டுகிறார். முத்து மீனாட்சி நாவலில் முத்து மீனாட்சி - சுந்தரேசன் மணவாழ்வு வழியேயும் காட்டுகிறார். நகர வாழ்வும் தனிக்குடும்ப அமைப்பும் சில மாற்றங்களை நடைமுறைக்குக் கொண்டு வந்தன. நகரத்தில் சென்று தங்கி வாழ்வதால் மரபான ஆசாரங்கள் கெட்டுப் போவதாக மூத்த தலை முறையினர் கருதினர் என்று பத்மாவதி சரித்திரம் நாவலில் ஆசிரியர் காட்டியுள்ளார். ஆனாலும் அதை மீறி இளைய தலைமுறையினர் நகர வாழ்வில் பல நன்மைகளைக் கண்டனர் என அவர் காட்டியுள்ளார். காலத்திற்கு ஏற்ப வரும் மாற்றங்களை ஏற்று வாழ்வதும் ஒழுக்கமும் நன்னடைத்தையும் கொண்டு வாழ்வதுமே சிறந்த ஆசாரம் என்பதாக நாராயணன் கூற்றின் வழி பத்மாவதி சரித்திரம் நாவலில் காட்டுகிறார். "காலத்துக்குத் தக்கபடி மாறக்கூடாதென்று அவர்கள் விதிக்கவுமில்லை; நாம் மற்ற விஷயங்களில் மாறாமல் இருக்கவுமில்லை. நடுவே வந்த சில துர்வழக்கங்களை மட்டும் சர்வ சம்பிராச்சியமாக வைத்துக் கொண்டு நாம் இப்படித் திண்டாடுகிறோம்; என்று விடியுமோ தெய்வத்துக்குத்தான் தெரியும்.... நானும் ஒழுங்காய் நடந்து, பிறருக்கும் உதவி செய்ய வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். பொய்யில்லை, களவில்லை, புல-ாலில்லை, கள் சூதுகளில்லை, நமக்கோ பிறருக்கோ ஸந்தோஷத்தையோ, நன்மையையோ இரண்டையுமோ கொடுக்கக்கூடிய ஏதொன்றையுமோ செய்வதற்கு எனக்குச் சுதந்திரம் இல்லாவிட்டால் என் படிப்பினால் என்ன பயன்? மற்றதனால் தான் என்ன பயன்?.... இந்த மாதிரி நிர்ப்பந்தங்கள் எல்லாம் தொலைந்து, பிறர்க்குத் தீங்கில்லாதபடி, அவரவர் மனசாக்ஷிக்கு விரோதமின்றி, நடக்கும் சுதந்திரம் நமக்குள் இப்பொழுதினும் நூறில்லை ஆயிரமடங்கு பெருகும் வரை, வெளிவேஷமும் ஆஷாடபூதித்தனம் பாசாங்கும் நமக்குள் அனாவசியமாகும் வரை, நமக்கு வேறு சுதந்திரங்கள் கிடைக்கப் போகிறதுமில்லை" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப.

276) என்று வரும் பகுதி இதனை வலியுறுத்தும். காலத்திற்கு ஏற்ப ஆசாரங்களை நாம் மாற்றிக் கொள்ள வேண்டும் என அவர் வலியுறுத்துகிறார். தனி மனித ஒழுக்கத்தை அவர் வலியுறுத்துகிறார். தனக்கும் பிறருக்கும் மகிழ்ச்சியையும் நன்மையையும் தரக்கூடிய எதையாவது செய்வதற்குச் சுதந்திரம் தருமாறு கல்வியின் பயன் அமைய வேண்டும்; அப்படியில்லாத கல்வியால் பயனில்லை எனவும் இதில் கூறுகிறார். கல்வியின் பயன் சிந்தித்துச் செயற்படும் தெளிவையும் மனஉறுதியையும் தர வேண்டும் என அவர் வலியுறுத்துகிறார். இதே கருத்தை, "... தங்களைத் திருப்தி செய்வதற்காக என் மனசாக்ஷிக்கு நேர் விரோதமாய் நடந்தேனானால், அது அந்தக் கல்வியையே முழுதும் பொய்ப்பித்ததாகும்... இந்த பரிகாரத்தைக் கூட நான் செய்யாவிட்டால், நான் ஒரு ஆண்பிள்ளை அல்ல; என் படிப்பும் வீணே" (அ. மாதவையா, குசிகர் குட்டிக் கதைகள், 'அவனாலான பரிகாரம்', பக். 25, 21) என்று அவனாலான பரிகாரம் சிறுகதையில் கூறுகிறார். அதேபோன்று, காலத்திற்கு ஏற்றபடி நம்முடைய ஆசாரங்களை மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதை முத்து மீனாட்சி நாவலில், "ஆறு வயதில் ஒரு குழந்தைக் கணிந்த உடுப்பு இருபது வயதில் சரியாயிருக்குமா? ஆறு வயதோ, இருபது வயதோ, எண்பது வயதோ தற்காலம் என்பது இப்போது நாம் கவனிக்க வேண்டியதன்று. ஒரே உடை மூன்று பருவங்களுக்கும் பொருந்தாது என்பதே நாம் அறிய வேண்டியது... நம்முடைய ஆசாரஅனுஷ்டான விஷயங்களிலும் ஏன் சிறிது அப்புத்தியைச் செலுத்தக் கூடாது" (அ. மாதவையா, முத்து மீனாக்ஷி, பக். 77 - 78) என்று கால மாற்றத்திற்கு ஏற்ப நாம் மாற வேண்டும் என்பதை அழுத்தமாக வலியுறுத்துகிறார். கால மாற்றம், பழக்கவழக்கங்களை மாற்றும் என்பதைக் கொண்டு, சீர்கேடுகளைப் போக்க வேண்டும் என வலியுறுத்துகிறார் அ. மாதவையா.

**மூட நம்பிக்கைகள்**

காலத்திற்கும் பகுத்தறிவிற்கும் அறிவியல் வளர்ச்சிக்கும் ஒத்து வராத பழமையான மூட நம்பிக்கைகள் அன்றைய சமூக வாழ்வில் காணப்பட்டன. அத்தகைய சீர்கேடுகளை அ. மாதவையா தம் படைப்புக்களில் எடுத்துக்காட்டி, அவைகள் அடியோடு நீக்கப்பட வேண்டும் என வலியுறுத்தினார். அக்காலத்தில் அந்தணர் இனத்தவர் கடல் கடந்து வெளி நாடு செல்வது ஆசாரக் கேடு எனவும் அப்படிச் சென்று வந்தவருடன் சரிசமமாக அமர்ந்து உணவு உண்ணுவது பாபச் செயல் எனவும் மூட நம்பிக்கை காணப்பட்டது. பத்மாவதி சரித்திரம் நாவலில் இப்படிப்பட்ட காட்சி ஒன்று இடம் பெற்றுள்ளது.

"நாராயணன் : அவரும் நம்மைப் போல பிராமணன் தானே, மாமா. இப்படிச் செய்வது அவருக்கு எவ்வளவு அவமானமாயிருக்கும்?

ஐயாவையர் : எல்லாம் நீங்கள் கூட இருந்து சாப்பிட்டு வெகுமானப் படுத்தினால் போதும்; வெள்ளைக்காரர் மாதிரி, அவளையும் வேண்டுமானால் கூட வைத்துக் கொள். கெட்ட கேட்டுக்குப் பிராமணன் வேறா!

இதற்குள் ரெங்கசாமியையர் பூட்ஸை மட்டும் கழற்றி வைத்து விட்டுத் திரும்பி வந்து விடவே, ஐயாவையரும் வைதீகர்களும் தாமே உத்திராபோஜனம் வார்த்துக் கொண்டு எழுந்து இருந்து விட்டார்கள். ரெங்கசாமியையர் முகம் சுண்டிப் போய் விட்டது; முன் வைத்த காலைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டு அவர் திகைத்து நின்றார்" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 280) என்று வரும் பகுதி இதனைப் புலப்படுத்தும். நாராயணன், கோபாலன் போன்ற இளந்தலைமுறையினர் நகர வாழ்க்கை, ஆங்கிலக் கல்வி, ஐரோப்பிய பண்பாட்டு மரபுத்தாக்கம் காரணமாக இவைகளை மூட நம்பிக்கைகளாக இனங்கண்டு எதிர்த்து, இவற்றை அடியோடு களைந்து சீர்திருந்த எண்ணுகின்றர். ஐயாவையர், அவர் மனைவி சுப்பம்மாள் உள்ளிட்ட மூத்த தலைமுறையினர் மூட நம்பிக்கை-களை விடாப்பிடியாகக் கொண்டு வாழ்ந்தனர். வீட்டிற்கு வந்தவனுக்கு உணவு தராமல், தாம் மட்டும் உண்ணுவது அநாகரிகமானது என இளைஞர் எண்ண, ஆசாரக் குறைவு என மூத்தோர் எண்ணுகின்றனர்; மனைவியையும் உடன் அமர்த்திக் கொண்டு கணவன் மனைவி, இரு-வருமாகச் சாப்பிடுவது ஆசராக்கேடு என்பதை மூடநம்பிக்கையாக வைத்திருந்தனர்; இருவரும் சேர்ந்துண்பது ஆங்கிலேயர் நாகரிகம் என ஏசினர், மூத்த தலைமுறையினர். இதையும் இளந்தலைமுறையினர் எதிர்க்கின்றனர். நாராயணனும் பத்மினியும் சேர்ந்தே உணவு உண்பதாகக் காட்டப்படுகிறது. இதற்குக் காரணம், அடுப்படியில் சமைப்பது பெண் மட்டுமே செய்ய வேண்டிய பணி என்று வைத்துள்ள நடைமுறையே தவறு என்ற கொள்கை உடையவனாக நாராயணன் உள்ளான். "பிள்ளை பெறுவதையும் மடைத்தொழிலையும் தவிர வேறொன்றுக்கும் யோக்கியதையில்லாமல் பெண்களை முழு மூடர்களாக வைத்திருப்பதனால் தான் இப்படியாகிறது" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 285) என்று மிகச் சரியாக இந்த மூட நம்பிக்கையின் ஆணி-வேரை இனங்காட்டுகிறார் அ. மாதவையா. வாழ்க்கை அமைப்பில், பெண் கல்வி கற்று அலுவலுக்குச் சென்றால், அடுப்பு வேலைகளையும் கணவன் மனைவி இருவரும் சேர்ந்து பகிர்ந்து செய்யலாம். அல்லது, பொருளாதார வசதி இருப்பின் சமையல் செய்ய ஆளை வைத்துக் கொள்ளலாம் என்று அந்த நாட்களிலேயே இந்தச் சீர்கேட்டிற்கு ஏற்ற மாற்று வழியையும் அவர்

கூறியுள்ளார். அப்போது கணவன் மனைவி இருவரும் சேர்ந்து அமர்ந்து உண்ணுவது ஆசாரக் குறைவு என்னும் மூட நம்பிக்கை தானே நீங்கி விடும். தனிமனித ஒழுக்கத்தையும் பிற மனிதர்களை மதித்து நடத்துவதை யுமே உயர் ஆசாரமாக அவர் இதில் வலியுறுத்தியுள்ளார்.

நோய் தீர்க்கும் மருத்துவமுறைகளில் கடைப்பிடிக்கப்பட்ட மூட நம்பிக்கை சார்ந்த பழக்க வழங்கங்களை முத்து மீனாட்சி, பத்மாவதி சரித்திரம், தில்லைக் கோவிந்தன் நாவல்களில் அ. மாதவையா காட்டியுள்ளார். பத்மாவதி சரித்திரம் நாவலில் கோபாலனின் மனைவி கல்யாணி, இருபது வயதிற்குள் மூன்று முறை நரம்புத் தளர்ச்சிக்கு ஆளாகித் துன்புறுகிறாள். மூத்த தலைமுறையினர் ஆங்கில முறை வைத்தியஞ் செய்யாமல், தேவதை செய்யும் உபாதை என மூட நம்பிக்கையில் சிக்கி மாந்திரிகம், நாட்டு வைத்தியம் என்ற பல முறைகளையும் கையாண்டு அவளைத் துன்புறுத்திச் சிறுகச் சிறுகச் சாகடிக்கின்றனர். பிரம்படியும் மந்திரிப்பதும் மாறி மாறிப் பழமையான வைத்திய முறைகள் அனைத்தையும் மூடத்தனமாகச் செய்கின்றனர். இதன் உச்சகட்டமாக தாகமெடுத்து நாவறண்டு நோயாளி குடிநீர் கேட்கும்போது கூட நீர்தர மறுத்து விடுகின்றனர். "ஓய்வொழிவில்லாமல் கல்யாணி தலையணை மேல் தன் தலையை இருபுறமும் மாற்றி மாற்றிப் புரட்டிக் கொண்டும், அடிக்கடி நாவை வெளியே நீட்டிச் சுழற்றித் தண்ணீர் கேட்டுக் கொண்டிருந்தாள். வைத்தியன் ஒரு துளிநீர் கூடக் கொடுக்கப்படாதென்று சொல்லிவிட்டதால் ஒருவரும் தண்ணீர் கொடுக்கவில்லை" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம். ப. 292) என்று வருமிடம் இதைக் காட்டும். மருத்துவப் படிப்பு படித்துப் பட்டம் பெற்றிருந்தும் கூடக் கோபாலனும் மூட நம்பிக்கை காரணமாகத் தொடக்க நிலையிலே ஆங்கில மருத்துவரின் அறிவுரைப்படி மருத்துவமனையில் சேர்ந்து நோயைக் குணப்படுத்த முன்வராது தயங்குகிறார். "தாம் நன்கு படித்திருந்தும் ஐரோப்பியர்களுள் மிகப்பெரிய உத்தியகோஸ்தரும் தனவான்களும்கூடத் தங்கள் மனைவிமாரையும் குமாரத்திகளையும் ஆசுபத்திரிக்கு அனுப்புவதை அறிந்திருந்தும், தன் மனைவி விஷயத்தில் அப்படிச் செய்வது, அகௌரவமென்றும் அனுசிதமென்றும் கோபாலையரே எண்ணினார். இவ்விதமான வீண்டம்பங்கள் நமக்குள் இன்னும் பல உண்டு" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 269) என வருமிடம் இதற்கு மிக நல்ல சான்று. மருத்துவமனைக்கு அனுப்புவது தன் கௌரவத்திற்கு இழுக்கு என்பதான வீண் டம்பமும் ஒருவகை மூடநம்பிக்கையே. இதனால் அநியாயமாக ஓர் உயிர் கொல்லப்படுகிறது. இதை எடுத்துரைத்து, இத்தகைய சமூகச் சீர்கேடுகள் அறவே ஒழிய வேண்டும் என அறிவுறுத்தியுள்ளார்.

முத்து மீனாட்சி நாவலில் சிறுமி மீனாட்சி விரைந்து வயதுக்கு வர வேண்டும் என்பதற்காகவும் பருவமடைந்தபின் விரைவில் கருவுறவும் மிகக் கோரமாகவும் அநாகரிகமாகவும் சிகிச்சைகளுக்கு ஆளாக்கப்பட்டுத் துன்புறுத்தப்படுகிறாள். அச்சிறுமிக்கு ஏற்படும் மன, உடல் ரீதியான நோய்களும் துன்பங்களும் 'தேவதா உபாதை' என்று கூறப்பட்டுப் பெரியவர்களால் பற்பல நோய் நீக்க முறைகளுக்கும் ஆளாக்கப்படுவதை ஆசிரியர் விரிவாகக் காட்டியுள்ளார். இத்தகைய மூடநம்பிக்கைகள் அடியோடு நீக்கப்பட வேண்டும் என ஆசிரியர் இதில் வலியுறுத்துகிறார் இக்காட்சிகளில் முத்து மீனாட்சிக்கு - சிறுமிக்கு இழைக்கப்படும் துன்பங்களைப படிக்கும் வாசகர் மனத்தை உறையச் செய்யுமாறு அக்கால மூட நம்பிக்கைகளை அ. மாதவையா படைத்துள்ளார்.

தில்லைக் கோவிந்தன் நாவலில் கருப்பை துன்பத்தால் அல்லல்பட்டுத் தீராத தலைவலியுடன் துடிக்கும் பெண்ணுக்கு மருத்துவ சிகிச்சை தராமல், பூசை - சடங்கு செய்யும் பெரியோர்களின் மூடநம்பிக்கைகளை அ.மாதவையா காட்டுகிறார். அத்துடன் மகப்பேறு காலத்தில் துன்புறும் நிலையில் பெண்ணுக்கு மருத்துவம் பார்க்க ஆண் மருத்துவரை அனுமதிக்க மறுப்பதையும் பெண் மருத்துவச்சி கீழ்ச்சாதி கிறித்தவப் பெண் என்பதால் அழைக்க மறுத்து வாளாவிருக்கும் பெரியோர்களை அ. மாதவையா காட்டுகிறார். "என் தாய்க்கு நான் பிறக்கும் போது அபாயகரமான நிலைமை ஏற்பட்டபோதும், 'அப்பாத்துகரி' யையோ மருத்துவச்சியையோ உதவிக்குக் கூப்பிடாததற்குக் காரணம் 'அப்பாத் துக்கரி' புருஷனாயும், மருத்துவச்சி கீழ்ச்சாதி கிறிஸ்தவச்சியாயும் இருந்தது தான் என்று பிற்பாடு நான் கேள்விப்பட்டேன்" (அ. மாதவையா, தில்லைக் கோவிந்தன், ப. 16 – அதில் வரும் 'அப்பாத்துக்கரி' - apothcary என்ற ஆங்கிலச் சொல்லின் அதே ஒலியுள்ள தமிழ் வடிவம்) என்று வருமிடம் இதைக் காட்டும். அறியாமையும் பழமைப் பிடிப்பான மூட நம்பிக்கைகளுமே இவற்றின் அடிப்படை ஆதாரம் என்று அ. மாதவையா காட்டுகிறார். புதிய அறிவியல் வளர்ச்சிக்கு ஏற்ப ஆங்கில மருத்துவமுறைகளை உடனடியாகக் கைக்கொண்டு மனித உயிர்களைக் காப்பாற்ற வேண்டும் என்பதே இதன் வழி அவர் முன்வைக்கும் சீர்திருத்த சிந்தனையாகும். மனிதனை அவர் பெரிதும் போற்றுகிறார். மனித குல மேன்மைக்கும் முன்னேற்றத்திற்கும் உதவாத, எதிரான அனைத்து மூட நம்பிக்கைகள், வழக்கங்களை அவர் கடுமையாகச் சாடுகிறார்.

**குடும்பப் பொருளாதார நிலை**

அந்த நாட்களில் கிராமத்திலும் நகரத்திலும் வாழ்ந்த பல்வேறு தரப்பு மக்களின் குடும்பப் பொருளாதார நிலையைத் தம் படைப்புக்களில்

மாதவையா காட்டியுள்ளார். ஆடம்பரச் செலவு, படாடோபமான வீண் செலவு முன்னோர் சேர்த்து வைத்துள்ள சொத்துக்களை அழிப்பது, அனுபவம் ஏதுமின்றிப் புதிய தொழில்களில் ஈடுபட்டுத் தம் கைப்பொருளை இழப்பது, புலன் இன்ப நுகர்விற்காகப் பொருளை மிகுதியாகச் செலவழிப்பது என்பன போன்ற சீர்கேடுகளைத் தம் படைப்புகளில் அ. மாதவையா காட்டியுள்ளார். இச்சீர்கேடுகளைச் செய்பவர்களாக மூத்த தலைமுறையினர் உள்ளனர். கல்வியறிவும் நகர வாழ்வும் ஆங்கில நாகரிகமும் இளையதலைமுறையினரை நவீன வாழ்க்கையில் பண்படுத்தியதால் அவர்களிடம் இத்தகைய சீர்கேடு காணப்படாததையும் ஆசிரியர் காட்டுகிறார். இச்சீர்கேடுகள் அடியோடு நீக்கப்பட வேண்டும் என அவர் வலியுறுத்துகிறார்.

நடப்பியல் நாவலாசிரியராக அ. மாதவையா வாழ்ந்த காலத்தில் புதிய தொழில் வளம் பெருகி, அவைகளில் பணியாற்றிட கிராமங்களை விட்டு நகரங்களில் பலர் குடியேறினர். நகர நாகரிக வாழ்க்கை, ஆங்கிலக் கல்வி, புதிய வேலை வாய்ப்புகள் காரணமாக ஈட்டிய செல்வ வளமிக்க வாழ்வு என்பன காரணமாகத் திருமணம் பேசப்படும்போது மிகுதியாகப் பெண் வீட்டாரிடம் வரதட்சணை கேட்டுப் பெற்றது, ஆடம்பரமான படாடோபமான திருமணச் சடங்குகள் அவைகளை ஒட்டிய கேளிக்கைகள் ஆகியவைகளில் செல்வத்தைச் சீரழித்ததை அவர் தம் படைப்புக்களில் காட்டியுள்ளார். ‘பத்மாவதி சரித்திரம்’ நாவலில் கோபாலன் திருமணம், பெண் வயதுக்கு வந்த நிகழ்ச்சிக்குச் செய்யப்படும் சடங்கு, பத்மினியின் திருமணச் செலவு என்பவற்றை ஆசிரியர் விரிவாகக் காட்டி, அந்த நாளைய அந்தணர் குடும்ப, ஆடம்பரச் செலவுகளை, சீர்கேடுகளாக நமக்குக் காட்டுகிறார். கோபாலனின் திருமணம் பற்றி, மாற்று தபால் வைத்து அழைக்கப்பட்டவர் போல், வெகு தூர ஊர்களிலுள்ள வைதீகப் பிராமணர்களுங்கூடப் பண்ணை சேஷையர் வீட்டுக் கலியாணமென்று கேள்வியுற்று வந்திருந்தார்கள். அன்று அவ்வூரிற் சேஷையர் வீடும் அவர் தனவானாயிருக்கும் பெருங்குற்றத்திற்காகப் பகை பாராட்டும் இரண்டொரு பொறாமைக்காரர் வீடுகளுந் தவிர வேறொருவர் வீட்டிலுஞ் சமையற்புகை கிடையாது." (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 72) எனவும், பத்மி - கிட்டு திருமணச் செலவு பற்றி,

**கலியாணச் செலவு**

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| பந்தல் - | 100 | 0 | 0 |
| பிராமண போஜனம், சர்வாணி - | 500 | 0 | 0 |
| சதிர், மேளம், பாட்டு - | 500 | 0 | 0 |

| | | | |
|---|---|---|---|
| ஜவுளி வகையறா - | 200 | 0 | 0 |
| மாப்பிள்ளை நகை - | 200 | 0 | 0 |
| பெண்ணுக்கு நகை - (மாப்பிள்ளை வீட்டுக்காரர் 300 ரூபாய்க்கு நகை போடுவது தவிர) | 400 | 0 | 0 |
| சில்லறைச் செலவு - | 100 | 0 | 0 |
| மொத்தம் | 2000 | 0 | 0 |

இவ்விதமாக, மாப்பிள்ளை சிரஞ்சீவி கிருஷ்ணயர் சித்திரை மாதம் 7-ஆம் தேதியன்று, சாயங்காலம், மேளதாளம், தாசி முதலிய ஆடம்பரங்களுடன் இறங்கலிலிருந்தே பல்லக்கிலேறி ஊர் பவனியாகக் கலியாணப் பந்தலில் வந்திறங்கினார்" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 60) என்னும் பகுதியும் திருமணத்தின் பொருட்டுச் செலவு செய்யும் ஆடம்பர, படாடோபச் செலவுகளைப் பட்டியலிட்டு ஆசிரியர் காட்டியுள்ளார். இதே போன்று பத்மி என்ற பத்மாவதியின் ருதுமங்கள நீராட்டு வைபவச் செலவையும் ஆசிரியர் எடுத்துக்காட்டுகிறார் : "... ருதுஸ்நானத்தன்று நடந்த ஊர் கோலச் சிறப்பையும் மற்ற சிலவுகளையும் அவர் விரோதிகளும் சிலாகித்தார்கள். அவர் பெண் ஏறி வந்த பூம்பல்லக்கைப் போல அதுவரையில் அவ்வூரில் யாரும் கண்டதேயில்லை. திருநெல்வேலியிலிருந்து மாலைகள் கட்டி வந்து, இரண்டு நாள் இராப்பகலாகப் பல்லக்கு ஜோடித்தார்கள். அக்கம்பக்கம் ஊர்கோயில்களில் தேவதார்ச்சனைக்கே புஷ்பம் கிடையாது... அறுகாத வழிக்கப்பாலுள்ள தென்காசியிலிருந்து புஷ்பம் வந்தது.... என்ன பாட்டு! என்ன முழக்கம்! எத்தனை பேர்கள் சாப்பாடு! எத்தனை தீவர்த்தி, மத்தாப்பு, என்ன வாணவேடிக்கைகள்! அடா அடா! பெரிய சுப்புதான் பைரவி ராகத்தை என்ன பிரம்மானந்தமாய் வாசித்தான்! இன்று நினைத்தாலும் காதில் தேன் பொழிந்தாற் போலிருக்கிறதே ....." (பத்மாவதி சரித்திரம், பக். 171, 172) என வரும் பகுதிகள் ஆடம்பரச் செலவையும் படாடோபத்திற்காகவும் ஊர்ப் பெருமைக்காகவும் கடன் வாங்கியும் நிலத்தை அடமானம் வைத்தும் விற்றும் செலவு செய்யும் பழக்கத்தை எடுத்துக்காட்டும். ஊரார் மெச்ச வேண்டும் என்பதற்காகவும், ஒரே மகள் என்பதற்காகவும் தன் மனைவி சொன்னதற்காகவும் இச்சடங்கை இவ்வளவு விமரிசையாகச் செய்தார். அத்துடன் கூட, வியாபாரத்தில் தமக்கு ஏற்பட்டிருந்த சமீப கால அந்தஸ்து எவ்வளவு என்பதை ஊராருக்குப் பறை சாற்ற வேண்டியும் ஆடம்பரமாக அவ்விழாவைக் கொண்டாடினார் எனவும் நாவலாசிரியர் காட்டுகிறார். அக்கால அந்தணர் சமூகத்தில் இவ்வாறான வீண் ஆடம்பரங்களும் படாடோபமான செலவுகளும் காணப்பட்டதைக் காட்டும் ஆசிரியர் இவை மாற வேண்டும்

என இளைஞர்களைக் கொண்டு வலியுறுத்துகிறார். 'அவனாலான பரிகாரம்' என்னும் சிறுகதையில் படித்த இளைஞனான சாமிநாதன், தனக்குத் தெரியாமல் தன்னுடைய தந்தை, பெண் வீட்டாரிடம் வரதட்சணையும் சீருமாக அதிகம் வாங்கியதை அறிந்து, வருந்தி அந்த பாவத்திற்குப் பரிகாரம் செய்ய விரும்புவதாகவும் அது நிறைவேறும் வரை - வாங்கிய கடன் (வரதட்சணை) முழுவதும் கொடுக்கப்பட்டுத் திருப்பிச் செலுத்தப்படும் வரை - தான் ஒரு அடிமை என்பதாகவும் அவன் கூறுகிறான். "இந்த வரதக்ஷிணை வழக்கம் சாஸ்திர விரோதமென்று கூடச் சொல்லுகிறார்கள். ஒரு பெண்ணில் தகப்பனார் தனவானாயிருந்து அந்தப் பெண்ணுக்கு ஸ்ரீதனமாக, அவராகவே ஏதாவது கொடுத்தால், அது ஒரு தினுசாயிருக்கும். இப்பொழுது சம்பத்துள்ளவர்கள் சீரென்று வாரிக்கொடுக்கும் பணத்தை, அப்படி ஏதாவது ஏற்பாடு செய்தால், அது பிற்காலத்தில், அந்தப் பெண் வைதவ்யம் அடைந்து புனர் விவாகம் செய்து கொள்ள விரும்பினாலும் அல்லது அநாதையாகி விட்டாலும், அல்லது வேறெவ்வித அசந்தர்ப்பங்களுக்குள்ளாக நேரிட்டாலும், அந்தப் பெண்ணுக்கு உதவத் தக்கதாயிருக்கும். ஆனால், இப்போதைய வழக்கப்படி, பிள்ளை வீட்டுக்காரர் பணம் பறிப்பது கொள்ளைக்குச் சமானமே... சரியாய்ச் சொல்லுமிடத்து, என் தகப்பனார், உன் தகப்பனாரிடம் இத்தனை ரூபாய் வாங்கிக் கொண்டு என்னை விற்றிருக்கிறார் என்றே சொல்ல வேண்டும்" (அ. மாதவையா, குசிகர் குட்டிக்கதைகள், 'அவனாலான பரிகாரம்', பக். 19-20) என்று வருமிடம் இதற்கு நல்ல சான்று. படித்த இளைஞர்கள் வரதட்சணை, ஆடம்பரச் செலவு போன்ற சீர்கேடுகளை எதிர்த்து நிற்க வேண்டும் என இதன் வழி அ. மாதவையா வலியுறுத்துகிறார். காலத்திற்கு ஒவ்வாத, சீர்கேடான துராசாரமான ஒன்று. தீமை பயக்கிறது என அறிந்தும், தீமையை எதிர்க்கும் ஆற்றலையும், துணிவையும் கல்வி தர வேண்டும் என அவர் வலியுறுத்துகிறார். "இந்தப் பரிகாரத்தைக்கூட நான் செய்யாவிட்டால் நான் ஒரு ஆண் பிள்ளையல்ல; என் படிப்பும் வீணே" எனவும், "..தங்களைத் திருப்தி செய்யும் விஷயத்தில்கூட, என் மனசாக்ஷிக்கு நேர் விரோதமாய் நடந்தேனானால், அது அந்தக் கல்வியையே முழுதும் பொய்ப்பித்த தாகும்" (அ. மாதவையா, குசிகர் குட்டிக் கதைகள், 'அவனாலான பரிகாரம்', பக். 21, 24) என்னும் சாமிநாதனின் கூற்றுக்களாக வரும் பகுதிகளில் கல்வியின் பயனை - தீமையை இனங்காண்பது தீமையை எதிர்ப்பது, மனசாட்சிக்கு ஏற்ப நியாயமாகவும் நேர்மையாகவும் நடப்பது தான் என்று - அழுத்தமாகக் காட்டியுள்ளார்.

அந்த நாளைய திருமணத்தில் நடக்கும் ஆடம்பரச் செலவுகளையும் படாடோபமான பகட்டுக்களையும் மிக விரிவாகப் புது மாதிரி கல்யாணப் பாட்டு நூலில் கூறுகிறார்.

'இராத்திரிக்குச் சதுர் மேளம் இந்த ஊர்தானோ
மாத்தூர் அலர் மேல் மங்கை வந்திருக்காளோ
வீணையுண்டோ? பிடிலுமுண்டோ? மிருதங்கம் உண்டோ
வேணுகோபா லையர் புல்லாங் குழல் வேணுமே
பட்டணப் பிரவேசமும் பல்லக்கில் தானோ
திட்டமாக மோட்டர்காரும் வந்து சேருமோ

(இந்து தாசன் (அ. மாதவையா), புது மாதிரி கல்யாணப்பட்டு, ப. 9, 17-19) என்று வரும் பகுதிகள், பெண் வீட்டாரை வலியுறுத்திக் கட்டாயமாகக் கேட்டு வாங்கும் ஆடம்பரச் செலவுகளைக் காட்டும். எளிமையும் மனம் ஒருமித்த காதலும் அன்புமே வேண்டுமே அன்றி, வெளிவேடங்கள் தேவையில்லை என அவர் வலியுறுத்துகிறார்.

**செல்வத்தை இழத்தல்**

அக்காலச் சமூக அமைப்பில் மரபு வழியாக வந்த முன்னோர் தேடி வைத்த செல்வத்தை, நில உடைமையாளர்களான அந்தணர்களும் மறவர்களான ஜமீன்தார்களும் பல்வேறு வழிகளில் அழித்தனர் என்று அ. மாதவையா தம் படைப்புக்களில் காட்டினார். பத்மாவதி சரித்திரம் நாவலில் வரும் அரியூர்ப் பண்ணையார் சேஷையர், முத்து மீனாக்ஷி நாவலில் வரும் சங்கரையர், விஜயமார்த்தாண்டம் நாவலில் வரும் புலிமலை ஜமீன் உடைமையாளரான வீரசங்கிலித் தேவர் ஆகியோர் ஆடம்பரச் செலவுகளுக்காகவும் தம்முடைய புலன் இன்பங்களுக்காகவும் தம் செல்வத்தையெல்லாம் செலவு செய்து கடனாளியாகின்றனர். பத்மாவதி சரித்திரம் நாவலில் சேஷையர், வயதான காலத்தில், தம்முடைய பிள்ளைகளின் மணவயது காலத்தில் தம் புலனின்பத்திற்காக ஏராளமான பணத்தைச் செலவு செய்து நஷ்டப்பட்டு இளம் பெண்ணை மணந்து கொண்டு வருகிறார். முதலில் ஓர் இளம் பெண்ணை மணக்கத் திட்டஞ் செய்து ஐயாயிரம் வரை செலவு செய்து, அவமானமும் பொருள் நட்டமும் பட்டு, நிச்சயிக்கப்பட்ட பெண் இறந்து போனதாகச் சொல்லி ஏமாற்றப்படுகிறார். "... செலவழித்த ரூபாய் ஜன்மாந்தரக் கடன், சிரார்த்தமாவது லாபமாச்சுதே. எழுந்திரும் போவோம்" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 100) என்று பேசினாலும், அடுத்த ஊரான சிட்டூருக்குப் போகும் வழியில் எல்லாம் தம்முடைய இறந்து போன மூத்த மனைவியின் அழகையும் பண்பு நலன்களையும் எண்ணித் தாமடைந்த அவமானத்தையும் எண்ணி மனம் வருந்தினாலும் அடுத்து உடனே

கமலாம்பாள் என்ற பெண்ணை இரண்டாயிரம் ரூபாய் செலவழித்து மணந்து கொண்டு விடுகிறார். மனைவி கமலம், அவள் தாய் காமாட்சி அம்மாள் சகிதம் அரியூர் வந்து சேருகிறார். இத்திருமணம் காரணமாக அவர் குடும்ப அமைப்பில் சிக்கல் ஏற்படுவதையும், அவருக்குப் பிள்ளைகள் கோபாலன், சங்கரன், காவித்திரி பேரில் அன்பும் பாசமும் குறைவதையும் இளம் வயது விதவையான சாவித்திரிக்கு அரியூரில் வீட்டில் இருக்க முடியாத நிலை ஏற்பட்டுச் சென்னை சென்று தம்பி கோபாலனுடன் வாழ வேண்டிய கட்டாயம் ஏற்படுவதையும் நாவல் காட்டுகிறது. வயதான மனிதன் புலனுணர்விற்காகச் செல்வத்தைச் செலவு செய்து தனக்கும் குடும்பத்திற்கும் தீராத துன்பத்தைத் தேடிக் கொள்வதை நாவல் விரிவாகக் காட்டுகிறது.

'முத்து மீனாட்சி' நாவலில் சுந்தரம் அய்யரும் தம் திருமணத்தின் பொருட்டுத் தம்முடைய செல்வத்தை விரயமாக்குவது காட்டப்படுகிறது. "என் தகப்பனார் அதற்குச் சம்மதித்து, முகூர்த்தம் வைத்தபின், தனக்கானால் பெண் விலையென்ன என்று கேட்க, அவர்கள் சமயத்தைத் தப்பவிடக் கூடாதென்று எண்ணி, விசனத்தையடைந்த தங்கள் பெண் மனத்தைத் தேற்றி, தங்களுக்கு இரண்டாயிரம் ரூபாய் கொடுத்து விட வேண்டும் என்றும், தங்கள் பெண் பெயருக்கு அவ்வளவு விலையுள்ள நிலங்களை அப்படியே எழுதி வைத்திட வேண்டுமென்றும் சொல்ல, அப்படியே அதே முகூர்த்தத்தில் மருமகளாகவிருந்தவள் மனைவியாகி விட்டாள்" (அ. மாதவையா, முத்து மீனாக்ஷி, ப. 3) என வருமிடம் இதைக் காட்டும். இந்த நாவலிலும் குடும்ப அமைதி கெடவும் உறவுகள் கெட்டுப் போகவும் பொருள் நட்டம் ஏற்படவும் காரணமாகிறது இத்திருமணம். வயதான காலத்தில் புலன் இன்பத்திற்காகச் செலவழித்த பொருள் நட்டத்தை ஏற்படுத்துவதுடன் குடும்ப அமைதியையும் கெடுத்து விடுகிறது. விஜயமார்த்தாண்டம் நாவலிலும் வீரசங்கிலித்தேவர் சிவகாமி என்ற இளம் பெண்ணை அடைவதற்காக ஏராளமாகப் பொருளைச் செலவு செய்வதுடன் ஜமீன் பேரில் கடன் வாங்குகிறார் என்றும் நாவலாசிரியர் காட்டுகிறார்.

**புதிய தொழில்களில் பணத்தையிட்டு நட்டமடைதல்**

தொழில் பெருக்கம் ஏற்பட்ட அன்றைய சூழலில், கிராமத்தில் இருந்த சிறு நில உடைமையாளர்களான அந்தணர் சிலர், அருகிலுள்ள நகரங்களில் சென்று முன்பின் அனுபவமில்லாத தொழில்களில் - வியாபாரத்தில் - ஈடுபட்டுத் தங்கள் பொருளை முதலீடு செய்து நட்டம் அடைகின்றனர் என்று அ. மாதவையா நாவல்களில் காட்டுகிறார். முன் பின் தெரியாதவர்களுடன் கூட்டுச் சேர்ந்து தொழிலில் பொருளை இழந்து, அடமானமாகவோ விற்பனை செய்தோ மரபுவழியாக வந்த தம்முடைய

நிலங்களை இழந்து நட்டத்திற்கு ஆளாகின்றனர். பத்மாவதி சரித்திரம் நாவலில், பத்மாவதியின் தந்தை தமக்குத் தெரியாத மரக்கடை வணிகத்தில் கூட்டுச் சேர்ந்து, முதலீடு செய்து, தம் சொத்துக்களை அடமானம் வைத்து, கூட்டாளியால் ஏமாற்றப்பட்டு நட்டமடைந்து தீராத கடனுக்கு ஆளாவதாகக் காட்டப்பட்டுள்ளது. முத்து மீனாட்சி நாவலில் சுந்தரம் அய்யர் கொல்லம் சென்று, வணிகத்தில் ஈடுபட்டு எஞ்சிய வயலையும் வீட்டையும் விற்றுப் பொருளை இழக்கிறார் என்று காட்டப்படுகிறது. இவ்வாறு, மிகுதியாகப் பொருள் சேர்க்கும் ஆசை கொண்டு, மரபான செல்வத்தை முதலீடு செய்து முன் அனுபவமில்லாத தொழிலில் நட்டமடைவதை அ. மாதவையா காட்டியுள்ளார். இதன் வழி, இப்படிச் செல்வம் சேர்க்கும் முறை கொண்டாடத்தக்கது அன்று என அவர் வலியுறுத்துகிறார். நேர்மை தவறிப் பொருளீட்டி வாழும் முறையை அ.மாதவையா கண்டித்துள்ளார்.

'பத்மாவதி சரித்திரம்' நாவலில் வரும் சிறுகுளம் சீதாபதி அய்யர், இறங்கல் சப் மாஜிஸ்டிரேட் நரசிம்ம முதலியார், கால்வாய் சூப்பரிண்டென்ட் நாகமையர், வக்கீல் அண்ணாசாமி ஆகியோர் வாழ்வில் பொருள் ஈட்டிய நெறி தவறிய முறைகள் கொண்டாடத்தக்கன அல்ல என்று காட்டுகிறார். ஊழல், இலஞ்சம், ஒழுக்கக்கேடு ஆகிய குற்றங்கள் செய்து பொருளீட்டியவர்கள் தண்டனை பெறுவதாகவும் அ. மாதவையா காட்டியுள்ளார். அந்நாளில் நீதிமன்ற ஊழியர்கள், வழக்கறிஞர்கள், காவல்துறையினர் பிறரை ஏமாற்றிப் பணம் பறித்த முறைகளை விஜயமார்த்தாண்டம் நாவலில் காட்டியுள்ளார். அந்த இயலுக்கே (அதிகாரத்திற்கே) 'எரிகின்ற வீட்டில் பிடுங்கினது இலாபம்' எனப் பெயரிட்டுள்ளார்.

"1. வது வக்கீல் : ஏதோ எங்களாலானதைச் செய்து விட்டோம்; பணம் முதலிற் பேசியபடி உத்திரவாய்விட்டது, பெற்றுக் கொண்டோம்.... ஏற்றுக் கொண்டதை நிறைவேற்றினால் தாங்களே கஷ்டமறிந்து வெகுமதி செய்வீர்களென்று நாங்கள் மறுபேச்சுப் பேசவில்லை.

சப்பாணி : ..... அதற்குத்தான் எண்ணாயிர ரூபாய் கொடுத்தாச்சே; இன்னும் என்ன வேணும்? சமீனையே எழுதித்தந்து விடுவார்களா?

1 வது வக்கீல் : .... ஏதோ மஹாராஜா அவர்கள் சந்தோஷப்பட்டு ஒரு துரும்பைத் தந்தாலும், வெறுந்தாம்பூலம் தந்தாலும் வாங்கிக் கொள்ள இஷ்டமே; அவர்கள் கையாலே தருவதுதான் பெரிது -

கைப்பெட்டி வந்தவுடன், ஜமீன்தார் தாம்பாளத்தில் வெற்றிலை பாக்குடன் ஒரு ஐநூறு ரூபா நோட்டையும் வைத்து ஒவ்வொரு வக்கீலுக்கும் கொடுத்தார். அதை அவர்கள் வெகு வணக்கமாய்ப் பெற்றுக் கொண்டு, ரூபா செலவழிந்து போய் விடுமாதலால் எப்பொழுதும்

ஞாபகமிருக்கும்படி தங்களுக்கு ஏதாவது ஒரு அடையாளம் கொடுக்கும் படி அவரை வெகு சாதுரியமாய் வேண்டினராக ஜமீன்தார், ஒருவருக்கு ஒரு தங்கக் கடிகாரமும் சங்கிலியும், மற்ற இருவருக்கும் ஒவ்வொரு வைர மோதிரமும் கொடுத்தார். அத்துடன் நில்லாது, முதல் வக்கீல் தான் வீடு கட்டப் போவதாகவும் அதற்கு பத்து வண்டி தேக்குமரம், கல்தூண்கள் வேண்டும் எனவும், இரண்டாம்- வக்கீல் தம் மகள் திருமணத்திற்குத் தேவையான பந்தல் சாமான்களையும் பத்து வண்டி நெல்லையும் வேண்டிப் பெற்றுக் கொண்டனர்.... மூன்றாம் வக்கீலும் போலீஸ் இன்ஸ்பெக்டரும் அவரை மிரட்டிப் பதினாயிரம் ரூபாய்க்கு வழி செய்து கொண்டனர்" (அ. மாதவையா, விஜயமார்த்தாண்டம், பக். 170 – 171, 172, 177) என்று வரும் பகுதிகளில் வக்கீல்களும் காவல்துறை அதிகாரியும் ஜமீன்தாரிடம் இருந்து பணம் பெறும் முறையை ஆசிரியர் கண்டிக்கிறார். இதனை ஆசிரியரே, "நம் உத்தியோகஸ்தரிற் பலர், பேராசையால் ஏழைகளையும் குற்றமற்றோரையும் ஏனையோரையும் துன்புறுத்திப் பரிதானம் வாங்குகின்றனர். தாம் பெறும் கிரமமான சம்பளத்துக்குத் தக்கபடி சிரமப் பட்டுழையாததுமின்றி, நியாயத்தைவிட்டுப் பணம் திரட்டுகின்றனர்" (விஜயமார்த்தாண்டம், ப. 176) என்று வெளிப்பட கண்டிக்கிறார். நடப்பியல் நெறி படைப்பாளியான அவர், உயர்கல்வி கற்று, அரசு அலுவலகங்களில் உயர் பொறுப்புக்களைப் பெற்றுப் பணிபுரிவோர் நேர்மையாகப் பொருளீட்டிப் பிறருக்கு முன் மாதிரியாகவும் ஏழை எளிய மக்களுக்கும் சாதாரண மக்களுக்கும் உதவியாகவும் இருந்து நேசக்கரம் கொடுத்து பாதுகாக்க வேண்டும்; மாறாகத் தன்னல வேட்கையும் பொருள் குவிக்கும் மனமும் கொண்டு ஏமாற்றி வாழ்ந்தனர் எனக் காட்டியுள்ளார். தனி மனிதனுடைய பொறுப்பும் ஒழுக்கமும் நேர்மையும் உழைப்பும் பிறருக்கு உதவி செய்யும் மனமும் சமூக மேன்மைக்கு உதவும். மாறாக, கல்வி கற்று அரசு நீதிமன்றம், காவல் துறை அமைப்புக்களில் உள்ளோர் இப்படிச் சீர்கேடர்களாக விளங்குவதை நாட்டிற்குப் பெருங்கேடாக அவர் எண்ணுகிறார். 'தில்லைக் கோவிந்தன்' நாவலிலும், காவல் துறை, நீதித் துறையில் காணப்படும் சீர்கேடுகளை அவர் மிகக் கடுமையாகச் சாடுகிறார். இவற்றிக்கு மாற்றாக, தனி மனித முயற்சியால், படித்து, அலுவல் பார்த்து நேர்மையாக வாழும் வாழ்வை, குறிக்கோள் நிலையாகக் கொண்டு நாராயணன் படைப்பு மூலம் (பத்மாவதி சரித்திரம்) காட்டியுள்ளார். அதே நாவலில் வரும் கோபாலன், தில்லைக் கோவிந்தன் நாவல் கோவிந்தன், அவனாலான பரிகாரம் சிறுகதையில் வரும் சாமினாதன் போன்ற இளைஞர்களைக் கொண்டு, உழைத்துப் பொருளீட்டி, நேர்மையாக வாழும் வாழ்விற்கும் அவ்வாறு ஈட்டிய செல்வத்திற்கும் அதன்வழி ஒருவன் அடையும் சமூகத் தகுதிக்கும் என்றும் அழிவில்லை என்பதை அ. மாதவையா நிறுவுகிறார். இவ்வகை நடைமுறையைக் கொள்ளத் தக்கதும் பின்பற்றத்தக்க முன்மாதிரியாகவும் விளங்கக் கூடியது என மிகச் சரியாக அவர் இனங்காட்டுகிறார்.

அ. மாதவையாவில் ஆளுமையின் வெளிப்பாடாகவும் சொந்த வாழ்க்கையின் பிரதிபலிப்பாகவும் இதைக் கொள்ளவேண்டும். அவர் தம்முடைய அலுவலக வாழ்வில் ஒரு போதும் தம் மேலதிகாரிகளின் நன்மதிப்பைப் பெறுவதற்காகவும் தம்முடைய பதவி உயர்விற்காகவும் வேண்டி, லஞ்சம் கொடுத்ததுமில்லை; தம்மிடம் பணியாற்றிய கீழ் ஊழியர்களிடமும் எதையும் பெற்றதுமில்லை. மிகுந்த நேர்மையும் கண்டிப்பும் இடையறவு படாமல் கடமை ஆற்றும் திறனும் யாருக்கும் அஞ்சாமல் துணிவுடன் செயற்படும் உழைப்பும் கொண்டவராக அவர் விளங்கினார். இத்தகைய ஆளுமைத்திறமிக்க ஒரு மனிதரின் சிந்தனையில், சமூகச் சீர்கேடுகளை அனைத்து நிலைகளிலும் போக்க வேண்டும் என்ற எண்ணமும் முனைப்பும் வெளிப்பட்டதில் வியப்பு ஏதுமில்லை.

**கிறித்துவ மதமாற்றமும் அதன் சிக்கல்களும்**

அ. மாதவையா படைப்புக்கள் படைத்த காலம் கிறித்தவ மதம் வேகமாகப் பரவிய காலம். இந்து சமயத்தில் காணப்பட்ட சாதிக் கட்டுப்பட்டால், மேலே கிளம்பமுடியாத, ஒடுக்கப்பட்ட, அடிமட்டத்து மக்கள், தாழ்ந்த இனத்து இந்துக்கள் கிறித்தவமதம் மாறிய நிகழ்ச்சிகள் நிறைய நடந்தன. பிரம்மசமாஜம், ஆரியசமாஜம் போன்ற அமைப்புக்கள், இந்து மதத்திற்கு உள்ளேயே இருந்து, அதன் சீர்கேடுகளைப் போக்க வேண்டும் எனவும், அதற்குள்ளேயே சீர்திருத்தங்களைச் செய்து நடைமுறைப்படுத்த வேண்டும் எனவும் முன் வைத்தன. அ. மாதவையா தம் படைப்புக்களில் தம் காலத்துச் சமூக நிலையை நடப்பியல் நெறியில் படைத்துள்ளார். இந்து மதம் விதித்த சாதிக் கட்டுப்பாட்டால், மேற்கிளம்ப முடியாத, தாழ்ந்த சாதி இந்துக்கள் கிறித்தவ மதம் மாறியதை அவர் தம் நாவல்களிலும் சிறுகதைகளிலும் படைத்துள்ளார் மிக விரிவாகவே பத்மாவதி சரித்திரம், முத்து மீனாட்சி, சத்தியானந்தன், கிளாரிந்தா, லெப்டினன்ட் பஞ்சு, தில்லைக் கோவிந்தன் ஆகிய நாவல்களிலும், அது நேர்ந்த விதம் என்ற சிறுகதையிலும் 'தில்லைக் கோவிந்தன் கலவை' தொடர் கட்டுரையிலும் அவர் கூறியுள்ளார். ஆயினும், மதமாற்றம் என்பது சிக்கல்களுக்குத் தீர்வாகாது ; சாதிக் கட்டுப்பாடு என்னும் சீர்கேடு வைதிக இந்து மதத்தைப் போலவே, கிறித்தவ மதத்திலும் காணப்படுகிறது என்னும் கொள்கையை - நடைமுறை உண்மையை - அவர் வெளிப்படுத்தியுள்ளார். புதிய வாழ்வியற் சிக்கல்கள் ஏற்பட்டபோது, இந்து மதம் என்பதனுள் இருந்து, கட்டமைப்பிற்குள் சீர்திருத்தம் செய்ய வேண்டும் அன்றி, அதை விட்டு வெளியேறி, மதமாற்றம் கூடாது என்பதை அ. மாதவையா உறுதியாக நம்பினார். "மதம் மாறுவது - தானா சமூக வாழ்க்கையில் ஏற்படும் இக்கட்டுகளுக்கு மருந்து? மதம் என்ன

கோட்டா? தொப்பியா? இறுக்கினால் மாற்றி விட? அவரவர் நாகரிகத்துக்கும் பயிற்சிக்கும் அஸ்திவாரமாயிருப்பது மதம் தானே" (அ.மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 359) என்று அவர் கூறுவது இதனை வலியுறுத்தும். மேலும், "மத சம்பந்தமில்லாத விஷயங்களையும் மதம் என்று பாராட்டி அபிமானிப்பதால் தான் இப்படிப்பட்ட தர்மசங்கடங்களும் விபரீதங் களும் ஏற்படுகின்றன. அதைச் சீர்திருத்த வேண்டுமேயல்லாமல், மதம் மாறுவதெப்படி.... மதம் அவரவரைப் பொறுத்தது என்று நமக்குள்ளும் ஆக வேண்டும்" என்று வருவதும் அவரின் நிலைப்பாட்டை - மதமாற்றம் சிக்கலுக்குத் தீர்வாகாது என்பதை - நன்கு காட்டும்.

அக்காலத்தில் இந்து மதச் சாதிக் கட்டுப்பாடுகள் காரணமாக அடிமட்டத்துத் தாழ்ந்த சாதியினர் உயர்சாதியினரான அந்தணர் எதிரில் வரவோ, அவர்கள் அருகில் வரவோ அவர்களுக்கு இணையாக அவர்கள் வசிக்கும் தெருக்களில் நுழையவோ அனுமதிக்கப்படாது, தீண்டத்தகாதவர்களாகக் கருதப்பட்டனர். இந்து மதத்தில் இருக்கும் வரைதான் கீழ்ச்சாதி மக்களுக்கு இந்தக் கட்டுப்பாடு. கிறித்தவர்களாக அவர்கள் மதம் மாறிவிட்டால், அவர்களுக்கு இந்தக் கட்டுப்பாடெல்லாம் கிடையாது. இந்துக்களின் இந்த மூடத்தனத்தினால் தான், தாழ்த்தப்பட்ட மக்கள் ஆயிரக்கணக்கில் கிறித்தவ மதத்திற்கு மதம் மாறுகின்றனர் என்று முத்து மீனாட்சி நாவலில் அ. மாதவையா காட்டுகிறார்.

"இவர்கள் உபத்திரவம் பொறுக்க முடியாமல், இவர்கள் சாதிக்கட்டில் மேற்கிளம்ப முடியாமல், கீழ்ச்சாதிக்காரர்கள் ஆயிரக்கணக்காய் கிறிஸ்தவ வேதத்தில் சேருகிறார்கள். உறிந்துவான பறையன்தான் கிட்டவரக்கூடாதே ஒழிய, கிறிஸ்தவன் ஆகிவிட்டால் வரலாம்... உறிந்துக்களது மூடத்தனத்தால் கிறிஸ்தவ மதம் இலாபமடையட்டும்" (அ. மாதவையா, முத்து மீனாக்ஷி ப. 85) என்று வருவது அறியத்தக்கது.

தில்லைக் கோவிந்தன் நாவலிலும் 'தந்தையும் மகனும்', 'குதிரைக்கார குப்பன்' ஆகிய சிறுகதைகளிலும் அந்தணர் முன் இந்துவான தாழ்ந்த சாதியினர் வரமுடியாத சாதிக்கட்டையும், கிறித்தவனாக மதம் மாறியவன் வரக்கூடிய நிலையையும். அ. மாதவையா காட்டுகிறார். 'கண்ணன் பெருந்தூது' சிறுகதையில் நீராடிவிட்டுத் தூய்மையுடன் வரும் அந்தணப் பெண், வழிப்பாதையில் எதிரே வரும் வழிப்போக்கனான தாழ்ந்த சாதியர்னை விலகிச் செல்லுமாறு கூறி ஏசுவதையும் ஆசிரியர் காட்டுகிறார். அந்தணர்களுடன் வேளாளர் போன்ற பிற உயர்சாதியினரும் இவ்வாறே, தாழ்ந்த சாதியினருடன் கலந்து பழகவோ, ஒன்றாக அருகருகே அமர்ந்து உணவு உண்ணவோ ஆயத்தமாக இல்லை என்பதை எள்ளல் சுவையுடன் 'ஏணியேற்ற நிலையம்' சிறுகதையில்

காட்டுகிறார். இவை வழியே, இந்துக்களிடம் காணப்படும் உண்பது, உடுப்பது உறங்குவது போன்ற எல்லாச் செயல்களையும் மதத்துடன் கலந்து பார்க்கும் மூடத்தனத்தால் இத்தகு சீர்கேடுகள் ஏற்பட்டுள்ளன என்று ஆசிரியர் காட்டுகிறார். கல்வியறிவும் கால மாற்றத்திற்கேற்பப் புதிய மரபுகளை வரவேற்று ஏற்கும் பக்குவமும் சாதிக்கட்டுப்பாடுகளை நீக்கும் மனநிலையும் வந்தால்தான் சீர்கேடுகள் நீங்கி முன்னேற முடியும் என்று அ. மாதவையா காட்டுகிறார். மதமாற்றம் தீர்வாகாது எனவும் அவர் காட்டுகிறார்.

வைதிக இந்து மதத்தில் காணப்படும் சாதிக்கட்டுப்பாடுகள், கிறித்தவ மதத்திலும் காணப்படுகின்றன. இதனைச் சத்தியானந்தன், லெப்டினன்ட் பஞ்சு நாவல்களிலும் பத்மாவதி சரித்திரம் நாவலிலும் காட்டுகிறார். பத்மாவதி சரித்திரம் நாவலில் கிறித்தவ மதம் மாறிய தாமஸ் கே. படைப்பு இதை நன்கு காட்டும். தம் மகளுக்கு மணம் பேசும்போது, வரவிருக்கும் மாப்பிள்ளையைப் பற்றி, "தம் மனதுக்கு இசைந்த மாப்பிள்ளையான பீட்டர் சாமுவேலின் சரீரத்திலுலாவும் இரத்தத்தில், சுந்தரர், அப்பர் மரபினோர் இரத்தக் கலப்பிலும், திருநாளைப் போவார், ஏனாதி நாயனார் மரபினரின் இரத்த சம்பந்தமே அதிகம் என்பதை அறிந்தவுடன் காரியம் மேற்போகாது தடுத்து விட்டார்" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப.323) என்று வரும் பகுதி இதனைக் காட்டும். கிறித்தவ மதத்தில் மாறிய பின்னும் சாதிப்பாகுபாடு காணும் மூட நம்பிக்கை இன்னும் போகவில்லை என்பதை இதில் காட்டுகிறார். கோயில் வழிபாடு, ஒன்றாக அமர்ந்து உணவு உண்ணும் பழக்கம் என்பவைகளில் சாதிவேறுபாடு பார்க்கும் மூட நம்பிக்கை கிறித்தவ மதத்திலும் காணப்படுகிறது என்று அ. மாதவையா காட்டுகிறார். "நம்ம பாளையங்கோட்டை, முருகன் குறிச்சியிலுள்ள கிறிஸ்தவப் பிள்ளைமார்களைப் பார். தங்களுக்குக் கீழ்ச்சாதியினராகக் கருதும் கிறிஸ்தவரோடு கொள்வினை, கொடுப்புவினை கிடக்க, பந்தி போஜனம் செய்வதுமே துர்லபம். வடக்கன் குளத்திலே சர்ச்சுக்குள்ளேயே சுவர் வைத்திருக்கிறார்களாம். உண்மை இப்படியிருக்க உறிந்துக்கள் எல்லோரும் கிறிஸ்தவராகிவிட்டால், அப்பால் சுவர்க்கந்தானென்று நினைப்பது தவறே" (பத்மாவதி சரித்திரம், ப. 360) என வருமிடத்தில் கிறித்தவ மதத்திலும் சாதி ஏற்றத்தாழ்வும் தீண்டாமையும் உள்ளன என்பதை ஆசிரியர் அழுத்தமாகக் காட்டுகிறார்.

இந்து மதம் கட்டுப்பாடுகளை விதித்திருந்தபடியால், விதவை மறுமணம், காதல் மணம், கலப்புமணம் நிகழ வாய்ப்புக்கள் இல்லாமலிருந்தன. வரதட்சணை வழக்கம் பெருஞ்சுமையாகப் பெண்களின் திருமணத்தைப் பாதித்தது. இக்காரணங்களால், கிறித்தவ மதமாற்றம் நிகழ்ந்தது என்று சில நாவல்களில் படைத்தார். முத்து மீனாட்சி

நாவலில் இளம் வயது விதவையான முத்து மீனாட்சியைச் சுந்தரேசன் என்னும் இளைஞன் காதலித்து மணம் செய்து கொள்கிறான். அந்தண இனம் அவர்களைச் சாதிநீக்கம் செய்கிறது. சாதி நீக்கமும் புறக்கணிப்பும் இருந்தும் அவர்களிருவரும் அன்பும் உறுதிப்பாடும் கொண்டு அவ்வெதிர்ப்புக்களைப் பொருட்படுத்தாமல் வாழ்கின்றனர் என அ.மாதவையா காட்டுகிறார். சத்தியானந்தன் நாவலில், ஆபிரகாம் சத்தியா, விதவையான கலியாணி கிறித்தவ மதம் மாறிய நிலையில் (ஞானபுஷ்பம் அவள் பெயர்) மணக்கிறான். விதவை மறுமணம் என்ற போதிலும் அவள் கிறித்தவமதம் மாறிவிட்டதால், சமூக எதிர்ப்பு ஏதும் எழவில்லை என ஆசிரியர் காட்டுகிறார். கிளாரிந்தா நாவலில் மராட்டிய அந்தண விதவை கிளாரிந்தாவை காப்டன் லிட்டில்டன் மறுமணம் செய்து கொள்கிறான். பத்மாவதி சரித்திரம் நாவலில் மூன்றாம் பாகத்தில், மனைவியை இழந்த கோபாலன், மருத்துவத் தொழிலில் உடன் பணியாற்றிடும் ஜேன், கே. என்னும் கிறித்தவப் பெண்ணை மணக்க விரும்பி, அதற்காகக் கிறித்தவ மதம் மாறவும் அவன் ஆயத்தமாக உள்ளான் என்று காட்டினாலும் அந்தத் திருமணம் நடைபெற்றதாக ஆசிரியர் நாவலில் காட்டவில்லை. லெப்டினன்ட் பஞ்சு நாவலில், பஞ்சு என்னும் அந்தண இளைஞன் தன்னுடன் மருத்துவப்படிப்பு படித்த கிரேஸ் என்னும் கிறித்தவப் பெண்ணைக் காதலிக்கிறான். ஆனால் மணம் நடந்ததாக நாவலில் ஆசிரியர் காட்டவில்லை. அந்தண இனத்தில் நடைபெறும் விதவை மறுமணத்தைக் காதல் மணமாக அ. மாதவையா படைத்துள்ளார். அவர் காலத்தில் விதவை மறுமணம், காதல் மணம் என்பவைகளை இந்து சமயமும் அந்தணர் இனமும் ஏற்கவில்லை, என்பதை முத்து மீனாட்சி நாவலில், சாதி நீக்கம் என்னும் சமூகத் தடை வழியாகக் காட்டுகிறார். ஆனால், தனி மனிதர்களின் மன உறுதியும் எதிர்த்து நிற்கும் ஆற்றலும் இவ்வெதிர்ப்பைப் புறந் தள்ளிவிடும் என்று அழுத்தமாகக் காட்டுகிறார். கிளாரிந்தா, சத்தியானந்தன் நாவல்களில் கிறித்தவ மதம் மாறியதால் விதவை மறுமணத்திற்கு எதிர்ப்பு, சாதி நீக்கம் என்பது போல – எதுவும் ஏற்படவில்லை எனக் காட்டுகிறார். கிறித்தவ மதத்தில் இத்தகு கட்டுப்பாடு – விதவை மறுமணம் கூடாது என்னும் கட்டுப்பாடு – ஏதுமில்லை என்று காட்டுகிறார்.

விதவை மறுமணம் என்பது சமூகப் பிரச்சினை எனவும் அச்சீர்த்திருத்தம் காலமாற்றத்திற்கு ஏற்ப இயல்பாக வர வேண்டும் எனவும் அ. மாதவையா கருத்து உடையவர். இதற்காகக் கிறித்தவ மதத்திற்கு மதமாற்றம் செய்து கொள்வதை அவர் தீர்வாக ஏற்கவில்லை. மதமாற்றம் தீர்வு ஆகாது எனவும், சீர்திருத்தமே செய்யப்படவேண்டும் எனவும் அவர் வலியுறுத்தினார்.

'அது நேர்ந்த விதம்' என்னும் சிறுகதையில், அந்தணர் குடும்பத்தில் தன் மகளுக்கு வரதட்சணை கொடுக்க முடியாதபோது, பொருளாதார நெருக்கடிக்குத் தீர்வாக கிறித்தவ மதத்திற்கு மாறிவிடலாமா என்று எண்ணுவதாக அ. மாதவையா காட்டுகிறார். " இதையெல்லாம் பற்றி யோசிக்கும் பொழுது, சில வேளைகளில் இந்தப் பாழாய்ப்போன பிராமண சமூகத்தையே விட்டு விலகி, பிரம்ம ஸமாஜத்தையோ, அல்லது கிறிஸ்தவ மதத்தையோ சேர்ந்து விடலாமென்று தோன்றுகிறது" என்று கணவனும் அதற்கு மறுமொழியாக, "நீங்கள் சொல்லும் அந்தச் சமூகத்தார்களுக்குள் ஒருவிதத் தொந்தரவும் கஷ்டமும் இல்லாமலா இருக்கும்" (அ.மாதவையா, குசிகர் குட்டிக் கதைகள், அது நேர்ந்த விதம்", பக். 108, 109) என்று மனைவியும் கூறிக் கொள்வது இதனைக் காட்டும். பொருளாதார வசதி குறைவான நிலையில், வரதட்சணை கொடுக்க முடியாத சூழலில், பிரம்ம சமாஜத்திலோ கிறித்தவ சமயத்திலோ சேர்ந்து விடலாமா என்ற எண்ணம் ஏற்படுவதாகக் காட்டப்படுகிறது. அது பிரச்சினைக்குத் தீர்வு ஆகாது எனவும் வரதட்சணை வாங்கும் சமூகச சீர்கேட்டை அடியோடு நீக்க வேண்டும் என்பதையும் ஆசிரியர் உணர்த்துகிறார்.

சத்தியானந்தன் நாவலில் வரும் சத்தியானந்தன் மதப்பொதுமை நோக்கு உள்ளவன். கிறித்தவ மதத்தில் உள்ள வைதிகக் கொள்கை-களையும் பாதிரிமார்களின் தவறுகளையும் கட்டாய மதமாற்றச் செயல்களையும் விமர்சிப்பவன் அவன். அவன் படைப்பு மூலம், தனிமனிதனின் மனச்சான்றுக்கும் சுயஅறிவுக்கும் ஏற்ற ஒழுக்கநெறியாக மதம் அமைய வேண்டும் என்னும் சீர்திருத்த எண்ணத்தை அவர் முன் வைத்தார். இதனை, "மதம் அவரவரைப் பொறுத்தது என்று நமக்குள்ளும் ஆக வேண்டும்" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 359) என்று பத்மாவதி சரித்திரம் நாவலில் வரும் கூற்றும், "பெரியவர்களே கூடி மதத்தையும் மற்றவைகளையும் பிரித்தாலன்றி அல்லது காலத்துக்குத் தக்கபடி ஒழுக இடம் கொடுத்தாலன்றி நாம் ஒரு நாளும் முன்னுக்கு வரமாட்டோம்" (அ.மாதவையா, முத்து மீனாக்ஷி, ப. 86) என்று முத்து மீனாட்சி நாவலில் வரும் கூற்றும் இதனைப் புலப்படுத்தும்.

மறுமலர்ச்சி பெற்ற இந்து மதத்தை அவர் எதிர்பார்த்தார். மனிதனின் தனிப்பட்ட நெறியாக மதம் இருக்க வேண்டும்; மனிதனின் நடவடிக்கைகள் அனைத்தையும் கட்டுப்படுத்தாத, அவனைச் சுதந்திரமாக இருக்கச் செய்வதாக மதம் இருக்க வேண்டும் என்னும் கொள்கையை அவர் வலியுறுத்தினார். "எந்த நாமத்தால் எந்த ரூபத்தால் கடவுளைத் தியானித்தாலும், எல்லாவற்றையும் சர்வேசுவரனே ஏற்றுக் கொள்கிறாரென்று சந்தியாவந்தனத்திலேயே சொல்லியிருக்கிறது" (முத்து மீனாக்ஷி, ப. 85) என்றும் முத்து மீனாட்சி நாவலில் மதப்பொதுமை பற்றி

அ. மாதவையா கூறுகிறார். சத்தியானந்தன் நாவலில் அவனுடைய தாய் ஆண்டாளின் கூற்றாக, "அவன் எந்தத் தெய்வத்தை வணங்கறான் என்பது எனக்கு முக்கியம் அல்ல. அவன் நேர்மையானவனா, நல்லவனா, கருணையுள்ளவனா வாழனுங்கறதே நான் விரும்பறது. அப்படி வாழ்ந்தால் அவன் வணங்குகின்ற அந்தத் தெய்வம், அது சிவனோ, விஷ்ணுவோ, அல்லாவோ, புத்தரோ, கிறிஸ்துவோ எதுவாக இருந்தாலும் அது அவனைக் கைவிடாது" (அ. மாதவையா, சத்தியானந்தன், ப. 97) என்றும் வரும் கூற்று பொதுமைப்பார்வையை ஆசிரியர் வலியுறுத்து வதைக் காட்டும். சத்தியானந்தன் நாவலில் சத்தியானந்தன் உருவாக்கியுள்ள 'சத்திய சமாஜம்' தொண்டு நிறுவனத்தில் அடிக்கடி அவர் ஆற்றும் உரைகளில் மதங்களின் ஒன்று இணைந்த பொதுமையை ஆசிரியர் காட்டுகிறார். தில்லைக் கோவிந்தன் நாவலில் 18-ஆம் இயலில் மனிதனை மேன்மையுறச் செய்யும் கருத்துக்களைப் பல்வேறு மத நூல்களிலிருந்து தொகுத்துக் கூறுவதாக அ. மாதவையா காட்டுகிறார்.

மனிதனை மேம்படுத்தும் பல்வேறு சீர்திருத்தங்களை அவர் தம் படைப்புக்கள் வாயிலாகத் தம் வாழ்நாள் முழுவதும் எழுதி வந்தார். அவர் எழுத்துக்களில் சொன்னவற்றைத் தம் வாழ்க்கை நெடுகக் கடைப்பிடித்து, சொன்னவண்ணம் செய்தவராக அ. மாதவையா வாழ்ந்தார். அவர் வாழ்ந்த காலத்துச் சமூகச் சீர்கேடுகளுக்கு அவர் முன் வைத்த சீர்திருத்தக் கருத்துக்கள் என்றும் பொருந்துவனவாக உள்ளன. அது அவருடைய தொலை நோக்கையும் மனிதனுடைய மேன்மையில் அவர் கொண்ட நல்ல எண்ணத்தையும் காட்டும்.

## இயல் – 6

# பெண்ணுரிமைச் சிந்தனைகள்

பெண்கள் அறியாமையில் சிக்குண்டு, கல்வியறிவின்றிக் காலங்காலமாக ஆண்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டு, உரிமையின்றி அடிமைகளாய் வாழ்ந்து வந்துள்ளனர். ஆண்களைச் சார்ந்து வாழும் சார்பு வாழ்க்கை அவர்களைத் தனித்தன்மை அற்றவர்களாக ஆக்கியது. பொருளாதார உரிமையின்றி, தந்தையின் சொத்தில் உரிமையின்றி அடிமைகளாகவும் சார்ந்து வாழ்பவர்களாகவும் ஆக்கப்பட்டனர். இளமை மணம், குழந்தை மணம் போன்ற கொடுமைகளால், இளம் வயதிலே குடும்பப் பணிகளில் - சமையல் பணி உள்ளிட்ட அலுவல்களில் - ஈடுபட்டு உழைத்தும், அடிக்கடி குழந்தைப் பேற்றுக்கு ஆளாகியும் உடல் நலமும் மனநலமும் பாதிக்கப்பட்டு நோயாளிகளாகி அல்லல்பட்டனர். அது போன்று, குழந்தை மணத்தின் தொடர் விளைவாக இளம் வயதிலே விதவைகளாகி, வாழ்க்கை முழுவதும் மறுமண உரிமையின்றி, சமூக அவமதிப்புகளுக்கு ஆளாயினர். மணவாழ்வில் வரதட்சணைப் பிரச்சினையால் மணம் தடைப்படுவது, தள்ளிப் போதல் உட்பட பல்வேறு சிக்கல்களை எதிர் கொண்டனர். இத்தகைய சூழலில், பெண்களின் சிக்கல்களை முதன்மைப்படுத்தி, பெண்களுக்குச் சமஉரிமைகள் வேண்டும் என அ. மாதவையா தம் படைப்புக்கள் பலவற்றிலும் தொடர்ந்து வலியுறுத்தினார். இளமை மணம், குழந்தை மணம் ஆகிய சீர்கேடுகளுக்கு மாற்றாகப் பெண்களின் திருமண வயதை உயர்த்துதல், வரதட்சணை எதிர்ப்பு, விதவை மறுமணம், காதல் மணம், பெண்ணுக்குச் சொத்தில் பங்கு என்பன போன்ற தீர்வுகளை அவர் முன் வைத்தார். அவருடைய முதல் படைப்பான, 1892-ஆம் ஆண்டில் விவேகசிந்தாமணி இதழில் தொடர்கதையாக வந்து முற்றுப் பெறாது நின்று போன 'சாவித்திரி சரித்திரம்' முதலே, அ. மாதவையா பெண்களின் சிக்கல்களைத் தீவிரமாகத் தொடர்ந்து எழுதி, பெண்ணுரிமைச் சிந்தனையாளராக விளங்கி வந்துள்ளார். பெண் விடுதலை பற்றிய சிந்தனைகளை அவர் தொடர்ந்து முன் வைத்தார். வரலாற்று நோக்கில் பார்க்கும் போது, சமூக மாற்றங்கள் நிகழ்ந்தபோதெல்லாம் பெண்களின் சிக்கல்களே முதல் நிலை பெற்றுள்ளன. ஆங்கிலக் கல்வியும் ஐரோப்பிய நாகரிகமும்

ஏற்படுத்திய தாக்கம் காரணமாக 19-ஆம் நூற்றாண்டில், பெண்களின் சிக்கல்களே அனைத்து சிக்கல்களுக்கு மையமாக அறியப்பட்டு எழுதப்பட்டன. சமூக வாழ்வின் மைய அலகாகக் குடும்பம் இருந்தால், குடும்ப நிறுவனத்தில் ஆண்களைச் சார்ந்து, உரிமைகள் ஏதுமின்றி, ஆண்களின் தேவைக்காகவே உழைப்பவர்களாகப் பெண்கள் இருந்த நிலையை அ. மாதவையா நுட்பமாக அறிந்தார். சமூக வாழ்க்கை என்பது அறவே நீக்கப்பட்டு, மிகவும் கடைநிலையில் பெண் வைக்கப்பட்டிருந்த நிலையையும் கற்பு என்னும் கோட்பாட்டை முன்னிறுத்தி பெண் மதிப்பீடு செய்யப்பட்டதையும் கண்டு தம் படைப்புக்களில் பெண்ணுரிமைச் சிந்தனைகளை அவர் தொடர்ந்து எழுதினார்.

பெண் அடிமை நிலையை அவர் ஒருபோதும் ஏற்கவில்லை. ஆண்களைப் போலவே பெண்களுக்கும் சுதந்திரம், சமத்துவம் வேண்டும் என்று அ. மாதவையா வலியுறுத்தினார். பெண் அடிமை நிலையை, மேற்சாதியினருக்குக் கீழ்ச்சாதியினர் அடிமைப்பட்டுள்ள சமூக அடிமைத்தனம், வெள்ளையருக்கு இந்தியர் அடிமைப்பட்டுள்ள அரசியல் அடிமைத்தனம், பொருளாதார வசதியுள்ளவனிடம் ஏழை அடிமைப்பட்டுள்ள பொருளாதார அடிமைத்தனம் ஆகியவைகளுடன் ஒரு சேர இணைத்துக் கண்டார்; அவற்றை விடவும் மிகவும் வலிமை வாய்ந்த, அவ்வளவு எளிதில் ஆண்களால் விடுதலை தரப்படாத ஆதிக்கம் மிக்கதாகவும் பெண்ணடிமை நிலையை - அதன் ஆணிவேரை - அ. மாதவையா காட்டுகிறார். பெண் அடிமை நிலையை இவ்வளவு நுணுக்கமாகவும் மிகச் சரியாகவும் சமூக, அரசியல், பொருளாதார, பாலின காரணங்களால் ஆராய்ந்து கண்டுள்ள அ. மாதவையாவின் பார்வை மிகவும் பாராட்டிற்குரியதாகும். தமிழின் தொடக்ககால நாவலா சிரியர்களில், அன்றைய காலப் பின்னணியில் அவர் காட்டியுள்ள இத்தயை தீவிர நிலைப்பாடு பெருஞ் சாதனையாகும். ‘பெண் கல்வி’ என்னும் கட்டுரையில், ‘ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளுக்கு முன்பே நமது தேசத்துக்கு வியாபாரிகளாக வந்து, நமது அரசரின் அரண்மனை வாயில்களில் பேட்டிக்காகக் காத்துக் கிடந்தும், சுங்கங்கள் கொடுத்தும் பலவாறு உழன்ற அந்நியர்கள், நாட்டிலே ஆதிக்கமும் அதிகாரமும் பெற்று நூறு வருஷங்களே ஆகின்றனவெனினும், அவ்வதிகாரத்தையும் ஆதிக்கதையும் விட்டுக் கொடுத்து இழந்து விடுகிறதென்றால், எவ்வளவு மனம் வருந்துகிறார்கள்? அப்படியிருக்க, எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளாகப் பெண்டுகளைத் தங்கள் அடிமைகளைப் போலும் சங்கம சொத்துக்களைப் போலும் அடக்கியாண்டு அனுபவித்து வந்த ஆண் மக்கள், பெண்களும் ஒத்த கல்வியும் சுவதந்தரியமும் கவுரவமும் அதிகாரமும் பெற மனமிசைவது எவ்வளவு கஷ்டமாகும்? அரசன் குடி

என்னும் தொந்தத்திலும், மேல் சாதி - கீழ் சாதி என்னும் தொந்தத்திலும், ஆண்டான் - அடிமை என்னும் தொந்தத்திலும் மிக வலியதும் நீடித்ததும் ஊனிலும் உயிரிலும் உள்ளத்திலும் ஊன்றி ஊறிப் போனதுமான தொந்தமாகும், ஆண் மேல், பெண் கீழ் என்னும் தொந்தம். அவ் உணர்ச்சியை நியாய புத்தியால் அடக்கி துறந்து ஆண் மக்களாவார் பெண் மக்களையும் சமமாக நினைத்து, திரிகரண சுத்தத்தோடு அப்படியே நடத்துதல் அருமையிலும் அருமையாகும்" (அ. மாதவையா, "பெண் கல்வி", பஞ்சாமிர்தம், ப. 134, வைகாசி, 1924) என்று அ. மாதவையா காட்டுவது வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த முக்கியமான கருத்தாகும். பத்மாவதி சரித்திரம் நூலில், "தான் பிராமணனாய்ப் பிறந்ததனால் மட்டும், எவ்வளவோ படித்தவனும் யோக்கியனும் தனவானுமான ஒரு சூத்திரப் பிரவுவைத் தனக்குக் கீழாக எப்படி எண்ணுகிறானோ, அப்படியே தான் புருஷனானதால், எந்த ஸ்திரியையும் தனக்குக் கீழாகவே நினைக்கிறான்... எஜமானி பாலியமாயிருந்தால், தன் வேலைக்காரனையே புருஷனென்று பயப்படுகிறாள்; அவனும், அவளை எப்படியிருந்தாலும் ஒரு ஸ்திரீதா-னேயென்று இகழ்ந்து நடத்துகிறான். எஜமானியாக அவளுக்குரிய ஸ்தானத்திலும், புருஷனாய்ப் பிறந்ததால் மட்டும் அவனுக்குள்ள அந்தஸ்து பெரிதாயிருக்கிறது. ஆகவே, அவன் அவளை அவமதிக்கிறான்" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 287, 286) என்று கூறுவதும் பெண்ணடிமைத்தனத்தை மிகச் சரியாக அவர் விளக்குவதை - பெண்ணியவாதியின் கருத்தோட்டத்தை - காட்டும். அ. மாதவையா தம் படைப்புக்களில் காட்டியுள்ள பெண்ணுரிமைச் சிந்தனைகளை இவ்வியலில் காண்போம்.

**பெண் கல்வி**

அக்காலத்தில் பெரும்பான்மையான பெண்கள் காலங்காலமாக இருந்து வந்த மரபின்படி கல்வியறிவின்றி, அறியாமையில் மூழ்கியிருந்தனர். அ.மாதவையா காலத்தில் பெண் கல்வியை வலியுறுத்திப் பலரும் எழுதினர். எனினும் பெண்கள் கல்விக் கூடங்களுக்குச் சென்று, கல்வி கற்பது அரிய வழக்கமாக இருந்தது. உயர்சாதியினரான அந்தணர் குடும்பங்களில் கூடப் பெண்கள் கல்விக்கூடம் சென்று கல்வி கற்பது தடை செய்யப்பட்டிருந்தது. பெண் கல்வி கற்பது குடும்பப் பெருமைக்கு - குலமரபான கௌரவத்திற்கு - இழுக்கு என்று கூறும் மூடத்தனமான நம்பிக்கையும் அக்காலத்தில் அந்தணர் குடும்பங்களில் காணப்பட்டது. முத்து மீனாட்சி நாவலில், முத்து மீனாட்சி தான் கல்வி கற்பதாகத் தன் தந்தைக்குக் கடிதம் எழுத அவர் அதைக் கண்டித்து, உடனே நிறுத்தச் சொல்லி எழுதுவது இதைக் காட்டும் : "முத்துவை யார் வாசிக்கச் சொன்னது? பெண்கள் வாசித்தால் கெட்டுப் போவார்கள். அவள்

வாசிப்பதை உடனே நிறுத்தவும்" (அ. மாதவையா, முத்துமீனாக்ஷி, ப. 26) என்று வரும் கூற்று இதனைக் காட்டும். அக்காலத்தில் பெண்கள் கல்வி கற்றால், கெட்டுப் போவார்க்ள் என்னும் மூட நம்பிக்கை மூத்த தலைமுறை யினரிடம் காணப்பட்டது. மாறாக இளைய தலைமுறையினரிடம் பெண்களுக்குக் கல்வி கற்பிக்கப்பட வேண்டும் என்னும் கருத்து இருந்தது. அவர்களைக் கல்வி கற்க வைக்காது அடுப்படியில் மடைத்தொழில் செய்யவும் பிள்ளை பெறவும் மட்டுமே உரியவர்களாக ஆண்களே வைத்துள்ளனர் எனவும் நாராயணன் என்னும் இளைஞன் - கதைத் தலைவன் வாயிலாக ஆசிரியர் கூறுகிறார் : "பிள்ளை பெறுவதையும் மடைத்தொழிலையும் தவிர வேறொன்றுக்குமே யோக்கியதையில்லாமல், பெண்களை முழு மூடர்களாக வைத்திருப்பதினால்தான் இப்படியாகிறது" (பத்மாவதி சரித்திரம், ப. 285). பெண் கல்வி கற்பதால் அவள் அறிவு வளர்ந்து நாடு முன்னேறும்; அத்துடன் பெண்களுக்கு ஏற்பட்டுள்ள இளமை மணம் போன்ற சமூகக் கொடுமைகளும் நீங்கும்; அப்பெண்களே விழிப்புணர்வு பெற்று, இளமை மணம் போன்ற சீர்கேடுகளை எதிர்த்து நின்று, நீக்கி விடுவர் எனவும் அ.மாதவையா கூறுகிறார் : "ஜாதியாசாரம் குறைந்து, பெண் கல்வியும் விருத்தியானால் எல்லாம் சீக்கிரம் சீராகிவிடும். பெண்கள் நன்றாகப் படித்துப் புத்தி விசாலம் அடைந்து விட்டால், பாலிய விவாகமும் அதனால் விளையும் பெருங்கேடுகளும்கூட நீங்கி விடும். அவர்களே நீக்கி விடுவார்கள்" (பத்மாவதி சரித்திரம், 287). இத்தகைய இளைஞர்கள், தம் மனைவியர்க்குக் கல்வி கற்றுத் தருவதை அ. மாதவையா பத்மாவதி சரித்திரம், முத்து மீனாட்சி, தில்லைக் கோவிந்தன் நாவல்களில் படைத்துள்ளார். பத்மாவதிக்கும் தன் நண்பன் கோபாலனின் சகோதரி சாவித்திரிக்கும் நாராயணன் கல்வி கற்றுத் தருகிறான் என்று பத்மாவதி சரித்திரம் நாவலில் காட்டுகிறார். முத்துமீனாட்சி நாவலில் முத்து மீனாட்சிக்குச் சுந்தரேசனும் தில்லைக் கோவிந்தன் நாவலில் கோவிந்தன் தன் மனைவிக்கும் கல்வி கற்றுக் கொடுக்கின்றனர் என அ. மாதவையா காட்டியுள்ளார்.

பெண் கல்வி, "புத்தி விருத்தியும் பேரறிவும் நல்லொழுக்கமும்" கொண்டதாக இருக்க வேண்டும் என அ. மாதவையா வலியுறுத்தினார். "பெண்களும் ஆண்களைப் போலவே எவ்விதத்திலும் தாழ்வின்றிப் படித்து, தாமே தமக்குரிய சுதந்திரங்களைக் கைப்பற்ற...... வேண்டும்" (அ.மாதவையா, "பெண் கல்வி", பஞ்சாமிர்தம், ப. 134, 1924) என்று அ.மாதவையா எழுதியுள்ளார். பெண்களும் கல்வியிற் சிறந்த பயிற்சி பெற்றால்தான் ஆண்கள் கற்ற கல்விக்குப் பயன் உண்டு; ஏனெனில் இருவரும் சேர்ந்தே வாழ்க்கை வண்டியை ஓட்ட வேண்டும் என்பதை,

"இரு கண்களில் ஒன்றுக்கு வந்த நோய் மற்றதையும் வருத்துவது போல, சகடத்தில் ஓர் எருது சண்டியாயின், மற்றது மேற் செல்ல மாட்டாது தத்தளிப்பது போல, பெண்களும் கல்வியிற் சிறந்த பயிற்சியுற்றாலன்றி, ஆண்களின் பயிற்சி வீணாகும்" (அ. மாதவையா, 'பெண் கல்வி', பஞ்சாமிர்தம், ப. 135) என்று விளக்குகிறார். கல்வி கற்ற பெண்கள் ஆசிரியர்களாகப் பணிபுரிவதை விஜயமார்த்தாண்டம் (சிவகாமி) சத்தியானந்தன் (கலியாணி) ஆகிய நாவல்களில் காட்டியுள்ளார். கல்வி கற்ற பெண்கள் கணவனுடனும் அவன் நண்பர்களுடனும் சரி சமமாக அமர்ந்து உரையாடுவதையும் வெளியில் சென்று வருவதையும் பத்மாவதி சரித்திரம் நாவல் பத்மி படைப்பு வழியே காட்டுகிறார். கல்வி கற்பது அப்பெண்களின் தனித்தன்மையை வெளிப்படுத்த உதவ வேண்டும் என்று அவர் அழுத்தமாக வலியுறுத்துகிறார். "யார் யாருக்கு எதெதில் மூளை நன்றாய்ச் செல்கிறதோ அதிலேயே விட்டுப் பழகித் தேற்றினாலன்றோ அவர்களுக்கு சுகமுண்டு. அறிவும் விருத்தியடையும், தேசமும் முன்னுக்கு வரும்" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 286) என்று வருமிடம் இதற்குச் சான்றாகும். கல்வியின் பயனாகப் பெண்கள் சிந்தித்து முடிவெடுப்பதையும், தங்கள் நிலைப்பாட்டில் உறுதியாக நிற்பதையும் அவர் நாவல் மாந்தர்கள் முறையே முத்து மீனாட்சி, விஜய மார்த்தாண்டம் நாவல்களில் மூலம் காட்டியுள்ளார். கல்வியின் பயன் அறிவு வளர்ச்சியும் தெளிவும் துணிவும் என்று இதனால் அறிகிறோம். அடிப்படையான இப்பண்புகள் காரணமாகப் புதிய விழுமியங்களை வரவேற்று, பழமையான மரபுகளான காலத்திற்கு ஒத்துவராதவற்றை எதிர்க்கவும் வல்லவர்களாக விளங்குகின்றனர்.

**இளமை மண எதிர்ப்பு**

அந்தக் காலத்தில் அந்தணர் சமூகத்தில் பெண்கள் சிறுமிகளாக இருக்கும் போதே, வயதுக்கு வருமுன்னரே, பொம்மைக் கலியாணம் போன்று மணஞ்செய்து கொடுக்கப்பட்டனர். முத்துமீனாட்சி நாவலில் வரும் முத்து மீனாட்சி, பத்மாவதி சரித்திரம், பத்மாவதி, கலியாணி, தில்லைக் கோவிந்தன் நாவலில் வரும் சேஷிப்பாட்டி, நாணிப்பட்டி ஆகியோர் வயதுக்கு வருமுன்னரே மிக இளம் பருவத்திலேயே மணம் செய்து கொடுக்கப்பட்டனர் என்று காட்டப்பட்டுள்ளது. அக்காலத்தில் போதிய மருத்துவ வசதிகள் இல்லாததால், குழந்தைகளின் இறப்பு விகிதம் அதிகமாகவே இருந்தது. குழந்தை மணம் காரணமாக, இளம் வயதிலேயே விதவைகளாயினர்; வாழ்நாள் முழுவதும் விதவைகளாக இருந்து அல்லலுற்ற அவலத்தைத் தில்லைக் கோவிந்தன் நாவலில் வரும் சேஷிப் பாட்டி, நாணிப்பாட்டி படைப்புக்கள் காட்டும். முத்து மீனாட்சி நாவலில் முத்து மீனாட்சி மிகவும் சின்னஞ்சிறு பருவத்திலேயே மணம் செய்து

கொடுக்கப்பட்டு, இளம் பெண்ணாக இருக்கும்போதே விதவை ஆகிவிடுகிறாள். நல்ல வேளையாக அவளுக்கு மறுமணம் நடைபெறுகிறது. பத்மாவதி சரித்திரம் நாவலில் பத்மி, சிறுபெண்ணாக இருக்குபோதே, கரிக்கிட்டு என்ற கிருஷ்ணனுக்கு மனஞ்செய்யப்பட இருக்க, முதல் நாளில் அவன் (கிருஷ்ணன்) இறக்க, அவள் விதவையாகாமல் தப்பிக்கிறாள். இருப்பினும் அவளுடைய உறவினன் நாராயணனுக்கு அவள் இளம் வயதிலேயே மணஞ் செய்து கொடுக்கப்படுகிறாள். குழந்தை மணம் காரணமாக உடலும் மனமும் பக்குவப்படவும் அறிவு முதிர்ச்சி அடையவும் கூடிய சூழல் ஏற்படுமுன்னர் குடும்பவாழ்வில் ஈடுபடுத்தப்பட்டதால், அடிக்கடி கருவுற்றதால் கருப்பை நோய்கள் உள்ளிட்ட நோய்களுக்கு ஆளாகி, உடல் நோயும் மனநோய்களும் ஏற்பட்டுப் பெண்கள் இன்னல் உற்றனர். இந்த நோய்களுக்குச் சரியான மருத்துவ சிகிச்சை அளிக்காமல், மூடத்தனமான நம்பிக்கைகளுடன் கிராமப்புற வைத்தியங்களைச் செய்தும் 'தேவதா உபத்ரவம்' என்ற பெயரில் பேய் ஓட்டும் சடங்குகள் செய்து இளம் பெண்களை மிகவும் உடல், மனநிலைகளில் பாதிப்பு ஏற்படுமாறு துன்புறுத்துகின்றனர். இதன் தொடர் விளைவாக இளமையிலே பல பெண்கள் இறக்கும் நிலை ஏற்பட்டதைப் பத்மாவதி சரித்திரம் கலியாணி, தில்லைக் கோவிந்தன் நாவலில் வரும் பெண் ஆகியோர் படைப்பு மூலம் காட்டுகிறார். "குழந்தைப் பருவத்திலேயே புருஷனுடன் வாழத் தொடங்கி, மற்ற சாதிகளில் பெண்களுக்கு விவாகமாகும் வயதிற்குள் இரண்டு பிள்ளைகளும் பெற்று, மூன்றாந்தரமும் குலுற்றதனால் விளைந்த தீங்குதான் அது என்று சொல்லி, பி.ஏ. பரீக்ஷை கொடுத்து வைத்தியசாலையிற் படித்தும் இவ்வளவு தெரியாமற் போனதற்காகக் கோபாலையரை அவர் (டாக்டர் டான்புட்) கடிந்து பேசினார்" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 265) என்னும் பகுதியில், ஆங்கில மருத்துவரின் கூற்றில், குழந்தை மணமே துன்பங்களுக்குக் காரணம் எனவும் மருத்துவப் படிப்பு - பட்டப் படிப்பு - படித்தவர்கூட இதை உணர்ந்து ஆங்கில மருத்துவ உதவிகளைப் பெறவில்லையே என்றும் ஆசிரியர் காட்டுகிறார். "பெண்கள் வயிற்றுவலி, பேய் பிடித்தல் முதலிய நோய்களால் படும் கஷ்டங்களையும் அவர்களின் அகால மரணத்தையும் நாம் வீடுதோறும் குடும்பந்தோறும் பார்க்கிறோம்" (அ. மாதவையா, ஆசாரச் சீர்திருத்தம், ப. 17) என்று வேறொரு இடத்திலும் அவர் கூறுகிறார். இளமை மணம் செய்து கொடுப்பதாலும் புதிய அறிவியல் முறைகளை, ஆங்கில மருத்துவமுறைகளை, மருத்துவமனை யிற் தங்கியிருந்து சிகிச்சை முறைகள் போன்றவற்றை ஏற்க மறுப்பதாலுமே மணமான இளம் பெண்களின் அகால மரணங்கள் மிகுதியும் ஏற்படுகின்றன எனவும் அ. மாதவையா காட்டுகிறார். அக்கால

வழக்கப்படி, மணங்கள் பேசப்படும்போது பெண்ணிடம் இசைவு கேட்பது - பையன் பிடித்திருக்கிறானா என்று கேட்பது அந்தணக் குடும்பங்களில் பழக்கம் இல்லை; ஏற்பாட்டு மணத்தை ஏற்க வேண்டியது பெண்ணின் கடமை எனவும் பெண் விருப்பப்படவில்லை என்றாலும் மணத்திற்குப் பின், கணவனுடன் இசைந்து ஒன்றுபட்டு வாழ வேண்டும் எனவும் பெண்ணுக்கு அன்றைய குடும்ப அமைப்பில் விதிக்கப்பட்டிருந்தது எனவும் அ. மாதவையா காட்டுகிறார். ஆணைச் சார்ந்து வாழும் வாழ்க்கையே அன்று காணப்பட்டது. இதனை, "பத்மாவதியை ஒருவரும் கேட்கவேயில்லை. அவளைக் கேட்பானேன்? தாயார், தகப்பனார் யாரைத் தீர்மானஞ் செய்கிறார்களோ, அவனுக்குத் தன் வாழ்நாள் முழுவதும் அடிமைத்தொழில் செய்து கழிக்க வேண்டியது அவள் கடமையன்றோ?— விதிப்பயன் என்று சும்மா இருக்க வேண்டியதேயொழிய தடுத்துப் பேச நியாயமுண்டோ? எல்லாம் பழகினால் சரியாய்ப் போய்விடுமல்லவோ?— இதெல்லாம் பாராமல் கலியாணம் பண்ணினவர்களெல்லாம் பெண்களும் பிள்ளைகளும் பெறாமல் தானிருக்கிறார்களோ?" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், பக். 57, 58) என்று பத்மி திருமணம் பற்றி வருமிடத்தில் ஆசிரியர் இதைத் தெளிவாகக் காட்டுகிறார். இதற்கு மாற்றாகப் பெண் கல்வி கற்று முன்னேற்றம் ஏற்பட்டால் இளமை மணம் என்னும் சீர்கேடு நீங்கி விடும் என்று அ. மாதவையா வலியுறுத்துகிறார். "ஜாதி ஆசாரம் குறைந்து பெண்கல்வியும் விருத்தியானால் எல்லாம் சீராகி விடும். பெண்கள் நன்றாகப் படித்து, புத்தி விசாலம் அடைந்து விட்டால், பாலிய விவாகமும் அதனால் விளையும் பெருங்கேடுகளும் கூட நீங்கிவிடும்: அவர்களே நீக்கி விடுவார்கள்" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 287) என்று வரும் கருத்து இதனை வலியுறுத்தும். இளைய தலைமுறையினர் தங்கள் பெண் பிள்ளைகளுக்கு வயது வந்தபின்னரே மணஞ்செய்வதாகவும் கூறுவதாகவும் அ. மாதவையா காட்டுகிறார். அவ்வாறே பெண்ணின் மணவயதை உயர்த்த வேண்டும் எனவும் பருவம் அடைந்த பின்னரே பெண்ணுக்கு மணஞ் செய்து தரப்படவேண்டும் எனவும் அவர் வலியுறுத்துகிறார். உரிய பருவம் வந்தபின், ஆணும் பெண்ணும் பழகி, ஒருவரை ஒருவர் புரிந்து கொண்ட பின், மணந்து வாழ வேண்டும் என்று காதல் மணத்தை அ. மாதவையா முன்வைக்கிறார். அந்தக் காலத்தில் அந்தணர் இனத்தில் காதல் மணம் நிகழ வாய்ப்பில்லை என்பதை ஆசிரியர் அறிந்து தம் படைப்புக்களில் காட்டுகிறார். என்றாலும், குழந்தைப் பருவந்தொட்டே ஒன்றாக வளரும் சொந்தம் - உறவு - சூழல் காரணமாக நாராயணன் - பத்மியிடையே அன்பு வளர்ந்து, மண வாழ்வு மிக இனிமையாக உள்ளதாக ஆசிரியர் காட்டுகிறார். மேலும் அவர்கள் முன்மாதிரி இணையாக ஆசிரியரால் காட்டப்படுகின்றனர். முத்து மீனாட்சி நாவலில் முத்து மீனாட்சி சுந்தரேசன் இருவரும் பழகி,

காதலித்து மணம் செய்து கொள்ளுவதாக ஆசிரியர் காட்டுகிறார். முத்து மீனாட்சி இளமையில் - குழந்தைப் பருவத்தில் சுந்தரேசனுடன் பழகி பின் வேறொருவரை மணந்து, விதவையான நிலையில், மீண்டும் சுந்தரேசனைச் சந்தித்து அவன் காதலை அறிந்து, தானும் அவனை விரும்புவதை அறிந்து அவனை மணக்கிறாள். அவளுக்கு மறுமணம் மிகுந்த மகிழ்வையும் மனநிறைவையும் தருமாறு அவன் மிக்க துணிவும் காதலும் உள்ளவனாக விளங்குகிறான். இதனை முத்து மீனாட்சி கூற்றில், "இந்தப் பாக்கியம் யாருக்குக் கிடைக்கும்? நான் முன்னிருந்த கதியென்ன, இப்பொழுது அனுபவிக்கும் ஆனந்தமென்ன? உலக மதிப்பு பெரிதல்ல என்று நீ எழுதினது இப்போதுதான் தெரிய வருகிறது" (அ. மாதவையா, முத்து மீனாக்ஷி, ப. 87) என்று காட்டுகிறார். ஆசிரியர், காதல் மணத்தை ஆதரித்ததை முத்து மீனாட்சி நாவலின் இறுதியில், "ஆண்களைப் போலவே பெண்களும் சம சுதந்திரம் பெற்று, ஒவ்வொரு உறிந்து குடும்பத்திலும் 'காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவு பட்ட இன்பம்' தழைத்தோங்குமாறு கடவுள் அருள் புரிவாராக!" (அ. ம ாதவையா, முத்து மீனாக்ஷி, ப. 88) கூறுவது இதனை வலியுறுத்தும். விஜயமார்த்தாண்டம் நாவல் காதல் வாழ்வை வலியுறுத்தவே எழுதப்பட்டதாகும். மறவர் இனப் பின்னணியில், விஜயமார்த்தாண்டத் தேவர் - சிவகாமி இருவரும் பழகி, காதலித்து இடையில் துன்பங்களை அனுபவித்து இறுதியில் மணக்கின்றனர். காதல் வாழ்வைப் பழைய தமிழ் அகப்பொருள் மரபில் காதல்பத்து, கற்புப்பத்து என்று பகுத்துக் காட்டியிருப்பதும் காதல் மணத்தை வலியுறுத்தவே.

**விதவை மறுமணம்**

அக்காலத்தில் இளமை மணம் காரணமாக, இளம் வயதில் விதவை ஆகும் அபாயம் இருந்தது. அந்தணர் சமூகத்தில் விதவையர் மிக மோசமாக அவமதிக்கப்பட்டு அல்லல்படுத்தப்பட்டனர். விதவையர் மறுமணம் ஏற்றுக் கொள்ளப்படவில்லை; மீறி மறுமணம் செய்து கொண்டவர்களைச் சாதி நீக்கம் செய்து புறக்கணித்தனர். முத்து மீனாட்சி நாவல் முத்து மீனாட்சியும் கிளாரிந்தா நாவல் கிளாரிந்தாவும், பத்மாவதி சரித்திரம் கமலாம்பாளும் தங்களின் தந்தை வயதையோ தாத்தா வயதையோ உடைய ஆடவர்களுக்கு மணம் செய்து தரப்பட்டு விதவையாகின்றனர். பரத்தையர்களுடன் கூடி வாழும் இழிபண்புடைய கணவன் இறந்ததால் பத்மாவதி சரித்திரம் நாவலில் சாவித்திரி விதவையாவது காட்டப்படுகிறது. அதே நாவலில் குற்றம் செய்து, நீதிமன்றத்தால் சிறைத் தண்டனை பெற்றுச் சிறையிலே சீதாபதி அய்யர் இறந்ததால், சீதையம்மாள் விதவையாகிறாள். வயதானபின் விதவையாவது, கணவனுடன் நீண்டகாலம் வாழ்ந்த பெண்கள் விதவையானால்,

மறுமணம் செய்து கொள்ளாமல், குழந்தைகளை வளர்த்து ஆளாக்கி வாழ்வது ஒருவகையாகும். சீதை அம்மாள் தன்மகன் நாராயணனை வளர்த்து ஆளாக்குகிறாள். சாவித்திரி தன் தம்பி பிள்ளைகளை வளர்த்து ஆளாக்கி உதவுவதுடன் ஏழைக் குழந்தைகளுக்குப் பாடல் சொல்லித் தந்தும் மருத்துவமனைகளுக்கு ஆடையும் பணமும் தந்து உதவி செய்தும் – பொதுத் தொண்டில் காலம் கழித்தும் – வாழ்கிறாள். கிளாரிந்தா நாவலில், கிளாரிந்தாவும் ஏழை எளிய மக்களுக்கு உதவியும் கிறித்தவ சமயப் பணிகள் செய்தும் வாழ்கிறாள். இவ்வாறு அ. மாதவையா படைத்துள்ள பாங்கு இயல்பானதும் பொதுவான பாங்கினதுமாகும்.

இளம் வயதில் குழந்தை மணம் செய்விக்கப்பட்டு, சின்னசிறு வயதிலேயே விதவையான பெண்ணுக்கு மறுமணம் வேண்டும் என்று எழுதினார் அவர். அது புரட்சிகரமான, அந்நாளில் பெரும் எதிர்ப்பை ஏற்படுத்திய வழியாகும். ஆனால், சமூகச் சீர்கேட்டிற்கு அதுவே ஏற்ற வழியாகும். விதவை மறுமணத்தைக் காதல் மறுமணமாக அவர் படைத்தார். முத்து மீனாட்சி நாவலில் இளவயது விதவை முத்து மீனாட்சி – சுந்தரேசன் காதலித்து மணம் செய்து கொள்கின்றனர் சத்தியானந்தன் நாவலில், இளம் விதவை கலியாணியைக் காதலித்து மணக்கிறான், சத்தியானந்தன், கிளாரிந்தா நாவலில் கிளாரிந்தாபாய் மணமும் அவ்வாறே நடக்கிறது.

இம்மூன்று நாவல்களிலும் இளம் விதவையரை மணக்கும் இளைஞர்கள் ஆங்கிலக் கல்வி கற்ற, நவீன வாழ்க்கை மரபுகளை அறிந்தவர்களாகவும் ஐரோப்பியப் பண்பாட்டின் தாக்கம் பெற்ற இந்துப் பண்பாடு மாறிவரும் புதிய சிந்தனைகளை ஏற்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்களாகவும் படைக்கப்பட்டுள்ளனர். பழமையான, காலத்திற்கு ஒவ்வாத சாதி, மத ஆசாரங்களை மீறும் எண்ணப்போக்கு இவ்விளைஞர்களிடம் காணப்படுகிறது. இத்தகைய புரட்சி மனப்பான்மை மிக்க, காலமாற்றங்களுக்கு ஏற்ற, செயல்பாட்டுத் திறமிக்க இளைஞர் களைத்தான் அ. மாதவையா எதிர்பார்த்தார். சமூக எதிர்ப்பைப் பற்றிக் கவலைப்படாமல், சாதி நீக்கம் செய்தால், அதை எதிர்த்துப் போராடி, துணிந்து நின்று வாழ்ந்து காட்டும் முத்துமீனாட்சி நாவல் சுந்தரேசன் தான், சமூக மாற்றத்தின் ஊற்றுக்கண் என அவர் காட்டுகிறார். இதனை, "என் பெண் குழந்தைகளில் ஒன்று. இரண்டாவது மாதத்தில் இறந்து போய்விட்டது. ஒருவருமே வரவில்லை; அவரே அதை எடுத்துக் கொண்டுபோய்ப் புதைத்துவிட்டு வந்தார். இது நடந்தபின், அது கருமசண்டாளர் தெரு என்றும், அதிலிருந்தால் தமக்குள்ள பிராமணியமும் போய்விடுமென்றும் அடுத்த நாளே சூத்திரர் தெருவுக்குக் குடிபோய் விட்டார்" (அ. மாதவையா, முத்துமீனாக்ஷி ப. 82) என்னும்

கூற்று. அந்த இளைஞனின் துணிவையும் தீமையை எதிர்த்து நிற்கும் ஆற்றலையும் உறுதிப்பாட்டையும் ஒருங்கே காட்டும். அ.மாதவையாவின் இந்த நாவல், முத்து மீனாட்சி முதன்முதலில் வெளிவந்த போது, புரட்சிகரமான இதன் கொள்கையை இந்து நாளிதழ் பழித்துக் கண்டித்தது என்றும், அது கண்டு தோய்ந்து பின் வாங்காமல் ஆசிரியர் இதை தம்முடைய வேறு படைப்புக்களிலும் தொடர்ந்து எழுதியதையும், அவற்றையெல்லாம் மக்கள் வரவேற்றனர் என்பதையும் ஆசிரியர் முன்னுரையில் கூறியுள்ளார். அ. மாதவையாவின் ஆளுமைத் திறனில் உள்ள, துணிச்சலும், எதிர்ப்புகள் கண்டு பின்வாங்காத செயல் திறனும் சமூக மேன்மை ஒன்றை மட்டுமே முதன்மைப்படுத்திய புரட்சிகரமான சிந்தனைப் போக்குமே இப்படிப்பட்ட கதை மாந்தரைப் படைக்க அடித்தளமாக இருந்தன. தமிழ் நாவல் வரலாற்றில் முத்து மீனாட்சி நாவல் பெருஞ்சாதனையாக உள்ளது.

**வரதட்சணை எதிர்ப்பு**

அக்காலத்தில் அந்தணர் சமுதாயத்தில் ஏராளமான பணத்தை மாப்பிள்ளைக்கு வரதட்சணையாகக் கொடுத்து, மிகுதியான நகைகள், பாத்திரங்கள் போன்றவற்றைச் சீராகக் கொடுத்துப் பெண்ணை மணஞ் செய்து தரும் வழக்கம் இருந்தது. நகர வாழ்க்கை, ஆங்கிலக் கல்வி, உத்தியோகம் காரணமாக மாப்பிள்ளையின் விலையும் கூடியது. பையனின் படிப்பு கூடக்கூட, மணச்சந்தையில் அவன் விலையும் கூடியது. இதனால் பெண்ணைப் பெற்றவர்கள் மிகுந்த துன்பப்பட்டு, கடனுக்கு ஆளாகி அல்லல் உற்றனர். இவைகளை அ. மாதவையா தம் படைப்புகளில் அழுத்தமாகக் காட்டினார். வரதட்சணை என்னும் சமூகச் சீர்கேடு நீங்க, படித்த இளைஞர்கள் இக்கொடுமைக்கு எதிராகத் திரண்டெழுந்து, வரதட்சணை வாங்காமல் மணஞ்செய்து கொள்ள முன்வர வேண்டும் என்ற அ. மாதவையா எழுதினார். இளைய தலைமுறையினரை, இந்தச் சீர்கேட்டிற்கு எதிராகக் கிளர்ந்தெழவும் வரதட்சணை வாங்காமல் மணம் செய்து கொள்ளவும் செய்வதன் மூலம் சமூகமாற்றம் ஏற்படும் என அவர் நம்பினார்.

அ. மாதவையாவின் காலத்திற்கும் முற்பட்ட கால அமைப்பில், பெண்ணுக்கு மாப்பிள்ளை வீட்டார் பணம் கொடுத்துத் திருமணம் செய்து கொண்டனர். பின்னர் தான் இவ்வழக்கம் மாறியது. பையனின் படிப்பு, அலுவல், தகுதிக்கு ஏற்பப் பெண்வீட்டாரிடம் விலை பேசி, அதிகாரம் செய்து மிரட்டி வாங்கலாயினர். இதனை முத்து மீனாட்சி நாவலில், "அந்த நாட்களில், பெண்களுக்கு மாப்பிள்ளை வீட்டுக்காரர் பணங்கொடுப்பதன்றி, மாப்பிள்ளைக்குப் பெண் வீட்டுக்காரர் நகைகள் செய்து போட்டும் படிப்புச் செலவுக்குப் பணம் உதவியும் துவிச்சக்கர

வண்டிகள் வாங்கிக் கொடுத்தும் பணம் கொடுப்பது கிடையாது. நான் துவி தீயமாக வாழ்க்கைப் பட்டேன். எனக்கு முந்நூறு ரூபாவுக்கு நகை போட்டதுமன்றி, எழுநூறு ரூபா கட்டணமாகவும் கொடுத்தார்கள்" (அ. மாதவையா, முத்து மீனாக்ஷி, ப. 37) என்று வரும் கூற்று நன்கு காட்டும். இந்தப் பழக்கம் நாளடைவில் மாறி, பெண் வீட்டாரிடம் மாப்பிள்ளை வாங்குவது வரதட்சணை என ஆயிற்று என்பதை, 'வரன்தேடும் வைபவம்', 'அவனாலான பரிகாரம்', 'அது நேர்ந்த விதம்', 'கமலத்தின் கலியாணம்', 'விவாக ஸம்ஸ்காரம்' ஆகிய சிறுகதைகளிலும், புது மாதிரி கல்யாணப் பாட்டு என்னும் இசைப்பாட்டு நூலிலும் அ. மாதவையா விரிவாகவும் அழுத்தமாகவும் காட்டியுள்ளார். பத்மாவதி சரித்திரம் நாவலில், நாராயணன் - பத்மாவதி கோபாலன் உரையாடலில், பத்மியின் பெண் மூன்று வயது, சீதுவுக்கு மணம் செய்யப்படும் போது எதிர்காலத்தில் எவ்வளவு வரதட்சணை மாப்பிள்ளைக்கு நாராயணன் கொடுப்பான் என நடக்குமிடத்தில் இதைக் காட்டுகிறார் அ. மாதவையா.

"கோபா : சீதுவுக்கு மூன்றாவது வயது நடக்கிறதே; எப்பொழுது கலியாணம்? மாப்பிள்ளை பார்த்திருக்கிறாயா? இந்த நாளில் ஆயிரம் இரண்டாயிரம் கொடுக்க வேணுமே?

நாரா : போடா கேலி பண்ணாதே ; நான் உயிரோடிருந்தால் சீது பெரியவளாகும் மட்டும் கலியாணம் செய்வதில்லையென்றுதான் தீர்மானித்திருக்கிறேன்.

கோபா : பெரிவளாய் விட்டால், மாப்பிள்ளை யாரு? அப்புறம் ஐயா யிரம் கொடுத்தாலும் யார் பண்ணிக் கொள்வார்கள்? (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 288) என வரும் உரையாடலில், 'இந்த நாளில் ஆயிரம், இரண்டாயிரம் கொடுக்கவேணும், எனவும், 'பெரியவளாய் விட்டால் ஐயாயிரம் கொடுத்தாலும் யார் பண்ணிக் கொள்வர்' எனவும் வருவது இதை நன்கு காட்டும்.

'புது மாதிரி கல்யாணப்பாட்டு' நூலில், மாப்பிள்ளையைத் தேடி உறுதி செய்வதற்காகப் பெண்ணின் தந்தை அலையும் கொடுமையை 'வரன்தேடும் வைபவம்' என்ற தலைப்பில் 17 பாடல்களில் காட்டியுள்ளார். அ. மாதவையா, மாப்பிள்ளைப் பையனின் படிப்பிற்கு ஏற்பக் கலியாணச் சந்தையில் விலை பேசப்படும் சீர்கேட்டை இப்பாடல்களில் அற்புதமாகக் காட்டுகிறார்.

'பையன் துடுக்கு; பரீக்ஷை எப் ஏ., அவன்
பங்குக்கே எம்பளது செண்டு நிலம்,
கைநிறையப் பவுன் கண்டிடின் ஜாதகம்
காணலாம்' என்பவர் வாசல்களும்

... 'ஐந்துபை ரொக்கம்
சொரிவீரோ' என்பார் வாசல்களும்

'அட்டியேன் ஆஸ்தி எல்லாம் இவள் பேரிலே
ஆக்குமேன்' என்பவர் வாசல்களும்
'சொன்ன தொகையிலே ஓர்பைசாக் குறையாது
தொந்தர வேன்? என் பார்வாசல்களும்
'ஆனப ரீக்ஷையில், எப்.ஏ.ஈராயிரம்
பி.ஏ. நாலாயிரம் பி.எல்.எட்டாய்
தானப் பெருக்கத்தில் ஏலமோ கூறிடும்
மானமற் றோர்தலை வாசல்களும்'

'அப்பா அறிவர் பணவிஷயம்; நகை
சீர் இவை அம்மாவைக் கேட்டுக் கொள்ளும்
தப்பாமல் பைசைக்கில் தங்கக் கடியாரம்
சங்கிலி மோதிரம் ஸூட் எனக்கே'

(இந்துதாஸன் (அ. மாதவையா, புதுமாதிரி கல்யாணப் பாட்டு, பக். 3-5, பாடல்கள் 4, 6, 8, 10, 12, 13) என்று வரும் பாடல்களில் அவருடைய காலச் சமூகச் சூழலை மிக அழுத்தமாகக் காட்டியுள்ளார். பையனை அவன் படிப்பிற்கு ஏற்ப விலை பேசும் கொடுமையை 'ஏலமோ கூறிடும் மானமற்றோர் தலைவாசல்'களிலும், சென்று பெண்ணை விலை பேசுகின்றனர், பெண்களின் பெற்றோர் என்று நடப்பியவை மிக நன்கு காட்டுகிறார். இந்தக் கொடுமைகள் கண்டு - தம் திருமணத்திற்காகத் தம்முடைய பெற்றோர் வீடு வீடாகச் சென்று மாப்பிள்ளைப் பையன்களை விலைக்கு வாங்க முயலும் நிலையைக் கண்டும் தாம் பெண்களாகப் பிறந்தது கண்டும் வருந்துவதுடன் திருமணம் என்னும் அடிமை செய்யும் வழக்கத்திற்காகவும் பெண்கள் வருந்துவதாகவும் அ. மாதவையா காட்டுகிறார்.

'நம்மை அடிமைகள் ஆக்கிவிடும் கலி
யாணக் கும்மி அடி யுங்கோடி - தலை
நாணிக் கும்மி அடியுங்கோடி'

(அ. மாதவையா, புதுமாதிரி கல்யாணப் பாட்டு, ப. 6, பாடல், 17) என்பதில் 'நம்மை அடிமைகள் ஆக்கிவிடும் கலியாணம்' என்பதும் 'தலை நாணிக் கும்மி அடியுங்கோடி' என்பதும் மிகவும் புரட்சிகரமான சிந்தனை-களாகும். வரதட்சணை கொடுத்து ஆணை மணக்கும் மணம், பெண்ணை அடிமையாக்கும் வழக்கம் என்னும் பெண்ணுரிமைச் சிந்தனை அந்த நாளில் மிகப் பெரும் புதுமையாகும்.

'அவனாலானபரிகாரம்' என்னும் சிறுகதையில், படித்த படிப்பிற்காகப் பெண் வீட்டாரிடம் கூடுதல் பணம் வரதட்சணை வாங்குவதும், பெண் திருமணத்திற்குப் பின் வயதுக்கு வந்தபின் சாந்தி முகூர்த்த மணத்தின் போது அதற்கென்று தனியாக வரதட்சணை பெறுவதுமாக, சாமிநாதனின் தந்தை இருமுறை பெண் வீட்டாரிடம் பணம் பெறுகிறார். அந்நாளைய வழக்கமாக, பெண் வீட்டார் மாப்பிள்ளைக்கு வரதட்சணை கொடுத்துத் திருமணம் நடத்தினர். இதனை.... 'எப்.ஏ.பரீக்ஷையில் இராஜதானிக்கு ஐந்தாமவனாகத் தேறினான். பெண்களைப் பெற்றுள்ள பிதாமார்கள், அவனை மாப்பிள்ளையாக்கிக் கொள்ள போட்டி போட்டுக் கொண்டு வந்தார்கள். முடிவில், அவன் உயர்ந்த ஏலத்தொகைக்கே விடப்பட்டு, நிலச்சுவானும் பள்ளி வாத்தியாருமான ஒருவருக்கு மருமகனானான். அவர் இரண்டாயிரம் ரூபாய் ரொக்கம் கொடுத்து, ஆயிரம் ரூபாய்க்கு மேல் நகைகளாகவும், வெள்ளிப் பாத்திரங்ளாகவும் சீர் செய்தார். கலியாணமாகி ஒரு வருஷத்தில், பெண் பக்குவதியாகவே, ருது சாந்தி முகூர்த்தத்திற்கு... வழக்கமாயுள்ள சீர், வெள்ளிப் பாத்திரங்கள் தவிர, ரூபாய் 800 ரொக்கம் கொடுத்து விடுகிறது (அ. மாதவையா, குசிகர் குட்டிக் கதைகள், 'அவனாலான பரிகாரம்', பக். 12 – 17) என்னும் பகுதி இதைக் காட்டும். வரதட்சணை வாங்கி மணப்பது என்பதை மாப்பிள்ளை சாமிநாதன் 'சந்தையில் விலைக்கு விற்பது போன்று' என்று கூறுகிறான். மேலும், 'என்னை இருமுறை விலைக்கு விற்றாய்விட்டது' (ப. 21) எனவும், 'இப்பொழுது உள்ளபடி, சந்தையில் விற்கப் போகும் மாட்டுக்கு அதிகத் தீனி போடுவது போலவே எனக்குக் கல்வி பயிற்றித் தாங்கள் என்னை என் மாமனாருக்கு ரூ. 2800–க்கு விற்றுவிட்டதாகவே நினைப்பதைத் தவிர, எனக்கு இதைப் பற்றி வேறுவிதமாக எண்ண முடியவில்லை. (அ.மாதவையா, குசிகர் குட்டிக் கதைகள், அவனாலான பரிகாரம், பக்.24–25) எனவும் எண்ணுகிறான். இளைய தலைமுறையினனான அவன் வரதட்சணை வாங்குவது பாவச் செயல் எனவும் அறநூல் கருத்திற்கு மாறானது எனவும் கருதுகிறான். மேலும் இளைஞனான அவன், வரதட்சணை வாங்காமல் மணம் செய்து கொள்வதாகத் தன் நண்பர்கள் சிலருடன் சேர்ந்து உறுதி மேற்கொண்டுள்ளான். அத்தகைய புதிய சிந்தனைகள் உள்ள ஒருவனின் திருமணம் அவன் அறியாமலே வணிகமானதை அறிந்து துயர் உற்று, அத்தவற்றிற்குப் பரிகாரம் செய்ய முற்படுகிறான் என இக்கதை காட்டுகிறது. "அவன் தகப்பனார் குடித்தனத்தைப் பாழாக்கிய பின்னோ, நான் முதல் முதல் என் மனைவியுடன் இல்லறம் நடத்தி வாழ வேண்டும்" (அ. மாதவையா, குசிகர் குட்டிக் கதைகள், அவனாலான பரிகாரம், ப. 24) என்று சாமிநாதன் தன் தந்தைக்கு எழுதும் மடலில், வரதட்சணை வாங்குவது பாவச் செயல் – பெண் வீட்டாரை அல்லல்படுத்திப் பணம் பெற்று மகிழ்ச்சியடையும்

மாப்பிள்ளை வீட்டார் செயல் அறக்கேடான செயல் - என அறுதியிடுகிறான். இளைய தலைமுறையினர் மூலம் சமூக மாற்றம் வர வேண்டும் என்ற அ. மாதவையாவின் நிலைப்பாடு இச்சிறுகதையில் சாமிநாதன் மூலம் வெளிப்படுகிறது.

'வரன் தேடும் வைபவம்' என்னும் சிறுகதையில் தன் பெண்ணுக்கு மிகுந்த சீர் கொடுக்க முன்வரும் வழக்கமும் அது தொடர்பான மூடப் பழக்கங்களும் காட்டப்படுகின்றன. 'அது நேர்ந்த விதம்' என்னும் கதை யில் பிள்ளை வீட்டாருக்கு மிகுதியான வரதட்சணையைத் தர முடியாது தன் பெற்றோர் துன்புறுவது கண்டு சுந்தரி கிணற்றில் விழுந்து தற்கொலை செய்து கொள்வதாக அ. மாதவையா காட்டியுள்ளார். 'கமலத்தின் கல்யாணம்', 'விவாக ஸம்ஸ்காரம்' ஆகிய இரு சிறுகதைகளிலும் மிகுதியான வரதட்சணைப் பணமும் சீரும் கிடைக்கிறது என்று கருதி, அழகு அற்ற பெண்ணைத் தன்னுடைய அழகும் கல்வி அறிவும் மிக்க மகனுக்கு மண முடிக்கும் மாப்பிள்ளைப் பையனின் தந்தையின் பேராசையை ஆசிரியர் காட்டுகிறார். தங்கள் பிள்ளைகளின் எதிர்காலம் பாழாவதைப் பற்றிக் கூடக் கவலைப்படாமல், பணம் ஒன்றே குறிக்கோளாகக் கொண்ட பேராசை இக்கதைகளில் காட்டப்படுகிறது. 'விவாக ஸம்ஸ்காரம்' சிறுகதையில், நிறையப் பணம் வரதட்சணை தருகிறார் பெண்ணின் தந்தை என்பதற்காக, முதலில் பேசிய பெண்ணை மறுக்கும் தன் தந்தையின் செயல் முறையற்றது என்று மாப்பிள்ளைப் பையன் மறுக்கிறான் : "அப்பா என்ன ஏழையா? அம்மா? இந்தப் பணத்துக்காக ஒரு ஏழைப் பிராமணரிடம் சொன்ன வாக்கைத் தவறுவதா? நம்ம சொத்து ரூ. 5000 ஆவது பெறும்; நான் ஒரு பிள்ளை தானே. நானும் இனிமேல் சம்பாதிக்க மாட்டேனா?.... இன்னொருவர் அதிகப் பணம் தருகிறாரென்று, அவரிடம் நாம் சொன்ன சொல் தவறி, வாக்கு மீறி நடப்பது அழகல்ல" (அ.மாதவையா, குசிகர் குட்டிக் கதைகள், 'விவாக ஸம்ஸ்காரம்', ப. 184) என்று அவன் தன் தாயிடம் கூறுகிறான். தன்னைக் கூடுதல் விலைக்குத் தன் தந்தை பெண் வீட்டாரிடம் விற்றுவிட்டதாகவும் தான் அடிமை ஆகிவிட்டதாகவும் தன் மாமனார் தனக்குக் கையில் போட்ட தங்கக்காப்பு விலங்காக மாறி விட்டதாகவும் அவன் உணர்கிறான் : "அவன் மாமனார் போட்ட தங்கக் காப்பு, வழக்கமில்லாததால் அவனுக்குக் கை கனத்தை, தன் வாழ்நாள் முழுவதும் இப்படிப்பட்ட மனைவியுடன் பயனிலதாய்க் கழிக்கும்படித் தான் அடிமை போல் விற்கப்பட்டதற்கு அறிகுறியான விலங்குகள் என்று நினைத்துக் கசந்து கொண்டான்' (அ. மாதவையா, குசிகர் குட்டிக் கதைகள், 'விவாக ஸம்ஸ்காரம்', ப. 192) என்று வருமிடம் இதை உணர்த்தும். ஆனாலும்,

தந்தையை எதிர்த்துச் செயற்படாதவனாக - அந்த அடிமைத்தனத்தை ஏற்றுக் கொள்வதை - ஆசிரியர் இக்கதையில் காட்டியுள்ளார்.

படித்த இளைஞர்கள், வரதட்சணை வழக்கத்திற்கு எதிராக, வரதட்சணை வாங்காமல் மனஞ்செய்ய முன் வர வேண்டும் என்பதை அ. மாதவையா தீர்வாகக் காட்டுகிறார். தனக்குத் தெரியாமல், பெண் வீட்டாரிடம் தன் தந்தை பெற்ற வரதட்சணை பணத்தைத் தான் திருப்பித் தரும் வரை தனக்குச் சுதந்திரம் இல்லை என்று மாப்பிள்ளை சாமிநாதன் கூறுவதாக 'அவனாலான பரிகாரம்' சிறுகதையில் ஆசிரியர் கூறுவது இதனை வலியுறுத்தும் : "நானும் ஒரு ஆண் பிள்ளையானால், இந்தப் பணத்தை, ஆம் எல்லாப் பணத்தையுமே உன் தகப்பனாருக்குத் திருப்பிக் கொடுக்கும்படி செய்வேன். இல்லாவிட்டால், நானாவது எப்படியாவது வேலைசெய்து, உழைத்து, அவருக்கு இந்தப் பணத்தைத் திருப்பிக் கொடுக்கும் வரை என்னையொரு அடிமை போன்றே பாவித்து நடந்து கொள்வேன்.... இந்தப் பரிகாரத்தைக்கூட நான் செய்யாவிட்டால் நான் ஒரு ஆண் பிள்ளையல்ல; என் படிப்பும் வீணே" (அ. மாதவையா, குசிகர் குட்டிக் கதைகள், 'அவனாலான பரிகாரம்', ப. 21) என்று தன் மனைவியிடம் அவன் கூறுகிறன். "அந்தப் பணத்தை எப்படியாவது அவருக்குத் திருப்பிக் கொடுத்தால் ஒழிய, நான் என்னைச் சுதந்திரவாளியாகப் பாவிக்க முடியவில்லை. தாங்கள் என் அடிமைத்தனத்தை நீக்க மறுத்துவிட்டபடியால், நானே என்னை மீட்டுக் கொள்ள வேண்டியதாயிருக்கிறது.... என் மாமனாருக்கு மாதா மாதம் ரூ. 75-ஆவது அனுப்ப முடியும் என்று நினைக்கிறேன்" (அ. மாதவையா, குசிகர் குட்டிக் கதைகள், 'அவனாலான பரிகாரம்', ப. 25) என்று அவன் தன் தந்தைக்கும் தன் உறுதியை எழுதுகிறான். இத்தீர்வே இளைய தலை முறையினரிடம் அ. மாதவையா எதிர்பார்த்தது.

**பெண்ணுரிமையின் உச்சநிலை**

பெண் உரிமைகள் பெற்று, அடிமைத்தனங்கள் நீங்கி, ஆணுக்கு இணையாகச் சரிநிகராக - ஒருபடித்தாக - வாழ வேண்டும் என்று நோக்கில் நாவல், சிறுகதை, கவிதை, கட்டுரை படைத்த அ. மாதவையா, பெண்ணுரிமைச் சிந்தனையின் உச்சநிலை வெளிப்பாடாகத் 'திரௌபதி கனவு' என்னும் ஒரு சிறுகதையைப் படைத்துள்ளார். இது உயர்கற்பனை (Utopian) வகையில் அமைந்து உள்ளது. பெண் விடுதலை, பெண்ணுரிமைச் சிந்தனைகளை மிகுந்த தீவிரத்துடன் இச் சிறுகதையில் அவர் படைத்துள்ளார். வ.ரா. படைத்த கோதைத்தீவு (1945) என்னும் உயர்கற்பனை நாவலுக்கு (Utopian Novel) முன்னோடியாகவும் முன் மாதிரியாகவும் திரௌபதி கனவு உள்ளது. பெண்ணுரிமைச் சிந்தனை-களைத் தீவிரத்துடன் கோதைத்தீவு நாவலில் வ.ரா. படைக்க,

அ.மாதவையாவின் திரௌபதி கனவு சிறுகதையே முன்மாதிரியாகும். திரௌபதி கனவு காண்பது, புதிய நகரம் ஒன்றிற்கு அவள் செல்வது, அங்குப் பெண்ணாதிக்கம் நிலை பெற்றுள்ளது, பெண்களால் எழுதப்பட்ட தர்மசாத்திர நூல்கள் அங்கு நடைமுறையில் உள்ளது என்ற அனைத்துக் கருத்துக்களும் வ.ரா. அவர்களின் கோதைத்தீவு உருவாக்கத்திற்கு முன்மாதிரியாக உள்ளன. திரௌபதி கனவு சிறுகதையில், திரௌபதி கனவில் கண்ட அந்த நகரில் பெண்கள் உலகம் நடக்கிறது. இதனை, அந்நகரப் பெண், "தாங்கள் ஆண் உலகத்தில் இருந்து வருகிறீர்களோ.... இது லோகம் ஒன்றுமில்லை. இது பெண் நாடு; இங்கே உள்ள சட்டங்களும் நடவடிக்கைகளும் உங்கள் ஊராகிய ஆண் நாட்டிற்போலிரா; வேறு மாதிரி இருக்கும்" (அ. மாதவையா, குசிகர் குட்டிக் கதைகள், 'திரௌபதி கனவு', ப. 30) என்று கூறுகிற பதில் இதைக் காட்டும். அந்த நகரில், பெண்கள் எத்தனை முறை வேண்டுமானாலும் ஆடவர்களை மணக்கலாம்; பிடிக்காவிட்டால், ஆண் குழந்தைகளுடன் கணவனை விலக்கி வைத்து விடலாம்; பெண் மணப்பது 'ஆண் கொள்வது' என்று அங்கு அழைக்கப்படுகிறது. பெண்ணியமொழி ஆக்கம் (Feminist Language) என்னும் நோக்கில், அ. மாதவையா சிந்தித்து சாதனை புரிந்துள்ளமைக்கு இது சான்று. "இந்த நாட்டிலே 'பெண்கள் வாழ்கைப்படுவது' என்று சொல்வதில்லை. 'ஆண் கொள்ளல்' என்று சொல்வதுதான் வழக்கம்" (அ. மாதவையா, திரௌபதி கனவு, ப. 30) என்ற இடம் இதைக் காட்டும். பெண் குழந்தை பிறப்பதே அந்நாட்டில் போற்றப்படுகிறது. பெண் பிறக்கவில்லை என்பதற்காக, ஒரு பெண் எத்தனை முறை வேண்டுமாயிலும் எத்தனை ஆண்களை வேணுமாயினும் ஆண் கொள்ளலாம். தாயின் சொத்தையெல்லாம் கட்டியாளப் பெண் குழந்தைகளுக்கு மட்டுமே அந்த நாட்டில் உரிமை உள்ளது. 'பெண்கள் மட்டுந்தான் சொத்துக்கு உரியவர்' (ப. 31) என்று வருமிடம் இதைக் காட்டும். பெண்ணுக்கும் வீட்டிற்கும் உரிய பணிகளைச் செய்து, குழந்தைகளைப் பார்த்து, மனைவி எதிரில் மரியாதையுடன் நின்றபடி இருக்கிறான், கணவன். அந்த நாட்டில், மனைவியை இழந்த ஆண் விதவைகள் உள்ளனர். அவர்களுக்கு மறுமண உரிமை அங்குக் கிடையாது. கரடி போல முடிவளர்த்து, அழகற்றவர்களாக வீட்டினுள் அடைந்து இருப்பார். 'ஆண் விதவைகள் மங்கல காரியங்கள் ஒன்றுக்கும் ஆகாதவர்களாக, யாவராலும் கரிக்கப்படுகிறார்கள். ஏதாவது நற்காரியமாக ஸ்திரீகள் புறப்படும்போது, அவர் எதிர்ப்படுவதை அறிந்து விலகிக் கொள்ளும்படி அவர்களுக்குக் கழுத்தில் மணிகட்டி வைத்திருக்கிறது' (ப. 32) அந்த நாட்டுப் பழமையான சாத்திர விதிப்படி, ஆண் விதவை மறுமணம் செய்து கொள்ள முடியாது. அந்த நாட்டிலுள்ள ஆசாரச் சீர்திருத்த கட்சியினர், இளம்வயது ஆண் விதவையினர்

மட்டுமாவது மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்பட வேண்டும் என்று பெண்கள் தீர்மானஞ் செய்தும் வைதீகமான பழமையானவர் பிடிவாதமாகக் குருட்டுத்தனமாக உள்ளனர் எனவும் கல்வியறிவு பரவப்பரவ நாளடைவில் சீராகும் எனவும் பெண் கூறுவதாக அ. மாதவையா காட்டுகிறார்.

ஆண் விதவையர் அந்நாட்டில், மனைவி இறந்ததும் உடன்கட்டை ஏறவே விழைய, ஆசார சீர்திருத்த கட்சிப் பெண்களே உடன்கட்டை ஏறும் வழக்கத்தைத் தடைசெய்து உள்ளனர். ஆயினும் ஆண்கள் தற்கொலை செய்து கொள்கின்றனர். காலங்காலமாக, கல்வி அறிவின்றி, வீட்டிற்குள்ளேயே அடைந்து கிடந்து வருவதால் அறியாமையில், ஆண்கள் ஆழ்ந்து கிடக்கின்றனர். கல்வியறிவு தர முயற்சி நடக்கிறது. ஆயினும் ஆண்கள், தங்கள் நன்மைக்குத் தாங்களே தடையாக உள்ளனர். இதைப் போக்க, ஆசாரச் சீர்திருத்தக் கட்சியினர் பெண்கள் - முயன்று வருகின்றனர் என்று கதை கூறுகிறது.

இன்றைய, பெண்ணிய நோக்கில் எழுதப்பட்ட கதை போலத் தோன்றும் இந்த வலிமை வாய்ந்த கதையை உயர் கற்பனையாக ஆசிரியர் படைத்துள்ளார். எனினும், ஆணாதிக்க மனநிலைக்கு ஒரு எச்சரிக்கையாக, பெண்ணாதிக்கம் வந்தால் எப்படி இருக்கும் என்பதை வலியுறுத்தவே அவர் இதைப் படைத்துள்ளார். காலங்காலமாக, அறியாமையில் உள்ளவர்கள், கல்வி கற்றுச் சரிசமமாக இருக்க வேண்டும் என்பதே அவர் விருப்பம். தடைகளாக உள்ள சீர்கேடுகள் நீங்கிச் சரிநிகர் சமானமாக இருகண்களாக, வண்டியில் பூட்டப்பட்ட இரு எருதுகளாக இணைந்து செல்ல வேண்டும் என்று அவரே. 'பெண் கல்வி' என்னும் கட்டுரையில் கூறுவது போல வாழ வேண்டும். பெண் கல்வி பெருகினால், அடிமைத்தனம் மறையும் என்கிறார்; இளமை மணம் நீங்கப் பெண்ணுக்கு மணவயது உயர்த்தப்பட வேண்டும் என்கிறார்; விதவை மறுமணம் வேண்டும் என்று வலியுறுத்துகிறார்; வரதட்சணை முறையை ஒழிக்க இளைஞர் சமூகம் முன்வர வேண்டும் எனவும் அடிமை செய்யும் வழக்கமாக மணம் உள்ளது என்று பெண் அதை எதிர்க்க வேண்டும எனவும் அ. மாதவையா வலியுறுத்துகிறார். காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவுபடும் காதல் மணத்தை அவர் வலியுறுத்துகிறார். பெண்ணுக்குச் சொத்துரிமை பற்றி மிகத் துணிவாக அந்நாட்களிலே அவர் முன்னோடியாகக் கூறியுள்ளார். பெண்ணியமொழி ஆக்கம் என்னும் கோட்பாட்டையும் செயற்படுத்தியுள்ளார். ஆணாதிக்க மனப்போக்கிற்கு எதிராக - மாற்றாக - பெண்களால், பெண்களின் நலன்களை முதன்மைப்படுத்திக் கூறும் அறநூல்கள் - தர்மசாத்திர நூல்கள் ஆக்கம் தோன்ற வேண்டும் என்ற சிந்தனை அ மாதவையாவிடம் அந்த

நாட்களிலே காணப்படுவது பெரும் முற்போக்கானதும் தீவிரமானதுமாகும். பெண்ணிய இலக்கியம் பெண்களால் ஆக்கப்பட வேண்டும் என்ற அவருடைய இச்சிந்தனை அவரைச் சாதனையாள ராகவும் தொலை நோக்குடையவராகவும் காட்டுகின்றது.

## இயல் – 7

# அ. மாதவையாவின் சாதனைகள்

அ. மாதவையா தமிழ் மொழியின் தொடக்ககால நாவலாசிரியர் என்று பரவலாக அறியப்பட்டுள்ளார். அவருடைய நாவல்களைத் திறனாய்ந்த அளவிற்கு, அவருடைய பிற படைப்புக்களான சிறுகதை, கவிதை, நாடகம், கட்டுரை, சிறுவர் நூல்கள், பத்திரிகைப் பங்களிப்பு என்பன மதிப்பிடப்படவில்லை. சிறுகதை வரலாறு, திறனாய்வு என்று எழுதியவர்கள் பலரும் அவருடைய குசிகர் குட்டிக்கதைகள் தொகுப்பை மட்டும் மதிப்பிட்டுள்ளனரே அன்றி இதழ்களில் மட்டும் வெளிவந்து, நூல் வடிவம் பெறாத சிறுகதைகளை விரிவாக விமர்சனத்திற்கு உட்படுத்தவில்லை. எந்தப் படைப்பாக இருப்பினும் சமூகச் சீர்திருத்தம், பெண்ணுரிமை, தமிழ் மொழி மேன்மை, தேசிய உணர்ச்சி என்னும் அவருடைய கருத்தாக்கங்கள் முதன்மை பெற்றுள்ளன; நடப்பியல் நெறி படைப்பாளராக அவர் விளங்குகிறார்; எள்ளல் நடையை ஆண்டுள்ளார். அ. மாதவையாவின் பணிகளும் சாதனைகளும் முழுமையாக உணரப்படவோ போற்றப்படவோயில்லை.

நாவல் வகையில் அ. மாதவையா நடப்பியல் நெறியாளராக உள்ளார். தம்முடைய காலச் சமூகச் சீர்கேடுகளை மிகத் தீவிரமாகக் கண்டித்து, சீர்திருத்தங்களைத் தம் நாவல்களில் முன்வைத்துள்ளார். ஆசிரியர் எடுத்துரைத்தலும் உரையாடலும் நாடகமாகக் காட்சிப்படுத்தலுமாக அவர் நாவல் அமைப்பை ஆண்டுள்ளார். நாவலை மிக்க பொறுப்பு உணர்வுடன் நடப்பியல் நெறியில் தந்துள்ளார். எள்ளல் நடையை மிக அருமையாகவும் நுட்பமாகவும் அவர் கையாண்டுள்ளார். இந்த எள்ளல் பாங்கு, பின்னாளில் புதுமைப்பித்தனால் பெரிதும் பின்பற்றப்பட்டது. தம்முடைய நாவல் தளத்தை அகவயநிலையிலிருந்து புறவயநிலைக்கு விஜயமார்த்தாண்டம் நாவலில் மாற்றியுள்ளார். அக்காலச் சமூகநிலை, கிறித்தவ மதமாற்றம், ஆங்கிலக்கல்வி - ஐரோப்பியப் பண்பாட்டால் ஏற்பட்ட பண்பாட்டு மாற்றங்கள் ஆகியவற்றை எடுத்துக்கூறும் ஆவணங்களாக அவர் படைப்புக்கள் உள்ளன. முத்து மீனாட்சி நாவல் தமிழ்ச் சமூக நாவல் வரலாற்றில் அரிய சாதனை. அந்த நாட்களில் விதவை மறுமணம்

நிகழ்ந்ததாகக் காட்டி, அதற்கு எதிரான சமூகத்தடை பற்றி அஞ்சாமல் துணிந்து எதிர் கொள்ளும் கதைமாந்தர்களை அவர் படைத்தது பெருஞ்சாதனையாகும். பெண் கல்வியை வலியுறுத்தி அவர் எழுதிய துடன் இளமை மண எதிர்ப்பு, விதவை மறுமணம், காதல் மணம் ஆகியவற்றை முன் வைத்தார். பெண்களின் மணவயதை உயர்த்தல், வயது வந்தபின் மணஞ்செய்தல், வரதட்சணை ஒழிப்பு, பெண்ணுக்குச் சொத்தில் பங்கு என்பன அவர் முன் வைத்த பெண்ணுரிமையை முதன்மைப்படுத்திய சீர்திருத்த எண்ணங்கள். இந்தப் புரட்சிகரமான சிந்தனைகளை, சமூகச் சீர்திருத்தவாதிகள், அரசியல்வாதிகள் பலருக்கும் காலத்தால் முன்னதாக, முதன்முதலில் அ. மாதவையா கூறியுள்ளார். காலத்திற்கு ஒவ்வாத, சமூகப் பழக்கவழக்கங்களையும் மூடத்தனமான நம்பிக்கைகளையும் அடியோடு வேரறுக்கவும் தேவையான, புதிய பண்பாட்டு மரபுகளை முன்னின்று மனமார ஏற்கவும் அவர் வலியுறுத்தினார். தம்முடைய சொந்த இனமான அந்தணர் சமூகம், சாதியமைப்பில் மேற்படியில் இருந்து கொண்டு ஆசாரச் சீர்திருத்தங்களுக்கு உட்படாமல், பழமைப் போக்கில் இருந்து கொண்டு, கீழ் நிலையில் உள்ள ஒடுக்கப்பட்ட இனத்தாரையும் பெண்களையும் அடக்கி அதிகாரஞ் செய்து கொடுமைப்படுத்தும் போக்கை மிகக் கடுமையாக அவர் தொடர்ந்து கண்டித்தார். "நம்முடைய நாகரீகங்களுக்கெல்லாம் மூல ஸ்தானமாகிய பிராமணரது ஆசார அனுஷ்டானங்களைச் சீர்திருத்துவதே முதற்கடமை" (அ. மாதவையா, ஆசாரச் சீர்திருத்தம், ப. 3) என்று அவர் எழுதியது அவருடைய தீவிரநிலைப்பாட்டையும் நடுநிலையான சிந்தனையையும் காட்டும். இவ்வளவு தீவிரமாகத் தம் சொந்த இனத்தை விமரிசனஞ் செய்த பாங்கு பெருஞ்சாதனையாகும்.

பெண்கள் உரிமை பெற்றுச் சரிநிகர் சமானமாக வாழ வேண்டும் எனத் தொடர்ந்து எழுதினார். பெண்களுக்கு உரிமை நல்காமல் அவர்களை அடிமைகளாகவும் தங்களின் சங்கம சொத்தாக உடைமைப் பொருளாக - ஆண்கள் கருதி நடத்துவதையும் அவர் வன்மையாகக் கண்டித்துள்ளார். வீட்டில் சமையல் செய்யவும் இன்ப நுகர்விற்காகவும் பெண்களை வைத்து இருப்பதை அவர் ஏற்கவில்லை : இதனைப் "பிள்ளை பெறுவதையும் மடைத்தொழிலையும் தவிர வேறொன்றுக்குமே யோக்கியதையில்லாமல் பெண்களை முழு மூடர்களாக வைத்திருப்பதினால்தான் இப்படியாகிறது" (அ. மாதவையா, பத்மாவதி சரித்திரம், ப. 285) என்று அவர் அந்நாளிலே கூறியிருப்பது பெருஞ்சாதனையாகும். பெண்ணிய நோக்கில், 'திரௌபதி கனவு' என்னும் உயர்கற்பனைச் (Utopian) சிறுகதை ஒன்றை அவர் படைத்துள்ளார். இது, பிற்காலத்தில் வ.ரா.வின் 'கோதைத் தீவு' என்னும்

உயர் கற்பனை நாவல் உருவாக முன்மாதிரியாக அமைந்தது. அக்கதையில், மாதவையா, பெண்ணிய மொழி உருவாக்கம் பற்றிச் சிந்தித்துள்ளதும், பெண்களின் ஆட்சி நடக்கும் அந்த நாட்டில் அறநூல்கள் பெண்களால், பெண்களுக்காக எழுதப்பட்டு நடைமுறையில் இருப்பதாகக் கூறும் பெண்ணிய இலக்கிய ஆக்கம் பற்றிய சிந்தனையும் அவரை மிகப் பெருஞ்சாதனையாளராகக் காட்டுகிறது.

சிறுகதை படைப்பிலும் அவருடைய 'கண்ணன் பெருந்தூது' சாதனையாக உள்ளது. புதுமைப்பித்தனால் வடிவச் செம்மையுடைய கதை எனவும், தமிழ்ச் சிறுகதையின் உயர் இலட்சியம் எனவும் பாராட்டப்பட்ட கதை அது. மிக நுட்பமாகக் கதை சொல்லும் ஆற்றலில் வல்ல அச்சிறுகதையில் ஒடுக்கப்பட்ட இனத்து மனிதனான வழிப்போக்கன், தன்னைப் பழித்துப் பேசும் உயர் சாதிப் பெண்மணியிடம் எதிர்த்து நிற்கும் துணிவுடையவனாக அ. மாதவையா காட்டியுள்ளது, அன்றைய சூழலில் சாதனையாகும்.

கட்டுரையாளர் என்னும் நிலையிலும் அவர் பல சாதனைகளை ஆற்றியுள்ளார். தில்லைக் கோவிந்தன் கலவை, ஆசாரச் சீர்திருத்தம், பெண் கல்வி, மாதங்கி என்பன போன்ற நூல்கள், கட்டுரைகள் சமூக மறுமலர்ச்சி, சீர்திருத்தச் சிந்தனையாளராக அவரை இனங்காட்டும். அத்துடன் புதிய துறைகளை ஆய்வு செய்யும் மரபை முதனிலையில் அவர் இனங்காட்டியுள்ளார். நாடக ஆக்கத்திலும் இவ்வாறே, ஷேக்ஸ்பியரின் 'ஒத்தெல்லோ' நாடகத்தை மொழி பெயர்ப்பாகவும், மொழியாக்கமாகவும் செய்து, பின்வந்தோருக்கு அவர் வழிகாட்டியுள்ளார். எட்வின் ஆர்னால்டின் The Light of Asia நூலை, ஆசிய சோதி என்னும் பெயரில், 1918-ஆம் ஆண்டிலே மொழியாக்கக் கவிதை நூலாகச் செய்து, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் நூலிற்கு முன்மாதிரியாக இருந்துள்ளார். கவிதைகளில், நாட்டுப்புற இசைப்பாடல் மரபில் நிறைய இசைப்பாடல்களை அவர் பாடியுள்ளார். அப்பாடல்களில் சமூகச் சீர்திருத்தக் கருத்துக்களையே அவர் பாடியுள்ளார். ஆங்கில வாசகர்களுக்காகவும் கல்வியாளர்களுக்காகவும் ஆங்கிலத்தில் எழுதிய நந்தன், மணிமேகலை நூல்களிலும் சாதிக் கொடுமைகளைக் கண்டித்து எழுதியுள்ளார். சமூகச் சீர்திருத்தம் என்னும் உள்ளடக்கத்திற்கே முதன்மை தந்துள்ளார் என அறியலாம்.

'தமிழர் நேசன்', 'பஞ்சாமிர்தம்' இரு இதழ்களும் அவரை உயர்ந்த இதழாசிரியராகக் காட்டி நிற்கின்றன. கனமான உள்ளடக்கங்களையுடைய செய்திகளுக்கே அவ்விதழ்களில் அவர் இடங்கொடுத்தார். அறிவியல் கட்டுரைகளையும் பல்வேறு அறிவியல் துறைகளுக்குரிய கலைச்சொற்களையும் ஒருங்கு திரட்டி, தமிழில் அவர் 1917-ஆம் ஆண்டு

முதல் தொடர்ந்து கொடுத்துள்ளார். தமிழை நவீனப்படுத்தி, அறிவியல் துறை ஆக்கங்களைத் தமிழில் வெளியிடுவதற்கு என்றே, தமிழர்நேசன் இதழை அவர் நடத்தினார். இதற்காகவே 'தமிழர் கல்விச் சங்கம்' என்னும் அமைப்பை உருவாக்கி அதன் வழி இவ்விதழை அவர் கொண்டு வந்தார். தமிழின் மேன்மை, தமிழை வளம்படுத்துவதிலும் அறிவியல் நூல்களைத் தமிழில் ஆக்குவதிலும் அதற்கான அடிப்படைப் பணியாகக் கலைச்சொற்களைத்தமிழில் உருவாக்குவதிலும் உள்ளது என்று சரியாகத் திட்டமிட்டு அ. மாதவையா அந்நாட்களிலே செயற்பட்டுள்ளார். அவருடைய இந்த அளப்பரிய சாதனை தமிழ் வரலாற்றில் சரியாகக் கவனிக்கவோ போற்றவோபடவில்லை. மிகவும் பழங்காலத்திலே, ஆரவாரமின்றி, அ. மாதவையா ஆக்கபூர்வமாகச் செயற்பட்டு, தமிழ் வளர்ச்சிக்கு மெய்யாகப் பணியாற்றியுள்ளார். இதனுடைய தொடர்ச்சியாகத்தான், 'பயன்தரு நூல்களெல்லாம் பேறுபெறும்படி நம்மொழி தன்னிலும் போர்த்திடுவீர், தமிழ் போற்றிடுவீர்' (அ. மாதவையா, இந்தியக்கும்மி, பொது தர்ம சத்கீத மஞ்சரி, பாடல் 47, ப. 23) என்று அவர் பாடினார். அத்துடன், 'பட்ட வகுப்பு வரை தமிழைக் கட்டாயப் பாடமாகப் பயிற்றுவிக்க வேண்டும்' என்று 1925-ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக்கழக ஆட்சிப் பேரவைக் கூட்டத்தில் அவர் உரையாற்றினார். அ. மாதவையாவின் தமிழ் வளர்ச்சிக்கான ஆக்கப் பணிகள் என்பன அளப்பரிய சாதனைகளாகும்.

சித்தார்த்தன் என்னும் உரைநடை நூலை வடமொழிச் சொற்களே கலவாத தூய நடையில் தனித்தமிழில் அவர் எழுதினார். இந்த நூலைத் தனித்தமிழில் எழுதியுள்ளதாக அவர் முன்னுரையில் கூறுகிறார். ".... வடமொழிச் சொற்களே கலவாத நூலொன்றும் தமிழில் இதுகாறும் யானறிந்தவரை இல்லாமையையும் அத்தகைய நூல் தமிழ் மாணவருக்குப் பேருதவியாகும் என்பதையும் நினைத்து, கூடியவரை, இந்நூலைத் தனித்தமிழில் இயற்றியிருக்கிறேன். இதனால், சில சொற்றொடர்கள் காதுக்கு இனிமையில்லாதன போல ஒலிக்கலாம்; புதுமையினால் தோன்றும் இவ்வோசைக்குறை நாளடைவில் நீங்கிவிடுமென்று நம்புகிறேன்" (அ. மாதவையா, சித்தார்த்தன், முன்னுரை, ப. vii) என்று அவர் எழுதியுள்ளார். 1918-ஆம் ஆண்டிலேயே, 'வடசொற் கலவாத தமிழ் நடை தனித்தமிழ்' என்று அவர் எழுதியுள்ளது போற்றற்குரிய சாதனையாகும்.

அ. மாதவையாவின் படைப்புக்கள் பல்வேறு இலக்கிய வகைகளாக மலர்ந்து உள்ளன. அனைத்து வகைகளிலும் அவர் வெவ்வேறு தன்மை-களில் சாதனைகள் புரிந்துள்ளார். அவருடைய படைப்புக்கள் நூல்களாக வந்தவை தவிர, இன்னமும் தொகுப்புக்களாக வரவேண்டியவை

மிகுதியும் உள்ளன. சமூகச் சீர்திருத்தம், சமூக மேன்மை, தனி மனித ஒழுக்க மேம்பாடு, பெண்ணுரிமை, தமிழ் மொழி மேன்மை, தேசிய உணர்ச்சி என்னும் கருத்தாக்கங்களை உள்ளடக்கமாகக் கொண்டு பல்வேறு இலக்கிய வகைகளை மிகுந்த பொறுப்புணர்ச்சியுடனும் தீவிரமான நிலைப்பாட்டுடனும் அவர் எழுதினார். அவருடைய அளப்பரிய சாதனைகளுக்காக அ. மாதவையா என்றும் போற்றப்படுவார்.

பின்னிணைப்பு

துணைநூற்பட்டியல்

# அ. மாதவையாவின் படைப்புக்கள்

## I. தமிழ் நூல்கள்

### 1. நாவல்கள்

1. மாதவையா, அ., **பத்மாவதி சரித்திரம்,** சென்னை, வானவில் பிரசுரம், 1978 (மூன்று பாகங்களும் சேர்ந்த பதிப்பு)

2. மாதவையா, **அ., முத்துமீனாக்ஷி,** சென்னை, வானவில் பிரசுரம், 1981.

3. மாதவையா, அ., **விஜயமார்த்தாண்டம்**, முதற் பதிப்பு, சென்னை, ஸ்ரீநிவாஸ வரதாசாரியார் அண்டு கம்பெனி, 1903.

4. மாதவையா, அ., **தில்லைக் கோவிந்தன்**, நாராயணன், வே. (மொ.பெ.ஆ.) சென்னை, தினமணி காரியாலயம், 1944.

5. மாதவையா, அ., **கிளாரிந்தா**, சரோஜினி பாக்கியமுத்து (மொ.பெ.ஆ.), சென்னை, கிறித்தவ இலக்கியச் சங்கம், 1976.

6. மாதவையா, அ., **சத்தியானந்தன்**, சரோஜினி பாக்கியமுத்து (மொ.பெ.ஆ.), சென்னை, கிறித்தவ இலக்கியச் சங்கம், 1979.

### 2. சிறுகதைகள்

7. மாதவையா, அ., **குசிகர் குட்டிக் கதைகள்**, முதல் எட்டு, இரண்டாம் எட்டு, மூன்றாம் பாகம், சென்னை, ஆசிரியர் அச்சுப் பிரசுராலயம் - புஸ்தகசாலை, 1924.

### 3. நாடகம்

8. மாதவையா, அ., **உதயலன் என்னும் கொற்கைச் சிங்களவன்**, இரண்டாம் பதிப்பு, சென்னை, சுதேசமித்திரன் ஆபீஸ், 1916.

9. மாதவையா, அ., **திருமலை சேதுபதி**, சென்னை, ஸ்ரீநிவாஸ வரதாசாரி அண்டு கோ, 1910.

10. மாதவையா, அ., **பாரிஸ்டர் பஞ்சநதம்**, சென்னை, ஆசிரியர் அச்சுப் பிரசுராலயம், 1924.

11. மாதவையா, அ. **மணிமேகலை துறவு**, சென்னை, 1918.

12. மாதவையா, அ. **இராஜமார்த்தாண்டன்**, சென்னை, 1919.

**4. கவிதை (இசைப்பாட்டுக்கள் உள்பட)**

13. மாதவையா, அ., **பொதுதர்ம சத்கீத மஞ்சரி**, சென்னை, ஸ்ரீ நிவாஸ வரதாசாரி அண்டு கம்பெனி, 1914.

14. மாதவையா, அ. (இந்துதாஸன்), **புதுமாதிரி கல்யாணப்பாட்டு**, இரண்டாம் பதிப்பு, சென்னை, பஞ்சாமிர்தம் ஆபீசு, 1925.

15. மாதவையா, அ., **இந்திய தேசிய கீதங்கள்**, சென்னை, ஸ்ரீராமா பிரஸ், 1925.

**5. கட்டுரை (உரை நடை நூற்கள்)**

16. மாதவையா, அ., **ஆசாரச் சீர்திருத்தம்**, 1916, சென்னை.

17. மாதவையா, அ., **சித்தார்த்தன்**, சென்னை, சுதேசமித்திரன் ஆபீஸ், 1918.

18. மாதவையா, அ., **பால வினோதக் கதைகள்**, சென்னை, இந்தியன் பப்ளிஷிங் உறவுஸ், 1923.

19. மாதவையா, அ., **பால இராமாயணம்**, சென்னை, ஆசிரியர் அச்சுப் பிரசுராலயம், புஸ்தகசாலை.

20. மாதவையா, அ., **தக்ஷிண சரித்திர வீரர்கள்**, சென்னை, ஆசிரியர் அச்சுப் பிரசுராலயம், 1925.

21. மாதவையா, அ., **தளவாய் முதலியார் குடும்ப வரலாறு**, சென்னை, ஆசிரியர் அச்சுப் பிரசுரலாயம், 1925.

22. மாதவையா, அ., **குறள் நானூறு**, பிரான்சிஸ் கிங்ஸ்பெரி (இணை ஆசிரியர்), சென்னை, ஆசிரியர் அச்சுப்பிரசுராலயம், 1924 (தேர்ந்த 400 குறட்பாக்களுக்கு உரை)

**II ஆங்கில நூல்கள்**

1. Madhavaiah, A., Thillai Govindan, Madras, Srinivasa Varadachari & Co., 1903.

2. Madhavaiah, A., Satyananda, Bangalore, The Mysore Review, 1909.

3. Madhavaiah, A., Clarinda, Madras, The Cambridge Press, 1915.

4. Madhavaiah, A., Lient Panju, Madras, The Authors' Press & Publishing House, 1915.

5. Madhavaiah, A., Kusika's Short Stories, Two Volumes, Second Edition, Madras, The Authors' Press & Publishing House, 1924.

6. Madhavaiah, A., The Story of the Ramayana, Madras, The Macmillan & Co., 1914.

7. Madhavaiah, A., Manimekalai, Madras, The Indian Publishing House, 1923.

8. Madhavaiah, Nanda, Madras, The Indian Publishing House, 1923.

9. Madhavaiah, A., Markandeya, Madras, The Indian Publishing House, 1922.

**III. Short Stories Appeared in 'The Hindu'**

10. The Last Straw, 9-11-1923.

11. My Queer Sammandhi, 16.11.1923.

12. An Advertisement and its Sequal, 1-12-1923 & 8.12.1923.

13. The Cup of Iniquity, 22.12.1923.

14. Sundu and the Mill, 27.12.1923.

15. A Soul's Tragedy, 5.1.1924.

16. Alek BHOM, BHOM Alek, 16.1.1924.

17. A Vanishing Type, 16.2.1924.

18. If They But Knew, 23.2.1924.

19. Temptriarchy in Excelsis, 15.3.1924.

20. Ramesh The Dreamer, 22.3.1924.

21. Abdul's Stratagem, 3.5.1924.

22. A Day too Late, 17.5.1924.

23. Kuppan's Confession (4 Weeks) 4.6.1924, 14.6.1924, 21.6.1924 & 2.7.1924.

**IV. Poems and Articles appeared in The Christian College Magazine, Madras.**

1. To my Alma Mater, Poem, March 1892.

2. The Dying Wife to Her Husband, Poem, September 1894.

3. The Burning of Manmatha, Poem, September, 1894.

4. Loves Hope. Poem, September, 1895.

5. Neela, Monodrama, January 1896.

6. A wish for Age, Poem, March 1896.

7. Midnight Musings, Poem May 1897.

8. Scenes from the Kamba Ramayanam, May, 1900.

9. The Last Night together, poem, September, 1902.

10. The Repending Maid, December, 1902.

11. Thripuranthakam, February, 1903.

12. Love's Philosophy, poem, March 1904.

13. Mathangi - A curious Religious Institution, Article, December, 1905.

14. Thillai Govindan's Miscellany, Serial Article - (i) Women - The Two Ideals, (ii) Truthfulness, (iii) Caste, (iv) Patriotism (v) Religious Reform, July 1907.

15. Impatience, May, 1908.

16. A Retrospect, Poem, October, 1909.

17. A New Year Vow, Poem, 1910.

**V. பஞ்சாமிர்தம் இதழ்களில் வெளியான சிறுகதைகள்**

1. நிலவரி ஏலம், பக். 19 - 24, சித்திரை, 1924.

2. ஏணியேற்ற நிலையம், பக். 45-50, சித்திரை, 1925.

3. முருகன் ஆருடம், பக். 926-928, மாசி, 1924.

4. கண்ணன் பெருந்தூது, பக். 607-617, கார்த்திகை, 1925.

**VI. இதழ்கள்**

1. பஞ்சாமிர்தம் முழுவதும், சித்திரை, 1924 முதல் கார்த்திகை 1925 முடிய, 20 இதழ்கள்.

2. தமிழர்நேசன் முழுவதும் 1917 முதல் 1924 வரை 7 தொகுதிகள். ஒவ்வொரு தொகுதியும் சித்திரை முதல் பங்குனி முடிய.

(இவ்விதழ்களில் வந்த அ. மாதவையாவின் படைப்புக்கள் யாவும்)

**பிற நூல்கள் மற்றும் கட்டுரைகள்**

1. அப்புசாமி, பெ.நா., 'அ.மாதவையா', **குமரி மலர்**, இதழ் ஆறு, 1943, பக். 72-81.

2. அப்புசாமி, பெ.நா., 'குசிகர் குட்டிக் கதைகள்' **கலைமகள்**, டிசம்பர் 1972, பக். 686-688.

3. அப்புசாமி, பெ.நா., 'நாவலாசிரியர் அ. மாதவையா,' **கலைமகள்**, மார்ச் 1979, பக். 190-192.

4. இராமலிங்கம், மா., **விடுதலைக்கு முன் புதிய தமிழ்ச் சிறுகதை**, சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், 1977.

5. கைலாசபதி, க., **தமிழ் நாவல் இலக்கியம்**, சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், இரண்டாம் பதிப்பு, 1977.

6. சிவத்தம்பி, கா., **தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்**, சென்னை, பாரி நிலையம், 1967.

7. சிவசுப்பிரமணியன், ஆ., 'அ.மாதவையா ஓர் அறிமுகம்', **தாமரை**, பக். 57-67, ஜூலை, 1995.

8. சுசிலா, எம்.ஏ., **விடுதலைக்கு முன் தமிழ் நாவல்களில் பெண்கள்**, சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1995.

9. சுந்தரராஜன், பெ.கோ.(சிட்டி), சிவபாதசுந்தரம், சோ., **தமிழில் சிறுகதை வரலாறும் வளர்ச்சியும்**, சென்னை, க்ரியா, 1989.

10. சுப்பிரமணியன், க.நா., **முதல் ஐந்து தமிழ் நாவல்கள்**, சென்னை, அமுத நிலையம், 1957.

11. செல்லப்பா, சி.சு., **தமிழ் சிறுகதை பிறக்கிறது**, சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், 1974.

12. தண்டாயுதம், இரா., **தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள்**, சென்னை, தமிழ்ப்புத்தகாலயம், 1972.

13. தண்டாயுதம், இரா., **சமூக நாவல்கள்**, சு. வேங்கடராமன் (மொ.பெ.ஆ.), சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், 1979.

14. புதுமைப்பித்தன், **புதுமைப்பித்தன் கட்டுரைகள்**, சென்னை, ஸ்டார் பிரசுரம், இரண்டாம் பதிப்பு, 1956.

15. மணி, பெ.சு., **பாரதியாரும் தமிழ்ப் புலவர்களும்**, சென்னை, பூங்கொடி பதிப்பகம், 1981.

16. வீராசாமி, தா.வே., **தமிழில் சமூக நாவல்கள்**, சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், 1978.

17. வேங்கடராமன், சு., 'அ.மாதவையாவின் சிறுகதைகள்', **தமிழ்ச் சிறு-கதைகள் அன்றும் இன்றும்**, சென்னை, தாகம், 1993.

18. வேங்கடராமன், சு., 'அ.மாதவையாவின் சிறுகதைகள்', **நண்பர் வட்டம்**, ஆகஸ்ட், 1990, திருநெல்வேலி.

19. வேங்கடராமன், சு., 'அ. மாதவையாவின் அவனாலான பரிகாரம்', **தமிழ்ச் சிறுகதை நேற்றும் இன்றும்**, முதல் தொகுதி, சென்னை, ஐந்திணைப் பதிப்பகம், 1992.

20. ராஜ்கௌதமன், **அ. மாதவையா, 1872–1925, வாழ்வும் படைப்பும்,** பெங்களூர், காவ்யா, 1995.

21. ராஜ்கௌதமன் (புஷ்பராஜ், எஸ்), **அ. மாதவையாவின் சமூக நாவல்கள் ஓர் ஆய்நிலைப் பார்வை**, 1991, சென்னை, சென்னைப் பல்கலைக்கழகம் (அச்சில் வெளிவராத ஆய்வேடு)

22. லட்சுமி அம்மாள், 'அ. மாதவையா', **கலைக்களஞ்சியம் கட்டுரை, கலைக்களஞ்சியம்** - தொகுதி எட்டு, சென்னை, தமிழ் வளர்ச்சிக் கழகம், 1961.

23. Ramamurthy, K.S., Rise of Indian Novel in English, New Delhi, Sterling Publishers, 1987.

24. Krishnan, M., A. Madhavaiah, A Verified Factual Record, 1990, Madras (Unpublished)

******

**அ.மாதவையா** (1872-1925) தமிழின் தொடக்ககால நாவல், சிறுகதை ஆசிரியர். பல்வேறு படைப்பிலக்கியத் துறைகளிலும் முன்னோடியாகவும் சாதனையாளராகவும் அவர் விளங்கினார். நடப்பியல் நெறியாளராக அவர் விளங்கினார். சமுதாயச் சீர்திருத்தம சமூக மேன்மை, தனிமனித ஒழுக்க மேன்மை, பெண்ணுரிமை, தமிழ்மொழி மேன்மை, தேசிய உணர்ச்சி என்னும் கருத்தாக்கங்களை உள்ளடக்கங்களாகக் கொண்டு, பல்வேறு இலக்கிய வகைகளை மிகுந்த பொறுப்புணர்வுடனும் தீவிர நிலைப்பாட்டுடனும் எழுதியவர் அ.மாதவையா. விதவை மறுமணத்தை வலியுறுத்தி அவர் எழுதிய **முத்துமீனாட்சி** (1902) நாவல், இந்திய நாவல் வரலாற்றில் பெருஞ் சாதனையாகும்.

இந்நூலாசிரியர் டாக்டர் **சு.வேங்கடராமன்** மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் இக்காலத் தமிழ் இலக்கியத்துறையின் தலைவராகவும் பேராசிரியராகவும் பணிபுரிந்து வருகிறார். ‘அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு’, ‘புனைகதை இலக்கியம்’, ‘தமிழ்ச் சிறுகதைகள் அன்றும் இன்றும்’. ‘எண்பதுகளில் தமிழ்ப் புனைகதைகளில் பெண்ணியம்’, ‘அரையர் சேவை’ முதலிய 30 நூற்களைப் படைத்துள்ளார். சாகித்திய அக்காதெமிக்காக இந்திய இலக்கியச்சிற்பிகள் வரிசையில் வ.ரா.(வா.ராமசாமி) பற்றி ஒரு நூல் எழுதியுள்ளார்.

**A. Madavaiah (Tamil)**
ISBN-81-260-0628-5 **Rs.25**